4755

புகார்வணிகர்: தொல்.

பொ. ப்ஒ. 16

"...யதெல்லாம்"

ழும் புகார்வணிகர்,

"மஞ்சிகன்"

வை. சோ. ப. 96



## பதிகம்.



மங்கல வாழ்த்துப் பாடலுங் குரவர்
மனையறம் படுத்த காதையு நடநவின்
மங்கை மாதவி * யரங்கேற்று காதையு
மந்தி மாலைச் சிறப்புச்செய் காதையு
மிந்திர விழவூ ரெடுத்த காதையுங்
† கடலாடு காதையும், மடலவிழ்

கானல் வரியும் வேனில்வந் திறுத்தென
மாதவி யிரங்கிய காதையுந் தீதுடைக்
கனாத்திற முரைத்த காதையும் வினாத்திறத்து
நாடுகாண் காதையுங் காடுகாண் காதையும்
வேட்டுவ வரியுந் தோட்டலர் கோதையொடு
புறஞ்சேரி யிறுத்த காதையுங் கறங்கிசை
யூர்காண் காதையுஞ் சீர்சா னெங்கை
யடைக்கலக் காதையுங் கொலைக்களக் காதையு
மாய்ச்சியர் குரவையுந் தீத்திறங் கேட்ட
துன்ப மாலையு நண்பக னடுங்கிய
வூர்சூழ் வரியுஞ் சீர்சால் வேந்தனொடு
வழக்குரை காதையும் வஞ்சின மாலையு
மழற்படு காதையு மருந்தெய்வந் தோன்றிக்
கட்டுரை காதையு மட்டலர் கோதையர்
குன்றக் குரவையு மென்றிவை யனைத்துடன்
காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்
வாழ்த்து வரந்தரு காதையொ
டிவ்வா றைந்து
முரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு
ளுரைசா லடிக ளருள மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன், இது
பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென.

உலகத்துக் காப்பியஞ்செய்வோன் அறனும் பொருளும் இன்பமும் வீடும் கூறல்வேண்டுமன்றே ; இந்நாடகக்காப்பியத்தினுள் அறனும் பொருளும் இன்பமும் சிறிதாயினுங்கூறி வீடுகூறிற்றிலர் ; என்னையெனின், ‡ " யானறி

குவனது பட்டதென்று" உரைத்தசாத்தனர் நாற்பொருளும் பயப்பப் பெருங்காப்பியமாகச் செய்யக்கருதியிருக்கின்றார்க்கு, அடிகள், §"நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என உளப்பாட்டுத்தன்மையாற்கூறச் சாத்தனர் இவர் எனையிருவேந்தரையும் புகழ்ந்துரையாரென்பதுகருதி மூவேந்தர்க்கும் உரியதாகவின் ||"நீரே

* அரங்கேற்றுக்காதையெனவும் பாடம். § பதிகம் சுO.

† கடலாட்டுக்காதையெனவும் பாடம். || ,, சுஉ.

‡ பதிகம், கக.





யருளுக" என்று ஏகாரவினைப்பொருண்மையான அவர்கருத்துநிகழ்ச்சிவிளங்கு வான்கூற, அவர் அதனையேதுணிந்து தமது மூத்தமிழ்க்கல்வியும் வித்தகக்கவியும் காட்டுதற்குத் தாம் வகுத்துக்கொண்ட மூவகையுள்ளுறையின் வினைவுதோன்ற, மங்கலவாழ்த்துப்பாடல்முதல் வரந்தருகாதையிறுதி முப்பதுவகைத்தாகவரையறுத்து, அதனை அதிகாரமாகப்பொதிந்து முன்வைத்துப் பின்னர், அறனும் பொருளும் இன்பமுங்கூறி அடைக்கலக்காதையிறுதிக்கண், * "போதி யறவோன் றன்முன், மணிமேகலையை மாதவி யளிப்பவும்" எனக் கோவலன் முன்கண்டகனவின்கண் நிகழ்ந்ததை எதிர்காலநிமித்தமாக மாடலற்குக் கூறுதலானும், †"மாதவி ......மணிமேகலையை வான்றுயருறுக்கும், கணிகையர் நீர்ப்படையுள், தொழியெனக், கோதைத் தாமங் குழலொடு கோலங் காணு கொள்ளவும்" என்றலானும், வாழ்த்தின்கண்

கலைந்து, போதித் தானம் புரிந்தறங்
‡"மாதவி தன்றுறவுங் கேட்டாயோ
தோழி, மணிமே கலைதுறவுங் கேட்டாயோ தோழி" எனத் தேவந்திகூறுதலானும், வரந்தருகாதையில், § "மணிமே கலையார், யாதவ டுறத்தற் கேதுவீங் குரை" என ||"மையீ ரோதி" முதல ¶"போதித் தானம் புரிந்தறம் படுத்தனள்" என்பதிறு கப் பக்குவஞ்சொல்லி, ** "பருவ மன்றியும் பைந்தொடி நங்கை, திருவிழை கோல நீங்கினள்" என்றமையானும் மணிமேகலை துறந்தாளென்பதுணர்ந்து அத் துறவினைப் பின்வைத்து அதனோடு நாற்பொருளும்பூரித்துப் பெருங்காப்பியமாக முடித்தலைக்கருதி அடிகள் சாத்தனார்க்கு இவ்வுரையையுரைத்தழி, அவர் மணிமே கலைபெயரான் அவள்துறவே துறவாக அறனும்வீடும்பயப்ப தோர் காப்பியஞ்செய் தமைத்தனனெனக்கேட்டு, அவ்வடிகள் விரும்பி இவ்விரண்டினையும் ஒருகாப்பிய மாக்கி உலகின்கண் நடாத்துவான்வேண்டவும் இருவர்செய்தலின், இரண்டாக நடந்தனவென்க.

க - உ. குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்கு

[அடிகளென்றது, துறத்தலான். அத்துறவின்வரலாறு யாதோ வெனின், —
குமரியொடுவடவிமயத் தொருமொழிவைத் துலகாண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற் றேழ்பரி நெடுந்தேர்ச் சோழன் றன்மக ணற்சோணை யீன்ற மக்க ளிருவ ருண் முன்னோன் றன்னைப் பின்னரியற்றிப் பின்னோன் றன்னையும் பெருநாம் பாகென வன்னவர் தம்மொடு தென்னர் செம்பியர் தனடி போற்றத் தமனிய மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த பொங்கணை மீமிசை யுவரித் திரையிற் கவரி யிரட்ட வேந்த ளிருந்தழிச் சார்ந்த நிமித்திக னடிமுதன் முடிவரை நெடிது நோக்கி யின்றேன் கழியப்

பொன்றிக ழுலகஞ் சோதி நீயெனச் சேரலற் குரைத்தவன்
மைந்தனை நோக்கி நந்தாச் செங்கோ லந்தமி லின்பத் தரசா
ளுரிமை யிளையோற் குண்டென வுளைவ னன்வெகுண் டழுக்காற்
றொழுக்கத் திழுக்கு நெஞ்சினன் கண்ணெரி தவழ வண்ணலை
நோக்குங் கொங்கவிழ் நறுந்தார்க் கொடித்தோத் தானைச்
செங்குட் டுவன்றன் செல்ல னீங்கப் பகல்செல் வாயிற் படியோர்
தம் மு ______________ ______________

---

* அடைக்கலக்காதை, ௧௦௩ - ௧௦௪. || வரந்தருகாதை, ௧௦.

† நீர்ப்படை, ௧௦௩, ௧௦௮. ¶ ,, உ௮.

‡ வாழ்த்து, அடித்தோழியரற்று. ** ,, ௯௫.

§ வரந்தருகாதை, ௪ - ௫.



ணைகவிடப் பார மகல நீக்கிச் சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத் தந்தமி லின்பத் தரசாள் வேந்தாயினனென்பது. இக்கதையைப் பதிற்றுப்பத்தினுள் அஞ்சாம் பத்தின்முடிவின்கண், * "வடவ ருட்கும்" என்னுங் கவியுள்ளும், வாழ்த்தின்கண் ணும், வரந்தருகாதைக்கண்ணுங் காண்க.

குணவாயில் - திருக்குணவாயிலென்பதோரூர்; அது வஞ்சியின் கீழ்த்திசைக் கண்ணுள்ளது; அஃது ஆகுபெயர். அது குணக்கண்வாயில் குணவாயில்; குணக் கின்கண்வாயில் குணவாயிலெனச் சாரியைபெற்றும் பெறாதும்வரினும் அமையும். என்னை? † "எழ னுருபிற்குத் திசைப்பெயர் முன்னர்ச், சாரியைக் கிளவி யியற் கையு மாகும்"

என்முராகலின். வாயிற்கோட்டமென்பது ‡"லகார விறுதி னகார வியற்றே" என்பதனுல், ஏழனுருபின்கண்வந்த சாரியை லகாரவீறு, வருமொழி முதல் வல்லெழுத்துவர னகாரம் வேற்றுமைக்கண் திரிந்து றகாரமாயிற்றே போலத் திரிந்தது. கோட்டம் - அருகன்கோயில். அது §"மஃகான் புள்ளிமு னத்தே சாரியை" என்பதனுல் ஏழனுருபின்கண் சாரியைபெற்று, ||"அத்தே வற்றே யாயிரு மொழிமே, லொற்றுமெய் கெடுத றெற்றென் றற்றே" என்பதனுன் மகரங்கெட்டு, ¶"அத்தி னகர மகாரமுனை யில்லை" என்பதனுல், அகரங்கெட்டுமுடிந்தது. **"அவற்றுள், மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" ††"குற்றிய லுகரமு மற்றென மொழிப" என்பதனுலும், ‡‡"புள்ளி யீற்றுமு னுயிர்தனித் தியலாது, மெய்யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே" என்பதனுலும் வருமொழி அகாரவுயிரேறிற்று. அரசு - அரசாட்சி. துறந்திருந்த - நிலைமொழியீற்றுக் குற்றுகரம முற்கூறியவாறே முடிந்தது. குடக்கோவென்பது §§"அகர விறுதிப் பெயர் நிலை முன்னர், வேற்றுமை யல்வழிக் கசதபத் தோன்றிற், றத்த மொத்த வொற்றிடை மிகுமே" என்பதனுல், பெயரொடுபெயர்புணர்ந்து வல்லொற்றுமிக்கது. கோச் சேரலென்பது |||"ஓகார விறுதி யேகார வியற்றே" என்பதனுல், ஓகாரவீற்றுப் பெயர்ச்சொல் அல்வழிக்கண் ஏகாரவீற்று அல்வழியேபோல வல்லெழுத்துப் பெற்றுமுடிகவென்றலின், வல்லொற்றுமிக்கது. சேரலென்றது - அண்ணல்,

---

* "வடவ நுட்தும் வானரேய் வெலகொடிக், குடவர் கோமா னெடுஞ்சேர லாதற்குச், சோழன்

......மகன், கானவில் கானங் கணையிற் போகி, யாரிய வண்
ணலை வீட்டிப் பேரிசை, யின்ப லருவிக் கங்கை மண்ணி,
யினக்தெரி பல்லான்
கன்றொடு கொண்டு, மாறு வயலை லிடும்பிற் புறத்திறுத்,
தறுபுலி யன்ன வயவர்
வீழச், சிறுகுர னெய்தல் வியலூர் நூறி, யக்கரை நண்ணிக்
கொடுகூ ரெறிந்து,
பழையர் காக்குங் குழற்சினை வேம்பின், முரனை முழுமுத
றுமியப் பண்ணி,
வாலிழை கழித்த நறும்பல் பெண்டிர், பல்லிருங் கூந்தன
முரச்சியாற், குஞ்சர
வொழுகை பூட்டி வெந்திற, லாராச் செருவிற் சோழர்குடிக்
குரியோ, ரொன்ப
தின்மர் வீழ வாயிற்புறத் திறுத்து,.........செருவி
ஞற்றலை யறுத்துக், கெடலருந்
தானையொடு கடல்பிறக் கோட்டிய, செங்குட் டுவனைக், கரண
மமைந்த காசறு
செய்யுட், பரணர் பாடினார் பத்துப் பாட்டு."

† தொல், எழுத், உருபிய, உக. ** தொல், எழுத், புணரியல், உ.
‡ ,, ,, புள்ளிமய, எக. †† ,, ,, ,, கூ.
§ ,, ,, உருபியல், கரு. ‡‡ ,, ,, ,, ருசு.
|| ,, ,, புணரியல், ருக. §§ ,, ,, உயிர்மய, க.
¶ ,, ,, ,, உரு. ||| ,, ,, உயிர்மய, அ. கஉ

ம.

}தோன்றல், இளையல், இளவலென்றாற்போல்வதோர் லகாரவீற்றுப் பெயர்ச்சொல்;
அன்றியும் சேரலனென்னும் பெயர்த்திரிசொல்லெனினுமமையும். சேரலிளங்கோ வென்பது "புள்ளி யீற்றுமு னுயிர்" என்பதனால், லகாரவொற்றீற்று நிலைமொழி மேல் வருமொழிமுதல் இகரவுயிரேறிமுடிந்தது.
கோவடிகட்கென்பது *"எல்லா மொழிக்கு முயிர்வரு வழியே, யுடம்படு மெய்யி னுருபுகொளல் வரையார்." என்பதனால், வகரவுடம்படுமெய்யாயிற்று. அடிகட்கென்றது † "ளகார விறுதி ணகார வியற்றே" என்பதனால், ணகாரம் வேற்றுமைக்கண் திரிந்து டகாரமாயிற்றே போல இதுவும் வேற்றுமைக்கண் திரிந்து டகாரமாயிற்று.

அரசென்பதற்கு இரண்டனுருபு விரித்துத் துறந்தென்னும் வினையெச்சத் தோடும், துறந்தென்னும் வினையெச்சத்தை இருந்தவென்னும் பெயரெச்சத்தோடு முடித்து அதனையும் அடிகளென்னும் பெயரோடே முடிக்க.

அரச ரட் சிறை யத்துறந்து திருக்குணவாயிற்கோயிற்கண்ணேயிருந்த குடதிசைக் கோவாகிய செங்குட்டுவனென்னுஞ்சேரற்கு இளங்கோவாகிய அடிகட்கெனப் பண்பொட்டு விரித்துரைக்க. இளமைப்பருவத்தே இராசபோகத்தைத்துறத்தல் அருமையால் துறந்தென்றும், அங்ஙனம் போகதுகர்ந்தவிடத்தே மீட்டும்தவவுருத் தாங்கியிருத்தலருமையான் இருந்தென்றுங்கூறினார்.

இம்முதலிரண்டடிக்கும் இத்துணையுங்கூறியது

எழுத்துச்சந்திமுடிவும் சொன்முடிவுமெனக்கொள்க.

இனிப், பொருளாராய்ச்சி எண்வகைய. அவை திணை, பால், செய்யுள், நிலம், காலம், வழு, வழக்கு, இடமென்பன. அவற்றுள், திணை - இரண்டு ; ஆவன அகத்திணை புறத்திணையென்பன. பால் - பதினான்கு ; ஆவன : கைக்கிளைமுதல் பெருந்திணையிறுவாய் ‡எழும், வெட்சிமுதல் பாடாண்டிணை இறுவாய் §எழும். செய்யுள் - அறுவகை ; ஆவன : வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடற்பா, மருட்பாவென்பன. நிலன் - நால்வகை ; ஆவன : முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலென்பன. காலம் - பன்னிரண்டு ; ஆவன : ‖சிறுபொழுதாறும் ¶பெரும்பொழுதாறும். வழு - பதினான்கு ; ஆவன: அகத்திணைவழுவேழும், புறத் திணை வழுவேழும். வழக்கு - இருவகை; ஆவன : நாடகவழக்கும், உலகியல்வழக்கு மென்பன. இடம் - இருவகை ; ஆவன : வழக்கிடமும், செய்யுளிடமும்.

இவற்றுள் நிறுத்தமுறையானே அகத்திணைப் பொருட்பகுதிமுதலியன இப் பதிகச்செய்யுளுண்முடியாமையின், அவை முடியுமிடங்கூறுதற்கு, ஆசிரியர் அகப்

---

* தொல், எழுத், புணரியல், ௩௮. † தொல், எழுத், புள்ளிமய, கடுக.

‡ ஏழாவன : கைக்கிளைத்திணை, முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, மருதத் திணை, நெய்தற்றிணை, பாலைத்திணை, பெருந்திணையென்பன. இவை அகத்திணை யெனப்படும்.

§ ஏழாவன: வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் டிணையென்பன. இவை புறத்திணையெனப்படும்.

|| சிறுபொழுதாறுவன : மாலை, யாமம், வைகுறு, காலை, நண்பகல், எற்பாடென்பன.

¶ பெரும்பொழுதாறுவன : கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென்பன.

## பதிகம். கரு

பொருட்பகுதிகூறுவார், *" மாயோன் மேய காடுறை யுலகமுஞ், சேயோன் மேய மைவரை யுலகமும், வேந்தன் மேய தீம்புன லுலகமும், வருணன் மேய பெருமணலுலகமு, முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என முல்லைத்திணையை முதலாககாட்டுதலின் அம்முறையே அகத் திணைப்பொருட்பகுதி முடியுமிடம் ஈண்டு எடுத்துக்காட்டப்படும்.

† " முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டி, னியல்பென மொழிப வியல்பு ணர்ந் தோரே" என்பதனால், முதற்பொருள் இருவகைப்படும். முல்லைத்திணை நிலமுதற்பொருள். ‡" காரு மாலையு முல்லை" என்பதனால், அத்திணைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதுங் கொள்ளப்படும். பெரும்பொழுது : §" காரோ வந்தது" என்பதனாற் காரும், சிறுபொழுது : ||" மாலைநீ யாயின" என்பதனால் மாலையுங்கூறினார். கருப்பொருள், ¶" தெய்வ முணாவே மாமரம் புட்பறை, செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ, யவ்வகை பிறவுங் கருவென மொழிப" என் பதனாலுணர்க. இந்நிலத்திற்குக் கருப்பொருள் : **" கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்" என்பதனாற் றெய்வமும, ††" அனைவிலை யுணவின்" என்பதனால் உணவும், ‡‡" நீர்நசை வேட்கையின்

மாணினறு ,விளி•கும்'' எனபதனுன்மாவும், §§''கொல்லைப புனத்துக் குருந்தொசித்தான்'' என்பதனுன் மரமும், ||||'' கான வாரணங் கதிர்வர

பதனுற் பறையும்,

வியம்ப'' என்பதனுற் புள்ளும், ¶¶'' ஏறங் கோட்பறை'' என்|
***'' கோகுல மேய்த்து'' என்பதனுற் செய்தியும், †††'' குட முதல் . . . வேண்டிய பெயரே'' என்பதனுன் முல்லையாழும், பண் : ‡‡‡'' முல்லைத் தீம் பாணி யென்றூள்'' எனபதனுற் சாதாரியும் கூறினர். உரிபபொருள் : §§§'' புணர்தல் பிரித லிருத்த லிரங்க, லூட லிவற்றி னிமித்த மென்றிவை, தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே'' என்பதனுலுணர்க. ||||'' இருந்தேங்கி வாழ்வா ருயிர்ப்புறத்தாய்'' என்பதனுல் இருத்தலும், ||||'' பேரருளி னீழல்'' என்பதனுல் நிமித்தமுங்கூறினர். பிறவுமென்றதனுல் நிலமக்களும் நீர்நிலையும் வார்கொடியும் பூவுங்கொள்ளப்படும்; இவற்றுள், ¶¶¶'' இளசூழ் கோவலர்'' எனபதனுல் நிலமக்களும், ****'' புடைநெறிப போயோர் பொய்கையிற் சென்று'' என்பதனுல் நீர் நிலையும், ††††'' ஆட்கொடிக் கவலையும்'' என்றதனுல் வார்கொடியும், ‡‡‡‡'' காயா மலர் மேனி'' §§§§'' முல்லை நிகாமலர்'' என்பவற்றுற் பூவும் பிறவுங்கூறினர்.

---

* தொல், பொரு, அகத்திணை, ரு.

† ,, ,, ,, ௬.

‡ ,, ,, ,, சா.

§ கால்கோட்காதை, ககஅ.

|| கானல்வரி, "பையுணோய்"

¶ தொல், பொருள், அகத்தி, கஅ.

** ஆய்ச்சியர்குரவை, "கன்று"

†† கொலைக்களக்காதை, கூ.

‡‡ காடுகாண்காதை, எஅ.

§§ ஆய்ச்சியர்குரவை, "செங்கிலை"

|||| பறஞ்சேரியிறுத்தகாதை, கூஎ.

¶¶

*** ஆய்ச்சியர்குரவை, "கோவாம"

††† ,, "குடமுத"

‡‡‡ ,, "செங்கிலை"

§§§ தொல், பொருவ், அகத்தி, கச.

||||| கானல்வரி, "பிரிந்தார"
¶¶¶ கொலைக்களக்காதை, ௪.
**** காடுகாண்காதை, ௧௪௧.
†††† „ ௮௨.
‡‡‡‡ வேட்டுவவரி, "ஆய்பொன்னரி."
§§§§ கனாத்திறமுரைத்தகாதை, ௧-௨.



குறிஞ்சித்திணைநிலமுதற்பொருள். பெரும்பொழுது : *"அருவி யொலிக்கு ......மலைகாண் குவம்" என்பதனாற் கூதிர்ப்பொழுதும், சிறுபொழுது : †"குன்றத்துச் சென்று வைகியும்" என்றதனால் நள்ளியாமமும், கருப்பொருள் : ‡"நீலப் பறவைமேல்.........புதல்வன் வரும்" என்பதனால் தெய்வமும், §"ஐவன வெண்ணெலும் .........கொய்பூந் தினையும்" என்பதனால் உணவும், || "புலியொடு பொருஉம் புகர்முகம்" என்பதனன் மாவும், ¶"கோங்கம் வேங்கை" என்பதனன் மரமும், **"கானக் கோழியுந் தேன்மொழிக் கிள்ளையும்" என்பதனாற் புள்ளும், ††"தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்" என்பதனாற் பறையும், ‡‡"கொய்பூந் தினையும்" §§"நறவுக் கண்ணுடைத்த" என்பவற்றாற் செய்தியும், ||||"அந்தீங் குறிஞ்சி" என்பதனால் யாழும், ¶¶"குறிஞ்சி பாடுமின்" என்பதனாற் பண்ணும், உரிப்பொருள் :

***"அஞ்சலோம் பென்று நலனுண்டு" என்பதனாற் புணர்தலும், ***"நல்காதார்" என்பதனாற் புணர்தனிமித்தமும், †††"குன்றவருங்கண்டுநிற்க" ‡‡‡"குறத்தியர் பாடிய" என்பனவற்றால் நிலமக்களும், §§§"அருவி யாடி யு மகன்சுனை குடைந்தும்" என்பதனால் நீர்நிலையும், ||||||"எல வல்லியு மிருங்கறி வல்லியும்" என்பதனால் வார்கொடியும், ¶¶¶ "விரவு மலர்தூவு மின்" என்பதனாற் பூவும் பிறவுங்கூறினார்.

மருதத்திணை நிலமுதற்பொருள். ****"இன்னிள வேனில் வந்த திவணென" என் பதனாற் பெரும்பொழுதும், †††† "வான்கண் விழியா வைகறை யாமத்து" என்பதனாற் சிறுபொழுதும், கருப்பொருள் : ‡‡‡‡"மலைச்சிற கரிந்த வச்சிர வேந் தற்கு" என்பதனால் தெய்வமும், §§§§"குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு" என்பதனால் உணவும், ||||||||"கழாமயிர் யாக்கைச் செங்கட் காரான்" என்பதனால் மாவும், ¶¶¶¶"மருதோங்கு முன்றுறை" என்பதனன் மரமும், *****"கம்புட் கோழியுங் கனைகுர னாரையும்" என்பதனாற் புள்ளும், †††††"தெண்கிணைப் பொருநர் செருக்குடனெடுத்த" என்பதனாற் பறையும், ‡‡‡‡‡"ஏரொடு நின்றோர்" §§§§§"அரிந்துகால் குவிதோர்" என்பனவற்றாற் செய்தியும், யாழ் : ||||||||||"அ.தி

---

* காட்சிக்காதை, ௬ - எ.

† குன்றக்குரவை, க.

‡ " "செறிவளை"

§ காடுகாண்காதை, அ0 - அக.

|| காட்சிக்காதை, உக.

¶ „ கஎ.

** „ ருச.

†† குன்றக்குரவை, "குருவி"

‡‡ காடுகாண்காதை, அக.

§§ காட்சிக்காதை, உஎ.

|||| கடுகற்காதை, ௬ரு

¶¶ குன்றக்குரவை, "குருவி"

*** „ "ஆடுக"

††† „ "குருவி"

‡‡‡ .நீர்ப்படை, உஉ௬.

---

§§§ குன்றக்குரவை, "குருவி"

|||||| காட்சிக்காதை, சக.

¶¶¶ குன்றக்குரவை, "குருவி"

**** வேனிற்காதை, எ.

†††† நாடுகாண்காதை, க.

‡‡‡‡ ஊர்காண்காதை, கூச.

§§§§ நாடுகாண்காதை, கஉகூ.

|||| " க[illegible]க.

¶¶¶¶ ஊர்காண்காதை, எஉ.

***** நாடுகாண்காதை, ககச.

††††† " ககூஅ.

‡‡‡‡‡ " ககூரு.

§§§§§ " ககூள.

|||||| வேனிற்காதை, உகூ.

பதிகம். கரு

ராமரபின் யாழ்கை வாங்கி" என்பதனுன் மருதயாழும், பண்: *"வைகறைப் பாணி யும்" என்பதனுல் மருதப்பண்ணும், உரிப்பொருள்: †"சிலம்புள கொண்மென" என்பதனுல் ஊடலும், ‡"விடுத லறியா விருப்பினன்" §"போற்ருவொழுக்கம் புரிந்தோ" என்பனவற்ருல் நிமித்தமும், ||"கருங்கை வினைஞருங் களமரும்"

¶" சின்மொழிக் கடைசியர்" **" உழவ ருழத்தியர்" என்பனவற்றால் நிலமக்க ளும், ††" பூசா நிலஞ்சிப் பொருகய லோட்டி" என்பதனால் நீர்நிலையும், ‡‡" கோதை மாதவி" என்பதனால் வார்கொடியும், §§" வெண்பூ மல்லிகை .........தண்செங் கழுநீர்" என்பதனாற் பூவும் பிறவுங்கூறினார்.

நெய்தற்றிணை நிலமுதற்பொருள். பெரும்பொழுது - காரும் இருவகை வேனிலும். இவை ஆசிரியர் எடுத்தோதாமையின் அடிகள் கூறிற்றிலர்போலும். சிறு பொழுது : ||||" வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை" என்பதனால் மாலையும், கருப்பொருள் : தெய்வம் : ¶¶" கடற்றெய்வங் காட்டிக் காட்டி" என் பதனால் வருணனும், உணா : ***" விலைமீ னுணங்கல் பொருட்டாக" என்பதனான் மீன்விலையுணவுங்கூறினார். மா, உமணர் பகடன்றி இந்நிலத்திற்கு விலங்கினமை யின் ஆசிரியர் கூறிற்றிலர்போலும். இனி முதலையும் சுறவும் †††மாவென்பர் ; அ து ‡‡‡" கெண்டை யஞ்சினை மேய்ந்து கிளர்ந்துபோய், முண்ட கத்துறை சேர்ந்த முதலைமா, வண்டல் வார்கலா மாமக ரக்குழாங், கண்டு நின்று கனலுங் கழியெலாம்" எனக் காட்டுவாருளராயினும், அவை மீனெனப்படுவவல்லது மாவெனப் படா ; §§§" பொறைமலி பூம்புன்னை" என்பதனால் மரமும், |||||" அன்னத் துணையோ டாட" என்பதனாற் புள்ளுங்கூறினார். பறை கூறிற்றிலர் ; மீன்கோட் பறையெனக. ¶¶¶" கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்" என்பதனாற் செய்தியும், ****" சித்திரப்படத்து .........குற்ற நீங்கிய யாழ்" என்பதனால் யாழும், பண் : ††††" நுளையர் விளரி" என்பதனால் விளரிப்பண்ணும், உரிப்பொருள் : ††††"கொளவல்லா யென்னுவி கொள்" என்பதனால் இரங்கலும், ‡‡‡‡" பேரருளி னீழ, விருந்தேங்கி வாழ்வார்" என்பதனால் நிமித்தமும், §§§§"சேரிப் பரதர் வலை முன்றில்" |||||| "பவள வுலக்கை" ¶¶¶¶" எறிவளைகளார்ப்ப" என்பனவற்றால்

பரதரும் பரத்தியரும் நுளையரும் நுளைச்சியருமாகிய நிலமக்களும்,
*****"சாத்தன் ________________

* புறஞ்சேரியிறுத்தகாதை, கஷீஅ.

† கஞத்திறமுரைத்தகாதை, எகூ.

‡ அரங்கேற்றுகாதை, கஎச.

§ கொலைக்களக்காதை, அக.

|| நாடுகாண்காதை, கஉரு

¶ ,, ககூ0.

**

†† நாடுகாண்காதை, எஅ.

‡‡ ஊர்காண்காதை, ககூ.

§§ ,, எஅ - எக.

||| கானல்வரி, "வையுணேய்கூர"

¶¶ ,, "கரியமலர்"

*** " வலைவாணர்"
,,
††† என்பவர் நக்கீரனர்.
‡‡‡ சூளாமணி, நாட்டுச்சருக்கம், உஉ.
§§§ கானல்வரி, "துறைமேய்"
|||||| ,, "அன்னங்"
¶¶¶ ,, "கடல்புக்"
**** ,, முதற்கட்டுரை.
†††† ,, "துனையர்"
‡‡‡‡ ,, "பிரிந்தார்"
§§§§ ,, "வாரித்தரள"
|||||||| ,, "பவள"
¶¶¶¶ ,, "எறிவளை"
***** ,, "சேர்ந்தகம்"

 சிலப்பதிகாரம்.

வுறை" என்பதனல் நீர்விலையும், *" அம்மெ னிணைர

வடிம்புகாள்" என்பதனால் வார்கொடியும், †"நறுஞாழல் கையி னேந்தி" என்பதனாற் பூவும் பிறவுங்கூறினர்.

"சொல்லிய முறையாற் சொல்லவும் படும்" என்பதனாற் சொல்லாதமுறை யாற் சொல்லவும்படுமென அருத்தாபத்தி கோடலானும், ‡"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு, முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" என்பதனானும், §"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளுங், காலை யெய்தினிர்" என்பதனானும்போந்த இப்பெற்றித்தாகிய பாலைத்திணை நிலமுதற்பொருள். பெரும் பொழுது : ||"வேனிற் கிழவனொ டும் வெங்கதிர் வேந்தன், றானலந் திருகித் தன்மை யிற் குன்றி" என்பதனால் இருவகைவேனிலும், சிறுபொழுது : ¶"படுங்கதி ரமயம் பார்த்திருந் தோர்க்கு" என்பதனால் **நண்பகலுங்கூறினர். கருப்பொருள் : தெய் வம், ஆசிரியர் புலப்பட எடுத்தோதிற்றிலரேனும், ††"கடுங்கதிர் திருகலின" எனவும், ‡‡"வெங்கதிர் வேந்தன் றானலந் திருகி" எனவும், §§"ஐயை கோட்டத் தெய்யா வொருசிறை" எனவும், ||||"கொற்றவையுங் கொடுமரமுஞ் செல்லும்" எனவுங் கூறுதலானும், பிறவாற்றானும் பரிதியஞ்செல்வனும், இகிரியஞ்செல்வியு மெனக்கொள்க. உணா : ¶¶"ஆரிடை யத்தத் தியங்குந ரலலது, மாரி வளம்பெறா வில்லே ருழவர்" என்பதும், ஆறெறிந்து கூறைகொண்டும் உண்ணுமுணவு மாம். மா : ***"மானின்று விளிக்கும்" என்பதனால் உழைமான்முதலியனவும், †††"அலர்தலை மராஅ முலறுதலை யோமையும்" என்பதனால் மரமும், ‡‡‡"கான வாரணங் கதிர்வர வியம்ப" என்பதனாற் புள்ளும், §§§"துண்ணென் றுடியொடு" என்பதனாற் பறையும், ||||||"பொருள்கொண்டு புண்செயின்" என்பதனாற் செய்தி யும்,

¶¶¶"கெந்திறம் புரிந்த செங்கோட்டி யாழ்" என்பதனால் யாழும், பண் : ****"ஆசான் திறத்தின்" என்பதனாற் காந்தாரபஞ்சமமுங் கூறினர் ; உரிப் பொருள்: ††††"தொடிவளைச் செங்கை தோளிற்காட்டி" எனவும், ‡‡‡‡"ஆரிடையுழந்த மாதரைநோக்கி" எனவுங் கூறினமையாற் போக்கும், வாளாது போக் கெல்லாம் பாலையென்றலின், உடன்போக்கும் கொள்ளப்பட்டன. நிலமக்கள் : §§§§"கண்ணி லெயினர்" எனவும், ||||"இளமா வெயிற்றி" எனவுங்கூறலின், எயினரும் எயற்றியரும். ஈண்டு நீரின்மை நிலை : "நீர்நசை வேட்கையின் ——

* கானல்வரி, "தம்முடைய"

† ,, "நிணங்கொள்"

‡ தொல், பொரு, அகத்திணை, கூ.

§ காடுகாண்காதை, சுசு-சுஎ.

|| ,, சுஉ - சுரு.

¶ புறஞ்சேரியிறுத்தகாதை, கசு.

** எற்பாடெனவும் பிரதிபேதம்.

†† வேட்டுவவரி, க.

‡‡ காடுகாண்காதை, சுஉ - சுரு.

§§ வேட்டுவவரி, ௪.

|||| ” "கல்விலையாட்டி"

** காடுகாண்காதை. ௨௦௯ - ௨௧0.

*** காடுகாண்காதை, ௭௮.

††† ” ௭௫.

‡‡‡ புறஞ்சேரியிறுத்தகாதை, ௬௭.

§§§ வேட்டுவவரி, "துண்ணென்"

||||| ” "பொருள்"

¶¶¶ புறஞ்சேரியிறுத்தகாதை, ௧0௪.

**** ” ௧௧௨.

†††† ” ௬௬.

‡‡‡‡ ” ௬0.

§§§§ வேட்டுவவரி, "துண்ணென்"

|||||| ” "இளமா"

மானின்று விளிக்கும்'' என்பதனானும், *" நீரின்றி வேனி றெறுநிலம் பாலை''
என்பதனானும் நீரின்மையே இந்நிலத்திற்குச் சிறப்பெனவுணர்க. †" அறுநீர்ப்
பைஞ்சுனை யாமநப் புலர்தலி, னுகுநெற் பொரியும் வெம்மை'' என அகப்
பாட்டினும், ‡ "மரையா மரல்கவர'' எனக் கலியுள்ளுங்கூறினார். §" ஆய்கொடிக்
கவலையும்'' என்பதனால் வார்கொடியும், ||" கொம்பர் நல்லில வங்கள்கு விந்தன''
என்பதனாற் பூவும் பிறவுங்கூறினார்.

இச்சொல்லப்பட்ட ஐந்திணையின் முதல் கரு உரிப்பொருளும் பிறவுமாகிய அகத்திணைப்பொருட்பயன் உடம்படுபுணர்த்தியுணர்த்திப் புறத்திணைப்பொருட் பயனும் பிறவும் இவ்வாறு உடம்படுபுணர்த்தியுணர்த்துங்காற் புணர்ந்துரைக்கப் பட்டுக் கேட்போர்க்கு இன்பம்பயவாது உணர்வுசலிக்குமாதலின் வந்தன வந்துழிக் காட்டுதலைக்கருதிற்று இவ்வுரையென்க.

இனி இசைநாடகத் தமிழ்நூலது பகுதியும், இவைபோலப் பெருவழக்கின் முதலானும், நிலத்தோடும் காலத்தோடும், கண்டத்தோடும், கருவியோடும், நிலை யோடும், இயக்கத்தோடும், இருவகை பலவகைவிலக்குறுப்புக் கை கால்வட்டணை பொருள் விருத்தி யோனி சந்தி சாதி சுவை குறிப்பு சத்துவம் அவிநயம் சொல் சொல்வகை வண்ணம் வரி சேதமென்பனவற்றோடும் கதையோடும் பலகூத்துக் கூறுங்கால் உய்த்துணர்வில்லோர்க்குச் செவிச்சுவைபயக்குமாதலானும் ஈண்டு
விரியாதுவிரித்தலைக்கருதிற்று இவ்வுரையெனக்கொள்க.

இனிப் பதிகச்செய்யுளுள், முதலீரடி யும் போல யாண்டும்விரியாதது உலா பெருகுமென்பதனைக் கருதியெனக்கொள்க.

---

* திவாகரம், ஐந்தாவது இடப்பெயர்த்தொகுதி.

† அகநானூறு, களிற்றியானைநிரை, க : "வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ, லுருவக் குதிரை மழவ ரோட்டிய, முருக நற்போர் நெடுவே ளாவி, யறுகோட் டியானை பொதுனி யாங்கட், சிறகா ரோடன் பயினொடு சேர்த்திய, கற்போற் பிரியல மென்ற சொற்றாம், மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த, வேய் மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டுப், பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக, வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி, னிழூறேய்ந் தலறிய மரத்த வறைகாய், பறைநீப் பைந்நுனை யாமரப் புலர்தலி, னுதுநேர் பொரியும் வெம்மை யாவரும், வழங்குந ரின்மையின் வெளவுநர் மடியச், சரம்புல லென்ற வாற்ற வலங்குசினை, நாரின் முருங்கை நவிரல் வான்பூச், சூரலங் கடுவளி யெடுப்ப வாருற், றுடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன், கடல்போற் றோன்றல் காடிறந் தோரே." எ - து பிரிவிடை ஆற்றாளாய தலைமகள் தோழிக்குச்சொல்லியது ; மாமூலனார்.

‡ கலித்தொகை, பாலை, ரு : "மரையா மரல்கவா மாரி வறப்ப, வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர், சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்த முண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத், தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரங், கண்ணீர் நனைக்குங் கடுமைய காடென்றால், லென்னி றறியாதிர் போல விவை கூறி, னின்னீர வல்ல நெடுந்தகா யெம்மையு,

மன்பெறச் சூழாதே யாற்றிடை நம்மொடு, துன்பந் துணையாக
நாடி னதுவல்ல, தின்பமு முண்டோ வெமக்கு."

§ காடுகாண்காதை, அ0. || வேட்டுவவரி, "
செம்பொன்"



குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்குக்
குன்றக் குறவ ரொருங்குடன் கூடிப்
பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழ
லொருமுலை யிழந்தா ளோர் திருமா பத்தினிக
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுநனைக் காட்டி யவளொடெம
கட்புலங் காண விட்புலம் போய
திறம்பூது போலுமஃ தறிந்தரு ளீயென

குன்றக்குறவர் - எழனுருபுத்தொகை: குன்றம் †கொடுங்கோளூர்க்கு அயல
தாகிய செங்குன்றென்னுமலே. அது ‡திருச்செங்கோடென்பவாலெனின், அவ
ரறியார்; என்னே? அத்திருச்செங்கோடு வஞ்சிநகர்க்கு வடமேற்த்திசைக்கண்ண
‡ தாய் அறுபதின்காதவாதுண்டாகலானும், *அரசனும்
உரிமையும் மலைகாண்குவ
‡ மென்றுவந்து கண்ட அன்றே வஞ்சிபுகுதலானும் அது
கூடாமையினென்க.

இதன்பொருள். திருக்குணவாயிற்கோயிற்கண்ணே
அரசபோகத்தைத்துற
ந்து தவவுருத்தாங்கியிருந்த குடதிசைக்கோவாகிய
செங்குட்டுவனெனனுஞ் சே

ரற்கு இளங்கோவாகிய அடிகட்குக் குறவரெல்லாரும் திரண்டுசென்று மைதூர்

மலைப்பக்கத்துப் பொன்போலும்பூவினையுடைய வேங்கைமரத்தின் நிழற்கண்ணே

ஒருமுலையிழந்துவந்துநின்றாள் ஓர் மாபத்தினி ; அவள்பொருட்டு இந்திரன்றமர் ?? ?? ஈண்டி வந்து அவள்கொழுநனைக் காட்டி அவளோடும் அவர் எங்கட்புலங்காண

விட்புலம்போயவது ஓரதிசயமாயிருந்தது ; அதனை நீ அறிந்தருளுவாயாக என்ற

வளவிலேயென்க.

பொலம்பூ - உவமத்தொகை. நலம் - குளிர்ச்சி. கிளர்தல் - மிகுதல். திரு

மாபத்தினி - அழகியவீரபத்தினி. குவ்வுருபு - பொருட்டு; அது †"வரிசைக்கு ?? வருந்தும்" என்றாற்போலநின்றது. தமர் - தேவர். ஒடு - உடனிகழ்ச்சி. கட்

புலம் - கண்ணினதறிவு ; கணனென்னின்றபுலமுமாம். விட்புலம் - விண்ணிடம்.

---

* அரசன் - செங்குட்டுவன் ; உரிமை - வேண்மாள். இவர்கள் மலைகண்ட

வன்றே வஞ்சிபுகுந்ததனைக் காட்சிக்காதையிற்காண்க.

† "புறநானூறு, சஎ : "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி, நெடிய

வென்னாது சுரம்பல கடந்து, வடியா நாவின் வல்லாங்குப் பாடிப், பெற்றது மகிழ்ந்து

சுற்ற மருந்தி, யோம்பா தண்டு கூம்பாது வீசி, வரிசைக்கு

மென்றுரெனக.

இரும்பூதுபோலு ஈண்டிவந்து காட்டிக் காணப்

போயவென்னும்பெயரெச்சம் அதுவென்கு னுஞ்சுட்டுப்பெயரோடு முடிந்தது. போய அது போயதெனவிகாரம். இதனுட் பத்தினியென்பதூஉம், தமரென்பதூஉம், கொழுநனென்பதூஉம் குன்றக்குறவ ரறிந்தமை குன்றக்குரவையுட் காண்க. இது மருட்கையென்னுமெய்ப்பாடு.

கO-கக. அவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்
யானறி குவனது பட்டதென் றுரைப்போன்

இ - ள். குறவர் இளங்கோவடிகளைநோக்கி அறிந்தருளென்றவளவிலே செங் குட்டுவன் அதிசயித்து முகநோக்கப் பரிசில்காரணமாகவந்து அவனுழையிருந்த சாத்தன் அதனைக் குறிப்பானறிந்து அதுவிளைந்ததெல்லாம் யானறிகுவனென் றுரைக்கின்றவனென்க.

அதுவென்றது - ஒருமுலையிழந்ததனை. பட்டது - விளைந்தது.

கஉ-உO. ஆரங் கண்ணிச் சோழன் மூதூர்ப்
பேரா சிறப்பிற் புகார்நக ரத்துக்
கோவல னென்பானோர் வாணிக னவ்வூர்
நாடக மேத்து நாடகக் கணிகையொ
டாடிய கொள்கையி னரும்பொருள் கேடுறக்

கண்ணகி யென்பாண் மனைவி யவள்காற்
பண்ணமை சிலம்பு பகர்தல் வேண்டிப்
பாடல்சால் சிறப்பிற் பாண்டியன் பெருஞ்சீர்
மாட மதுரை புகுந்தனன்

இ - ள். ஆத்தித்தாரையுடைய செம்பியனது பழைய நகரங்களின்வைத்து உரு மாறுத விழவுச்சிறப்பினையுடைய புகாராகிய நகரத்திடத்துக் கோவலனென்று பெயர்கூறப்படுவானோர்வாணிகன் தன்னூர்க்கண் நாடகத்தானேத்தும் நாடகப் பொதுமகளாகிய மாதவியென்பாளோடுகூடிய ஒழுக்கத்தாலே பெறுதற்கரிய பொருள் தொலைதலின், அவன்மனைவி கண்ணகியென்று பெயர்கூறப்படுவாள்;

---

* மணிமேகலை, ௨0 - வது, உதயகுமரனைக் காஞ்சனன் வாளாலெறிந்த காதை. "இரும்பூது சான்ற முலையுங் காணாய், வெறும்பை போல வீழ்ந்துவே ருயின, தாழ்ந்தொசி தெங்கின் மடல்போற் றிரங்கி, வீழ்ந்தன விளவேய்த் தோளுங் காணாய், நரம்பொடு விடுதோ லுகிர்தொடர் கழன்று, திரங்கிய விரல்க ளிவையுங் காணாய், வாழைத் தண்டே போன்ற குறங்கிணை, தாழைத் தண்டின் றுணங்கல் காணாய், ஆவக் கணைக்கால் காணு யோசீ, மேவிய நரம்போ டென்பு புறங் காட்டுவ, தளிரடி வண்ணங் கிளை யோசீ, முளிமுதிர் தெங்கி னுதிர்கா யுணங்கல், பூவினுஞ் சாந்தினும் புலான்மறைத் தியாத்துத், தீசிறு மணியினுக் தொலலோர் வகுத்த, வஞ்சர் தெரியாய்"

அவளுடைய காலணியாகிய ஓசையமைந்த சிலம்பினை விற்றல்வேண்டித் தமிழி னது பாடல்சிறந்த சிறப்பினையுடைய பாண்டி யனது மிக்கபுகழையுடைய மாடமது ரைக்கண் ணே சென்றுபுக்கானென்க.

| நாடகமேத்துமென்றது - நாட கத்தான் இவளாற்சிறப்பெய்துதலின், ஏத்திற் றென்றவாறு. இனி ஏத்துநாடகமெனமாறிப் | பதினொராடலாக்கி உரைப்பினு மமையும். இனி நான்கனுருபுவிரித்து உருப்பசிமுதலியோர்யாவரும் ஏத்துமெனவு மாம். | கணிகையர்பலராதலின், இவளை நாடகக்கணிகையென்றார் ; | பதியிலா ளென்பது தோன்ற. ஆடுதல் - அனுபவித்தல் ; *"இளையார்விளையாட" என்றார் சிந்தாமணியினும். | அரும்பொருள் - அறனும் இன்பமுந்தரும்பொருள். †" அப் பொ பொரு, டுன்னுங் காலைத்துன் னாதன வில்லையே" என்றார் பிறரும். கேடு - அழிவற. ‡" வஞ்சியும் வறிதே, மதுரையும் வறிதே, உறந்தையும் வறிதே" என்று

---

* சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், ௧௮௯: "பரிந்த மாலை பறந்தன குங்குமங், கரிந்த கண்ணி கலந்த மகிழ்ச்சியு, ளரிந்த மேகலை யார்த்தன வஞ்சிலம், பிரிந்த வண்டிளை யார்விளை யாடவே."

† சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், ௫௫. "பொன்னி னாகும் பொரு படை யப்படை, தன்னி னாகுந் தரணி தரணியிற், பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொரு, டுன்னுங் காலைத்துன் னாதன வில்லையே."

‡ சிறுபாணாற்றுப்படை, ௫௦ - ௮௩. "முனிவிகந் திருந்த முதுவா யிரவல, கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க், கழுநீர் மேய்ந்த கயவா யெருமை, பைங்கறி நிவந்த பலவி னீழல்,

மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர, விளையா விளங்க ணறை
மெல்குபு பெயராக், குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளுங், குடபுலங்
காவலர் மருமா னொன்னார், வடபுல விமயத்து வாங்குவிற்
பொறித்த, வெழுவுறழ் திணிதோ ளியறேர்க் குட்டுவன், வருபுனல்
வாயில் வஞ்சியும் வறிதே யதாஅன்று, நறவுவா யுறைக்கு
நாகுமுதி நணவத், தறைவாய்க் குறுந்துணி யயிலுளி
பொருத, கைபுனை செப்பங் கடைந்த மார்பிற், செய்பூங் கணணி
செவிமுத லிருத்தி, கோன்பகட் டேமை ரொழுகையொடு வந்த,
மகாஅ ரன்ன மந்தி மடவோர், நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்,
வாள்வா யெருந்தின் வயிற்றகத் தடக்கித், தோன்புற மறைக்கு
நல்கூர் நுசுப்பி, னுளரிய லைம்பா லுமட்டி யரீன்ற, விளர்பூட்
புதல்வ ரொடு கிலுகிலி யாடுந், தத்துநீர் வரைப்பிற் கொற்கைக்
கோமா ன், றென்புலங் காவலர் மருமா னொன்னார், மண்மாறு
கொண்ட மாலை வெண்குடைக், கண் ணூர் கன்னிக் கடுந்தேர்ச்
செழியன், றமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின், மகிழ்நனை மறுகின்
மதுரையும் வறிதே யதாஅன்று,நறுநீர்ப் பொய்கை யடைகரை
நிவந்த,துறு நீர்க் கடம்பின் றுணையார் கோதை, யோவத் தன்ன
வுண்டுறை மருங்கிற், கோவத் தன்ன கொங்குசேர் புறைத்தலின்,
வருமுலை யன்ன வண்முகை யுடைந்து, திரு முக மவிழ்ந்த
தெய்வத் தாமரை, யாசி லங்கை யாக்குத்தோய்க் தன்ன, சேயிதழ்
பொதிந்த செம்பொற் கொட்டை, யேம வின்றுணை தழீஇவிற
குளர்ந்து, காமர்

தும்பி காமரஞ் செப்புந், தண்பணை தழீஇய தளரா விருக்கைக், குணபுலங் காவலர்
மருமா னொன்னா, ரோங்கெயிற் கதவ முருமுச்சவல் சொறியுந், தூங்கெயி லெறி
ந்த தொடிவிளங்கு தடக்கை, நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பிய, னோடாப்
பூட்கை யுறந்தையும் வறிதே."

ராசலின், இதனைப் பேராச்சிறப்பினையுடைய புகாரென்றார்.
காற்சிலம்பு பகர்தல்
வேண்டியெனவே தலைக்கோலமுதலிய அணிகளனைத்தும்
முன்னமேதொலைக்கதா விளங்கின்றது. சிறப்பிற்பாண்டியனென்றும்,
பெருஞ்சீர்மாடமதுரையென்றும்
அடிகள்புகழ்ந்தார்; இவையும் பழவினையாக்
அழிக்தவென்னுமிரக்கந்தோன்ற.
மாடமதுரைபுகுந்தனனென்பது - காட்டினன்றி ஒருரின்கண
உயிரும் பொருளு(ு
மிழந்தானென்பது மேல்வினையத் தோன்றிநின்றது.
நகரத்தவாணிகன் கொள்கையாற் கேடுறுதலிற்
பகர்தல்வேண்டி மனைவி
யோடுபுகுந்தனனென்க.

உ0-உஉ. அதுகொண்டு
மன்பெரும் பீடிகை மறுகிற் செல்வோன்
கூ0
பொன்செய் கொல்லன் றன்கைக் காட்ட

இ-ள். அங்ஙனம் முன்றொட்புகுந்தனனாய்ப் பிற்றைஞான்று அதனைக் கொண்டு போய்விற்கைக்குப் பீடிகைமறுகிற் செல்கின்றவன் கூற்றுவன்வந்தாற் போல முன்வந்த பொற்கொல்லனைக்கண்டு அவன்கையிற்காட்டவென்க.

கண்டென ஒருசொல்வருவிக்க. அதுகொண்டென்றார், அச்சிலம்பால் மேல் விளைவன தோன்ற; அது அநியாயபுரத்தே புகுகின்றவன் கூற்றத்தையும் உடன் கொண்டு

புக்கானென்றாற்போன்றிருந்தது. | மன் - கழிவின்கண்வந்தது.
செல்வோன் கண்டு காட்டவென்க.

உரு-உகா. கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்
பியாப்புற வில்லையிங் கிருக்கென் றேகிப்
2 ப
பண்டுதான் கொண்ட சில்லரிச் சிலம்பினைக்
கண்டன னல்லனோர் கள்வன் கையென

இ - ள். அங்ஙனங் காட்டக்கண்ட பொற்கொல்லன் இப்பெருவிலைச்சிலம்பு கோப்பெருந்தேவிக்கே ஆவதன்றிப் பிறர் பூணுந்தரமல்லவாதலான், இதனை யான் அரசற்குணர்த்திவருந்துணையும் இக்கோட்டத்திருக்கவெனச் சொல்லிப்போய்த் ௨௩ தான் முன்பு பணிக்களரியில் வஞ்சித்துக்கொண்டு நிலைநிற்றலான் ஆராய்ச்சி சிறிதுபிறந்துவருகின்றசிலம்பினைப் பிறர்காட்டு ஓர்கள்வன்கையிற் கண்டேனென்று அரசற்குரைப்பவென்க.

|தான்கொண்டவென்றார், தன்னெஞ்சறியத் தான்கொண்டதனை இல்லனைக்
கூறினனென்பதுதோன்ற.| ஈங்கிருக்கவென்றார், பிறிதோரிடத்தாயின் ஊர்காவலர் ௬ ப
ஆராய்வரென்றுகருதினனென்பதுதோன்ற. | என்றேகியென்றார், அவன்கருத்தும் முயற்சியுந்தோன்ற. சில்லரிச்சிலம்பினையென்றார்,|தொழிற்பன்மைதோன்ற. |பிறனோர்கள் வன்கையிற்கண்டனனென்றார், தன்னையுங் கள்வனென்றமைதோன்ற.

உஎ-௩௦. வினைவிளை கால மாதலின் யாவதுஞ்
சினையலர் வேம்பன் றேரா னாகிக்
௩௨
கன்றிய காவலர்க் கூஉய்க் கள்வனைக்
கொன்றச் சிலம்பு கொணர்க வீங்கென

டென்,' றவைகை கடையே கான்கென மொழிப'' என்பதனுனென்க. இதனே
மேல்விருவனவறறிற்குங் கொள்க. இதனே ஆரா ரயுநெறி பல்வுளவாகவும், அவற்றில் ஒ ஒன்றையும் தோந்திலனெல்பார் யாவதும் தோராஞகியென்றூர். முன்னர்க் ‡கை
குளறத்தன்முதலிய முறைசெய்தோ ன் இதனேத் தேர்ந்திலனென்ற அடிகள் இரங்
கிக்கூறினுர். | கன்றியகாவலரொன்றூர், அவரும் முன்னர்த் தீதுசெய்யாரொன்பது
தோன்ற.
காவலமாதலில் தோராஞகிக் கூடய்க் கொன்று கொணர்கவென்றுனென ப விசைக்க.

கூக-ருகூ. கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
நிலைக்களங் காணு ணெடுங்கணீ ருகுத்துப்
பதினி யாகலிற் பாண்டியன் கேடுற
முதிதார மார்பின் முலைமுகந் திருகி
ரு நிலைகிளர் கூட னீளெரி யூட்டிய
பலர்புகழ் பத்தினி யாகு மிவளென

இ - ன். அங்ஙனம் கொன்றுகொணர்கவென்று அரசன்கூறக்கேட்ட காவ
லரும் விளைவிலைகாவமாதலிற் கொல்லக் கொலையிடத்தேபட்ட கோவலன்மனைவி
தனக்குநிலையிடங்காணுளாய் அவடா ன் பத்தினியாதலிற் பா ண்டி யன்முன்னர்ச் ச் சென்று அவனுயிர்கேடுறக் கண்ணீருகுத்து அவனூரையும் தன்முலைமுகத்தெழுந்த

---

* வாழ்த்துக்காதை, செங்குட்டுவற்குக் கண்ணகி

கடவுணல்லணிகாட்டியது.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், கசை.

‡ பாண்டியன் தனகைகுறைத்ததை மேல் கட்டுரைகாதை [சக-ருஉ] விதும்

னைக்குத் தகவன்று லென்பதே நோக்கித், தனக்குக் கரியாவான் றானுய்த் தவு றிறை, மீளாத்தத்தன் கைகுறைத்தான் பாண்டியன் காணு, ரெனச்செய்யார் மாணு ...'' என்னும் பழமொழிச் (கoஉ-வது) செய்யுளிலுங்காண்க. இதனை ருசஎ-

... திருக்குறளுரையில் "தனிகைகுறைத்தான்'' எனப் பரிமேலழகரும் குறிப்பித் ... கதையைட்கொண்டே "திமைசெய் தாய்போற் செங்கை குறைதரப் ...யோ'' என்றார் பாத்கோதிமுனிவரும்.



நிலையுண்ணப்பண்ணிய பலரும்புகழப்படும் பத்தினிகாணும் இக்குறவர்சொன் னவளென்றகூற வெங்க.

பாண்டியனும் கூடலுங்கேடுற உகுத்த ஊட்டியவெங்க. கண்ணும் முலையும் உகுத்த நீராலும் நெருப்பாலும் அடுதலும் சுடுதலுஞ்செய்தாளென்பதாயிற்று. அக் கருத்தானன்றே வாழ்த்திலுள்ளும் "தொல்லை வினையாற் றுயருழந்தாள் கண்ணி ரு னீர், கொல்ல வுயிர்கொடுத்த கோவேந்தன்'' என்பதூஉம்.

ருஎ-ருஅ. வினைவிளை காலமென் றீரியாதவா வினைவிளை வென்ன

இ - ள். நீர் முன்னை வினைவிளைகாலமென்று சொல்லிப்போந்தீர்; வினைவிளைந்தகாலம் என்னையென்று அரசன் வினவவெங்க.

அவர்க்கு
கூப

கஅ-டுச.

விறலோய் கேட்டி
யதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க்
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்
வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தே
னாரஞ ருற்ற வீரபத் தினிமுன்
மதுராபதி தெய்வம் வந்து தோன்றிக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்தோய்
முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி கணவனொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்துச்
சங்கம னென்னும் வாணிகன் மனைவி
யிட்ட சாபங் கட்டிய தாகலின்
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி னல்லதை
யீனோர் வடிவிற் காண்ட லில்லெனக்
கோட்டமில் கட்டுரை கேட்டனன் யானென

இ - ள். விறலோய், கேட்பாயாக; நடுக்கமில்லாத

சிறப்பினையுடைய மதுரை யாகிய மூதூரிடத்து மன்றப்பொதியில்களில் இறைவனுறைகின்ற வெள்ளியம்பலத்துள் யான் துயின்றேனாக; செறிந்த இருளின்கண்ணே அந்நகர்க்குக் காவற்றெய்வமாகிய மதுராமாதெய்வம் பெரியவருத்தமுற்ற வீரபத்தினிமுன்னர்வந்து வெளிப்பட்டு நினது மிக்கசினத்தால் வெவ்விய அழலை நின்கொங்கையிடத்தே விளைவித்தோய், பைந்தொடி, நுங்கட்கு முற்பட்ட நல்வினை முடிந்ததாகலான், நின் கணவனொடு நினக்கு முற்பிறப்பின்கண்ணே குன்றாதபுகழையுடைய கலிங்க நாட்டுச் சிங்கபுரமென்னுநகரின்கட் சங்கமனென்னும் வாணிகனுடைய *மனைவி நடு

* மனைவி - நீலி; இவள் சாபமிட்டசெய்தி முதலியவற்றை இந்நூற் கட்டுரை காதையாலும், மணிமேகலை உசு - வது வஞ்சிமாநகர்புகுந்தகாதையாலும் விளக்க வுணர்க.



யிட்டசாபம் இப் பிறப்பின்கண்ணே வந்துமூண்டதாகலின், நீண்டு செறிந்ததோர் கூந்தலையுடையாய், நின்கணவனை இவ்வேலையன்றி நீ இனிப் பதினாலாநாட் பகல் நீங்கியபொழுதிற் காண்பை; காணுங்கால் வானோர்வடிவிற்காண்பதல்லது மக் கள்வடிவிற் காண்பதில்லையென்றுகூற அவ்வஞ்சமற்றகட்டுரையினை யான்கேட்டேனென்றுகூறவென்க.

†கேட்டி - இகரவீற்று முன்னிலையொருமை வினைத்திரிசொல். * "இ ஐ ஆய்"

என்னுஞ் சூத்திரத்தான்முடிக்க. | அதிராச்சிறப்பு - பகைவரால் நடுக்கமில்லாத
சிறப்பு ; † " நீர்முற்றி மதில்பொருஉம்' ' என்பதனுனுணர்க. கொன்றையஞ்சடை
முடி - ஆகுபெயரான் இறைவன். பொது இல் - பொதியில் ; உகரவீறு இகாமாய்த் ० திரிந்து உடம்படுமெய்யும் பெற்றுக் ‡" ளிளர்தவல்ல'' என்னும் அதிகாரப்புறனடை
யான் முடிந்தது.
மன்றப்பொதியில்வெள்ளியம்பலத்தென்றது, பொன்னம்
பலமுமுண்டாதலின் ; என்னை ? §" கண்ணிலாக் கவர்வன கனக கூடமும், வெண்
ணிலாச் சொரிவன வெள்ளி வேயுளுந், தண்ணிலாத் தவழ்மணித் தலமுஞ் சார்ந்த
ரோ, மண்ணின் வியன்றில மதலை மாடமே'' என்றார் சூளாமணியுள்ளும். / நள்ளி ரு ருள் - செறிந்தவிருள்; ||உரிச்சொல் ஈறுதிரிந்தது. இனி வினைத்தொகையாக்கி அனு
கரணத்தையுடைய இருளென்பதுஞ் சிறந்தது ; " நள்ளென் றறந்த நடுவுகொள்
யாமத்து'' என்றாராகலின். ஆரஞர்-பெரியவருத்தம்; ஆவது கணவனை யிழத்தல்.
" மக்க ளிழந்த விடும்பையினு மனையா ளிழந்த விடும்பையினு, மிக்க விடும்பை
யோவாத விழைவை யிடும்பை ¶யெனவிளவித், தக்க வதனு லென்கழுத்திற் றுலி ० நீதக் தருளென்று, தொக்க மணிநீண முடியானைத் தொழுது பின்னு மிவைசொல்
லும்'' என்றார் பிறரும். வீரபத்தினி - மறக்கற்புடையாள். கோப்பெருந்தேவி -
அறக்கற்புடையாள். **" ஆறியகற்புஞ் சீறியகற்புமென

இருவகை. கொதியழல் -

வெவ்வழல். சீற்றம் - மிகுசினம். ‖ வினைத்தோய் முன்னிலைத்தொழிற்பெயர்.

¶ முதிர்தல் - முற்பத்தல். எனவே கல்வினைமுடிதலாலெனக. †† "ஏனவினையுலப்ப" ு என்றார் பிறரும். இனி முதிர்வினையால் இவைமுடிந்தவென்ன வழக்காறுக்கினும்

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், உகூ.

† கலித்தொகை, மருதம், உ : " கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர்

வேய்ந்து, சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலக், தார்முறறி யதுபோலத்

தகைபூத்த வையைதன், ன்ர்மு ற்றி மதில்பொருஉம் பகையல்லா னோராதார்,

போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்"

‡ தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகா ப்புணரியல், எஅ.

§ சூளாமணி, நகரவருணனைச்சருக்கம், எ.

‖ உரிச்சொல் களி.

¶ எனவினம்பவென்றும் பாடம்.

** "ஆறிய கற்பிற் றேறிய நல்லிசை, வண்டார் கூந்த லொண்டொடி

கணவ" என்றார் பதிற்றுப்பத்திலும்; (கூ - ம் பத்து, கூ.)

†† நாலடியார், செல்வநிலையாமை, ௩. " யானை யெருத்தம் பொலியக் குடை

நிழற்கீழ்ச், சேனைத் தலைவராய்ச் சென்றோரு - மேனை, வினையுலப்ப வேறாகி

வீழ்வர்தாங் கொண்ட, மனையாளை மாற்ருர் கொள."



அமையும். வைப்தொடியும், கூந்தலும் அன்மைவிளி. செங்கல் -
குன்றல். வார் தல் - நெடுமை. ஒலி - தழைத்தல். எல்லே -
பகற்பொழுது. கோட்டம் - வஞ்சம். கட்டுரை -
பொருள்பொதிந்தசொல்; உறுதியையுடைய சொல்லுமாம். வினைவிளைவு
யாதென்றவினுவினற்குப் பாண்டியன்வினைவிளைவு
கூறிற்றிலராலெனின், அது கட்டுரைகாதையின் விளங்கவுரைப்படும்.
ரு

௫௫-௬0. அரசியல் பிழைத்தோர்க் கறங்கூற் ருவதூஉ
முரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலு
மூழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉஞ்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி கார மென்னும் பெயரா

௬0

னாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுளென
அங்ஙனம் அரசனோடு சாத்தர்கூறக்கேட்ட அடிகள்
பொருட்பகுதியை மூவ
கை யுள்ளுறையாக வகுத்துக்கூறுவரால் :
இ - ள். நூலொழுக்கிற்ருய அரசியலுட் செறிது ஒழுக்கம்
பிழைப்பினும் அவ்
வரசனை அறக்கடவுடானே கூற்றமாய்க் கொல்லுமென்பதூஉம்,
புகழமைந்த கற் ௬௫
புடைமகளை மக்களேயன்றித் தேவருமுனிவருமுதலாயுள்ளோர்
சென்றேத்துதலியல்
பாகலும், முன்செய்த இருவினையும் செய்தமுறையே செய்தோனை

காடிவந்து உரு

க்கொண்டுநின்று நுகர்விக்குமென்பூதூஉ மாகிய இம்மூன் றபகுதியும் இச்சிலம்புகார

ணமாக முறைமையிற் பிறந்தனவாதலிற் சிலப்பதிகாரமென்னும் பெயரான் ஒருகா

ப்பியமாக காம் நிறுத்துதுமென்று அவ்வடிகள்சொல்லவென்க. ௨௦

அறம் - அறக்கடவுள். பத்தினிக்கு - பத்தினியை. உருத்து - உருக்கொண்டு; முதிர்ந்தென்றுமாம். வினை - தொழில். காட்டுதும் - உயர்திணைக்கண்வந்த இடவழுவமைதித் தனித்தன்மை; அஃது உளப்பாட்டுத் தன்மைபோன்றிருந்தது. பாட்டுடைச் செய்யுள் - பலபாக்களோடு உரைப்பாட்டையும் இசைப்பாட்டையுமுடைய இயலிசைநாடகப் பொருட்டொடர்நிலைச்செய்யுள். அறம் கொல்லுமென்பது, *"என்பி ௨௫ லதனை வெயில்போலக் காயுமே, யன்பி லதனை யறம்" என்பதனுலுணர்க. ஆவ தூஉம், எத்தலும், ஊட்டலும் இச்சிலம்புகாரணமாகப் பிறந்தனவென ஒருசொல் வருவித்து முடிக்க.

௬௧-௬௨. முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரிய

டிக ணீரே யருளுகென் றூற்கு

௩௦

இ - ள். முடிபொருந்திய தமிழ்நாட்டு வேந்தர்மூவர்க்கும் உரியதாகலின், அடிகள் நீரேயருளிச்செய்கவென்று வினவிய சாத்தர்க்கென்க.

கெழுவென்னுஞ்சாரியை, † "லனவென வரூஉம் புள்ளி யிறுதிமு, னும்மும் கெழுவு முளப்படப் பிறவு, மன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச், செய்யுட் டொடர்வயின் மெய்பெற நிலையும்" என்னுஞ்சூத்திரத்துள், அன்ன மரபின் மொழியிடைத் ௩௫ தோன்றி என்பதனுல் அவ்விருபுள்ளியீற்றுச்சொல்லும் அல்லாதனவும் சாரியைபெ

* திருக்குறள், அன்புடைமை, ஏ.
† தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகரப்புணரியல், எகூ.



ற்று முடிவனவுளவென்றாராகலின், புள்ளியீறல்லாதவழிவந்த சாரியைச்சொல்லெ

னக்கொள்க. | சாரியையாவது சொல் தொடர்ந்துசெல்லு நெறிக்கணின்று அதற்

குப் பற்றுக்கோடாகச் சிறிது பொருள்பயந்ததும் பயவாததுமாய் நிற்பது. அவற்றுள்

இது சிறிதுபொருள்பயப்ப நிற்பது; பொருந்துதலென்னும் பொருண்மை சாரும்.

ரு மூவர்க்கு முரியது; புகாரினும், மதுரையினும், வஞ்சியினு நிகழ்ந்ததாகலின். அடி

கள் - அண்மைவிளி. என்றற்கு - தான் பாடக்கருதி னுவினசாத்தர்க்கு; அங்ஙனம்

கூறாது இங்ஙனங் கூறினரென்க. என்சொல்லிய வாறேயெனின், இச்செய்கின்ற

காப்பியம் மூவேந்தர்க்குமுரியதென்பதனால், ஏனையோரை இவர் புகழ்ந்துரையாரா

கலின், யாம் காப்பியஞ்செய்யக்கடவேமென்பதுகருதி நீரேயருளுகென ஏகாரவினு

-க0ப்பொருண்மைதோன்ற இதுகருதி இதுசொன்னார்க்கு அவர் கருதியபொருளிற்குட

ம்படாது சொல்லிற்கு உடன்பட்டாரென்பதாயிற்று.

இனித் தாம் வகுத்துக்கொண்டதனைக் கூறுவார்.

கூஉ-கூங. அவர், மஙகல வாழதது பாடலும

இ - ள். அவர்மணத்தில் மகளிர் வாழ்த்துதலையுடைய பாடலும்,

௫ | மங்கலம் - கலியாணம். இதனை மங்கலவாழ்த்துக் காதையுமென்னுது பாடலு

மென்றது என்னையோவெனின்,—இஃது ஆசிரியப்பாவால் வாராது கொச்சகக்கலி

யால் வருதலானும், |கதையையுடையது காதையாமாதலானும், அவ்வாறு இதிற்கதை

நிகழ்ச்சியின்மையானும், வாழ்த்தும் உரையும் பாடலுமாய் வருதலானும் இங்ஙனம்

பெயர்கொடுத்தாரெனவுணர்க. அஃது அற்றுக; மேலும்|கானல்வரி,| வேட்டுவவரி, ௨௦ ஆய்ச்சியர்குரவை, |துன்பமாலை,|ஊர்சூழ்வரி, வஞ்சினமாலை, குன்றக்குரவை இவை

யிற்றையும் காதையென்றிலராலெனின்,—அவற்றைக்கூறுந்தும் சில வேறுபாடு

கருதிப்போலும். என்னைவேறுபாடெனின், அவை தத்தமுடி விற் கூறுதும்.

கூங-கூச. குரவர், மனையறம் படுத்த காதையும்

இ - ள். இருமுதுகுரவரும் இவரை இல்வாழ்க்கையில் அடிப்படுத்தவேண்டி ௨௫ வேறுபடவிட்ட காதையும,

கூச-கூரு. நடநவின்

| மங்கை மாதவி யரங்கேற்று காதையும்

இ - ள். ஐயாண்டில் தண்டியம்பிடித்து ஏழாண்டு நடநவின்றமாதவி மக்கைப்

பருவத்தே அரங்கேற்றினகாதையும்,

௩௦ கூசு. அந்தி மாலைச் சிறப்புச்செய் காதையும்

இ - ள். அந்திக்காலத்து மாலையைச் சிறப்புச்செய்த

காதையும்,

சுஎ. இந்திர விழவூ ரெடுத்த காதையும்

இ - ள். அக்நகரின்கண் இந்திரனுக்கு விழவெடுத்தகாதையும்,

சுஅ. கடலாடு காதையும்

ரு:ரு இ - ள். அங்ஙனமெடுத்த விழவறுதியிற் கடலாடினகாதையும்,

'சுஅ'சுகூ. மடலவிழ், கானல்வரியும்

பதிகம். உஎ

இ - ள். அங்ஙனங் கடலாடிய கோவலனும் மாதவியும் கழிக்கானலிடத்து யாழ்ப்பாட்டு நிகழ்த்திய கானல்வரியும்,

இஃது இசைப்பாவாற்பெற்றபெயர். இதனுள்ளும் கதை நிகழாமையுணர்க.

சுகூ-எ0. வேனில்வந் திறுத்தென, மாதவி யிரங்கிய காதையும்

இ - ள். இளவேனில்வந்து தலைப்பட்டதாகப் பிரிந்தமாதவி வருந்தியகாதையும், ரு

எ0-எக. தீதுடைக், கனாத்திற முரைத்த காதையும்

இ - ள். கண்ணகி தான்கண்ட தீங்கையுடைய கனவின்றிறத்தைத் தேவந் திக்கு உரைத்தகாதையும்,

இது கலிவெண்பாட்டாகலின், *"ஒருபொரு ளுதலிய வெள்ளடி யியலாற், றிரி பின்றி வருவது கலிவெண் பாட்டே" என்பதனுற் கனாநிலையுரைத்தற் பொருண் கப முடிபாகிய பாலதனைக்கூறுதலிற் காதையாயிற்றெனவுணர்க.

எக-எஉ. வினாத்திறத்து, நாடுகாண் காதையும்

இ - ள். கண்ணகியார் மதுரைமூதூர்யாதென்ன வினவின திறத்தையுடைய சோணாட்டின்வளனை அவர்கண்டகாதையும்,

இனிக் கவுந்தியடிகளை வினவின திறமெனவும், பிறர் வினவுந்திறத்தையுடைய | ௫௬ எனவுமமையும்.

௭உ. காடுகாண் காதையும்

இ - ள். அங்ஙனம் மருதநிலமாகிய நாட்டினைக்கண்டு இன்புற்றவர் பாலைநில மாகிய காட்டினைக்கண்டு துன்புற்றகாதையும்,

௭௩. வேட்டுவவரியும்

20

இ - ள். வேட்டுவமகளாகியசாலினி கொற்றவை யுருக்கொண்டாடிய கோலச்

சாரியும்,

"இருவகைபலவகையென்னும் விலக்கோடரியவுறுப்புப் பதினொராட்டுக் குர வை வரி † சேதமவிநயகாடகமென்றிவற்றாற் றக்கவவனே யாடலாசான்" என்ற மையான், வரியென்பது கோலச்சாரி. இது வேட்டுவமகளாகியசாலினி கொற்றவை

2௬

யுருக்கொண்டு ஆடுதலின், ‡ "கொற்றவை கொண்ட வணிகொண்டு நின்றவிப், பொற்றொடிமாதர் தவமென்னை கொல்லோ" என்பதனாற் கூத்துள்படுதலின், | காட கவரிப்பெயராய், |வேட்டுவவரி நிகழ்தலின் வேட்டுவவரியாயிற்று. இது கூத்தாற் பெற்றபெயர்.

௭௩-௭௪. தோட்டலர் கோதையொடு, புறஞ்சேரி யிறுத்த காதையும் ௫௰

இ - ள். கண்ணகியோடு மதுரைப்புறஞ்சேரியிற் சென்றுவிட்ட காதையும்,

௭௪-௭௫. கறங்கிசை, யூர்காண் காதையும்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், கஙிச.

† சோகமெனவும் பிரதிபேதமுண்டு.

‡ வேட்டுவவரி.



இ - ள். முழங்காநின்ற முரசொலியையுடைய மதுரையைக் கோவலன் கண்டகாதையும்,

எடு-எசு. சீர்சா னங்கை, யடைக்கலக் காதையும்

இ - ள். அழகெல்லாமமைந்த கண்ணகியாகியநங்கையை மாதரிபாற் கவுந்தி ரு யடிகள் அடைக்கலங்கொடுத்தகாதையும்,

எசு. கொலைக்களக் காதையும்

இ - ள். கோவலன் கொலைக்களப்பட்டகாதையும்,

எஎ. ஆய்ச்சியர் குரவையும்

இ - ள். தஞ்சேரிக்கு உற்ப சசாந்தியாக மாதரிமுதலாயுள்ள ஆய்ச்சியர் குரவைக் கூத்தாடின முறைமையும்,

"குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலு, மெய்தவுரைக்கு மியல்பிற் றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோ-, தந்நிலை கொட்பநின் றாடலாகும்" எனவுஞ் சொன்னாராகலின், இதுவும் ஆய்ச்சியரிடத்து நிகழ்தலான் ஆய்ச்சியர்குரவையெனக் கூத் [டு] தாற் பெற்றபெயர்.

எஎ-எஅ. தீத்திறங் கேட்ட, துன்ப மாலையும்

இ - ள். அன்னனம் அவன் கொலையுண்ட தீத்திறத்தைக்

கண்ணகிகேட்டுத்

தன்புற்றவியல்பும்,

இதுவும் ஊர்சூழ்வரியும் சிறிது

கதைநிகழ்ச்சியுளவெனினும்] மருட்கையென்னு உப மெய்ப்பாடும்|
அவலம் அரற்றுக் கவலை கையாறென்னுமிவையும் நிகழ்தலியல்பினுன்

இதனை மாலையென்றாரெனக் கொள்க.

எஅ-எக. நண்பக னடுங்கிய, ஊர்சூழ் வரியும்

இ - ள். எல்லாருங்காண நாணிறந்து
வெளிப்பட்டவுருவினெடு கண்ணகி

ஊர்சூழ்வந்த ஊர்சூழ்வரியும,

உரு கண்ணகி ஊர்சூழவருவதனைப் பத்தினிப்பெண்டிர்
தண்கூடாகக் காண்டலின்

இஃது ஊர்சூழ்வரி யென்பதாயிற்று. இதுவுங் கூத்தாற்
பெற்றபெயர்.

எக - அ0. சீர்சால் வேந்தனெடு, வழக்குரை
காதையும்

இ - ள். புகழமைந்ததென்னனேடு கண்ணகி
வழக்குரைத்தகாதையும்,

உரைகாதை - வினைத்தொகை; இறப்பு.

அ0. வஞ்சின மாலையும்

இ - ள். அன்னைத்தானுரைத்த வழக்கு வளர்ந்தோற்று
உயிருக்தோற்ற செழுஞ்

செழியன்றேவியைநோக்கிக் கண்ணகி வஞ்சினங்கூறிய
இயல்பும்,

வஞ்சினமாவது மேற்கோள். இக்கலிவெண்பாட்டுப்

பத்தினித்தன்மைத்தாகிய

அருப்பொருளையே கருதிக்கூறிய இயல்பையுடைத்தாகலின், மாலையென்றார்.

ரூ௫ அக. அழற்படு காதையும்

பதிகம். உகூ

இ - ள். அங்ஙனம் வஞ்சினங்கூறினவள்முலைமுகத்து எழுந்தீ அவளேவிய இடமெங்கும் பட்டு எரித்தகாதையும்,

அக-அஉ. அருந்தெய்வந் தோன்றிக், கட்டுரை காதையும்

இ - ள். அங்ஙனம் அழற்படுதலின் அதற்காற்றாது மதுராபதிதெய்வம் அவ் வழறணித்தற்குவந்து இவளது பவத்தொடர்பு கட்டுரைத்தகாதையும்,

௫

அஉ-அங. மட்டலர் கோதையர், குன்றக் குரவையும்

இ - ள். மதுவொழுகமலர்ந்த கோதையினையுடைய குறத்தியர் இவளை வேங் கைநிழற்கண் கண்டதற்கு உற்பாதசாந்தியாக முருகவேளைநோக்கி அக்குன்றின்கண் ஆடிய குரவையும்,

ஆய்ச்சியர்குரவையிற் கூறியது இதற்குங்கூறுக. கோதையென்று பாடங் கூறிக் கோதைக்கு அவர்களெடுத்த குரவையெனினும் அமையும்.

அங. என்றிவை யனைத்துடன்

இ - ள். என்று சொல்லப்பட்ட இவ்விருபத்துநான்குடனே,

அச-அசு. காட்சி கால்கோ ணீர்ப்படை நடுகல்
வாழ்த்து வரந்தரு காதையொ

கரு

டிவ்வாறைந்தும்

அச. காட்சி—இ - ள். காட்சிக்காதையும்,

கற்காட்சியும், குறவர் பாருடக் காட்சியுமென்க.

அச. கால்கோள்—இ - ள். கற்கொண்ட காதையும், | கற்கோள் - கால்கோளென விகாரம்.

2 ப

அச | நீர்ப்படை—இ - ள். அக்கொண்டகல்லினைக் கங்கையாற்று நீர்ப் படுத்தினகாதையும்,

அச. நடுகல்—இ - ள். அக்கல்லினை நட்டகாதையும்,

அரு. வாழ்த்து—இ - ள். அங்ஙனநடுங்கல்லான பிரதிட்டையும் விழவும் *பெற்ற பத்தினிக்கடவுள் செங்குட்டுவனையும் நெடுஞ்செழியனையும் பெருங்கிள்ளியை 2 ரு யும் வாழ்த்தினகாதையும்,

அரு. வரந்தரு காதையொடு

இ - ள். அங்ஙனம்வாழ்த்தியகடவுள் அவரோடு[கனகவிசயர்முதலிய ஆரிய மன்னருள்ளிட்டார்க்கு வரங்கொடுத்தகாதையோடே,

ஒடு - ஒப்பிலொப்புமை; எண்ணொடுவுமாம். தருதல் - கொடை.,

ரு ப

அசு. இவ்வா றைந்தும்— இ - ள். முப்பதென்றெண்ணப்பட்ட,

அஎ. | உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்

இ - ள். உரையிடையிட்டனவும் பாட்டுடையனவுமாகிய செய்யுளை,

அனைத்துடன் காதையொ டிவ்வா றைந்தும் செய்யுளென்க. | உம்மை முற்று.

உரையிடையிட்ட பாட்டுடைச் ரு ரு ரு0

அஅ. உரைசா லடிக ளருள
இ - ள். புகழமைந்த இளங்கோவடிகள் அருளிச்செய்ய,
அருளுகென்றற்கு அருளவென்க.

• அஅ-அகூ. மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்
இ - ள். மதுரைக் கூலவாணிகனான சாத்தன்கேட்டனன்;
கூலம் எண்வகைத்து. அவை நெல்லு, புல்லு, வரகு, தினை, சாமை, இறுங்கு,
தோரை, இராகி. * பதினெண்வகைத்தென்பர் கூத்தநூலார்.

அகூ. இது — இ - ள். இவ்வாயறை
கூ0. பால்வகை தெரிந்த பதிகத்தின் மாபென
இ - ள். அறப்பால், பொருட்பால், காமத்துப்பாலாகிய அப்பால்களின் வகை
யைத்தெரிந்த செய்யுளின் பதிகத்தினது மரபு இதுவென்க.
எனவென்னும் அசைச்சொல் ஆசிரியப்பாவிற்கு முடி பு சிறப்புடைத்து.

அடிகட்கு அறிந்தருணீயென இருந்தசாத்தன் உரைப்போன் இவளென வினை ரு வினைவு யாதென, விறலோய் கேட்டனன்யானென அறங்கூற்றுவதூஉம் உயர்ந்தோ
ரேத்தலும் ஊட்டுமென்பதூஉங் காரணமாகப் பெயரான் நாட்டுதும் யாம் ஓர் பாட்டு
டை ச்செய்யுளென அருளுகென்றற்கு அருளக் கேட்டனனென்க.

அறுபத்தெட்டாமடி யுட் †"கடலாடு காதையும்" ; எனக்குறளடியும், (அகு) "வாழ்
த்து வரந்தருகாதையொடு" எனச்சிந்தடி யும் (அகூ) "இவ்வாறைந்தும்" எனக் குறளடி

ப | யும் வந்து, ‡"ஈற்றய லடியே யாசிரிய மருங்கிற், றோற்ற முச்சீர்த் தாகு மென்ப"

| என்ற ஆசிரியர், §"இடையும் வரையார் தொடையுணர் வோரே"
டச் செந்தூக்காயிற்று.

என்றதனாற் குட்

இது, நாற்பொருளுள்ளும் அகத்திணைக்கண்ணது இன்பமாகலானும், புறத்தி
ணைக்கண்ணது பொருளும் அறனுமாகலானும் வீடெ ாழிந்த முடிபு கூறிநின்றது. டு அதனானன்றே, ||"மணிமே
என்பாரானதுவு மென்க.
ப

கலைமே லுரைப்பொருண் முற்றிய சிலப்பதிகாரம்"

# திகம்முற்றிற்று.

---

* கூலம் பதினெண்வகைத்தென்பதைப் பின்வருஞ் சூத்திரத்தானுமுணர்க.

"அந்தணர் வேள்வியோ டருமறை முற்றுக, வேந்தன் வேள்வியோ டியாண்டுபல
வாழ்க, வாணிக ரிருநெறி நீணிதி தழைக்க, பதினேண் கூலமு முழவர்க்கு மிகுக,
வரங்கியற் கூத்து நிரம்பிவினை முடிக, வாழ்க நெடுமுடி கூர்கவென் வாய்ச்சொ
லென், றிப்படிப் பலிகொடுத் திறைவனிற் றொக்குச், செப்பட வமைத்துச் செழும்பு
கை காட்டிச், சேவடி தேவனா யேத்திப் பூசனை, மூவடி முக்கால் வெண்பா மொ
ழிந்து, செயிமுக் குறுமை வேந்தனை யேத்திக், கவியொழுக்

கத்து நின்றுழி வேங்

தன், கொடுப்பன கொடுப்ப வடக்கு மென்ப" என்றார் மதி வ ணனர்.

† இந்த அடியிலுள்ள 'மடலவிழ்' என்பதைத் தனிச்சொல்லாகக் கொள்க.

‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், கூஅ.

|| இதனைச் சிலப்பதிகார இறுதிக்கட்டுரையிற்காண்க.

## உரைபெறுகட்டுரை.

க. அன்றுதொட்டுப் பாண்டியனாடு மழைவறங்கூர்ந்து வறுமையெய்தி வெப்புநோயுங் குருவுந் தொடரக் கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் நங்கைக்குப் பொற்கொல்லராயிரவரைக்கொன்று களவேள்வியால் விழவொடுசாந்திசெய்ய நாடுமலிய மழைபெய்து நோயுந் துன்பமு நீங்கியது.

உ. அதுகேட்டுக் கொங்கிளங் கோசர் தங்கணாட்டகத்து நங்கைக்கு விழவொடுசாந்திசெய்ய மழைதொழிலென்றும் மாறாதாயிற்று.

ங. அதுகேட்டுக் கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான் நங்கைக்கு நாட் பலிபீடிகை கோட்டமுந்துறுத்தாங்கு அரந்தைகெடுத்து வரந்தருமிவளென ஆடித்திங்க ளகவையினாங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறை யெடுப்ப மழைவீற்றிருந்து வளம்பலபெருகிப் பிழையாவிளையு

ணடாயிற்று.

ச. அதுகேட்டுச் சோழன்பெருங்கிள்ளி கோழியகத்து எதத்திறத்தானும வரந்தருமிவளோர் பத்தினிகடவுளாகுமென நங்கைக்குப் பத்தினிக் கோட்டமுஞ்சமைத்து நி லவிழாவணி நிகழ்வித்தோனே.

க. அன்றுதொட்டு.........நோயுந்துன்பமுநீங்கியது கரு

அன்றென்றது கதையை உட்கொண்டு நின்றது: * "வெள்வா ளெறிநதனன் விலங்கூ டறுத்துப், புண்ணுமிழ் குருதிபொழிந்துடன் பரப்ப, மண்ணக மடந்தை வான்றுயர் கூரக, காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன், கோவலன்" என்றூ ராகலின்.

இ - ள். பாண்டியனுடு அன்றுதொடஙகி மழைவறத்தன்மிக்கு அதனானே உ० வறுமையுற்றுத் தொழுகோயும் குருவும் இடைவிடாதுகலிதலிற் கொற்கைககணிருந்த இளஞ்செழியன் நங்கைக்கு ஆயிரம்பொறகொல்லலாப் பலியிட்டுக் களவேள்வி யாற் சாந்திசெய்து விழவெடுத்தலானே அவனுடு மிகவும் மழைபெய்து முற்கூறிய வறுமையும் நோயுநீஙகிற்று.

வெப்பு - தொழுநோய், † "வெப்பின்முப்பழச்சுனை" என்றூராகலின். 'இது உ௫ வெதுப்பெனினு மமையும்.

உ. அதுகேட்டு.........மாறுதாயிற்று

இ - ள், அஙஙனம் செழியன நன்மைசெய்து அவைநீஙகுதலின் அதனைககே ட்டுக் கொங்குமண்டிலத்து இளங்கோவாகிய கோசரும் நங்கைககு அங்ஙனம சாந்தியும் விழவுஞ்செய்தலான அவைநீஙகுதலோடே மழை பெய்தறஞெழில பெய்யு நூ௦ நாளென்றும் வழுவாதாயிறறு.

* கொலைக்களக்காதை, உகரு - உகஎ.

† சீவகசிந்தாமணி,

நாமகளிலம்பகம், சசு: "விலைகில்சாலை யாவாக்கும் வெப் பின்முப்ப முச்சுனைத், தலைத்தணீர்ம லரணிந்த சந்தனஞ்செய் புந்தரும், கொலைதத லைய வேற்கணூர் கூத்துமன்றி யைமபொறி, நிலத்தலைய துப்பெலா மூர்களே."

நிறைதுளும்பு



பெய்யுகாளென்றது திங்கண்மும்மாரியை;

பருவகாளெனிலுமமையும்.

கூ. அதுகேட்டு........காடாயிற்று

இ - ள். அதுகேட்டுக் கடலை அகழாகவுடைய இலங்காபுரத்துக் கயவாகுவெ ன்று பெயர்கூறப்பட்ட அரசன் கங்கைக்கு அங்வனம் நாடோறும் பலிகொள்ளுதலை ரு யுடைய பலிபீடத்தை முந்தச்செய்து பின்பு கோட்டமுமமைத்து முற்கூறியதுன்ப ங்களைக்கெடுத்து நமக்கு வேண்டும்வரங்களை இவள்தருமென்று தணிந்து ஆடித்திங்க ளிடத்தே ஆட்டைவிழாவாகத் தன்னகரவீதிதோறும் உலாச்செய்விக்க மழைகுறை வின்றிநிலைபெறுதலானே அன்றே பொய்யாதவிளையும் விளைவினையுடைய நாடாயிற்று அவனுடை.

௲0 பாடி - நகரி.

ச. அதுகேட்டு........நிகழ்வித்தோனே

இ - ள். அதனைக்கேட்டுச் சோழனாட்டு உறையூரிடத்தே பெருநற்கிள்ளி யரச

ஞகியவனவன் இவள் பத்தினிக்கடவுளாதலின், எத்திறத்தாலும் நமக்கு அரங்கைதலை

க்கெடுத்த வரந்தருமெனக்கருதி நங்கைக்கு அங்ஙனம் கோட்டமமைத்து நித்தல் நீடு விழவும் நடத்தினனென்க.

எத்திறத்தானுமென்றார்; இவள்பிறந்த உரிமைபற்றி. கோழியென்றது - ஒரு

கோழி நிலமுக்கியத்தால் யானையோடு பொருது அதனைப் போர்தொலைத்தல்கண்டு

அந்நிலத்திற்செய்த நகர்க்குப் பெயராயிற்று; * "முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய, புறஞ்சிறை வாரணம்" என்றார்மேலும்; நித்தல்விழா - சேபலி. அரந்தை-துன்பம். 20 உரைபெறுகட்டுரை-இவைமுற்கூறிய கட்டுரைச்செய்யுள்; "உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு, ளுரைசாலடிகளருள" என்றமையால் காப்பியங்கட்குச் சிறுபான்மை இவ்வுறுப்புக்களும் சிலவருமெனக்கொள்க. என்னை? † "உரையும் பாடையும் விரவியும் வருமே" என்பது அணியியலாகலின்.

உரைபெறுகட்டுரை முற்றிற்று.

---

* காகோன்காதை, உசவ - உசஅ.

† தண்டியலங்காரம், பொதுவணியியல், கக: "ஒருதிறப் பாட்டினும் பலதிறப் பாட்டினு, முரையும் பாடையும் விரவியும் வருமே."

உ

கணபதி துணை.

ல்ப்பதிகாரம்

அடியார்க்குநல்லாருரை

முதலாவது

# புகார்காண்டம்.

## க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண்
குடைபோன்றிவ் வங்க ணுலகளித்த லான்
ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்
மாமழை போற்றுது மாமழை போற்றுது
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோன்
மேனின்று தான்சுரத்த லான்
பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ

டோங்கிப் பரந்தொழுக லான்

ஆங்கு,
பொதியி லாயினு மிமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினு
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
யொடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே

அதனால்,
நாகநீ ணகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னில்





மாகவா னிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்ப
ரீகைவான் கொடியன்னா ளீராறாண் டகவையாள்
அவளுந்தான்,
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றுந்
தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்று
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்

காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென் பாண்மன்னோ

ஆங்கு,

பெருநில முழுதாளும் பெருமகன் றலைவைத்த
வொருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பா
னிருநிதிக் கிழவன்மக னீரெட்டாண் டகவையான்

அவனுந்தான்,

மண்டேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்டேய்த்த மொழியினா ராயத்துப் பாராட்டிக்
'கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண்டேத்துங் கிழமையான் கோவலனென் பான்மன்னோ

அவரை,

இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி
யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்

அவ்வழி,

முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம் வெண்குடை
யரசெழுந்ததோர் படியெழுந்தன வகலுண்மங்கல வணி

மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை
விரையினர் மலரினர் விளங்கு மேனிய
ருரையினர் பாட்டின ரொசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதைய

### க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

ரேந்திள முலையின ரிடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தற் பொலனறுங் கொடியனார்
காதலற் * பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமற்
றீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி
யங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார் தங்கிய
விப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை
யுப்பாலைப் பொற்கோட் டுழையதா வெப்பாலுஞ்

கூ

செருமிகு † சினவேற் செம்பிய
னொருதனி யாழி யுருட்டுவோ னெனவே.

---

திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண்
குடைபோன்றிவ்
வங்க ணுலகளித்த லான்

கூ௬

இ - ள். நாம் திங்களைப் போற்றுவோம்; திங்களைப் போற்றுவோம். அஃது எற்றுக்கெனின், தாது பரத்தல்செய்த மாலையையுடைய ‡ சென்னியுடைய குளிர்ச்சியை யுடைய வெண்குடைபோன்று பொதுவற இவ்வுலகிற்கு அளிசெய்தலானென்க.

இது பண்பும் பயனுங் கூடின உவமம். கொங்கு - தாது. அம் - அழகு. கண் - இடம். போற்றுதும் - பன்மைத் தன்மை; § "அம்மாம்" என்னுஞ் சூத்திரத்துக் உப கடதறவால் முடிந்தது. இது ‖ "நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு"

ஞாயிறு போற்றுது ஞாயிறு போற்றுதுங்
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்

இ - ள். நாம் ஞாயிற்றைப் போற்றுவோம்; ஞாயிற்றைப் போற்றுவோம். அஃது எற்றுக்கெனின், காவிரிநாட்டையுடையானுடைய ஆழிபோலப் பொலிவுபெற்ற கொடுமுடியையுடைய மேருவை வலமாகத் திரிதருதலானென்க.

திகிரி - ஆக்கினைச்சக்கரம். இது தொழிலுவமம்.

மாமழை போற்றுது மாமழை போற்றுது
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோன்

ரு ப

மேனின்று தான்சுரத்த லான்

இ - ள். நாம் பெரிய மழையைப் போற்றுவேம்; பெரிய மழையைப் போற்று

---

* பிரியாமைக் கவவுக்கை ஞெகிழாமையென்றும் பாடம்.

† நெடுவேலென்றும் பாடம்.

‡ சென்னி - சோழன்.

§ தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், ௫.

‖ ,, பொருளதிகாரம், புறத்திணையியல், ௩௬.



வேம். அஃதெற்றுக்கெனின், அச்சத்தைத்தரும் கடல்சூழுலகிற்கு அவன் அளிசெய்

யுமாறுபோல மேருது மேலாய்நின்று தன்பெயலான் வளத்தைச் சுரத்தலானென்க.

நாம் - நாமமென உரிச்சொல் ஈறுதிரிந்தது; புகழெனினு மமையும்; ஏழ்

வகைப் பெயருமாம். வேலி - சூழ்தல். அளி - கொடை. மேனின்று-மேலாய் நின்று.

ரு தான் - அசை. சுரத்தல் - இடைவிடாதுசொரிதல். உலகிற்குச் சொரிதலானென

இயையும்.

பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ
டோங்கிப் பரந்தொழுக லான்

பூம்புகார் - விகாரம்; பூ - பொலிவு.

இ - ள். நாம் * புகாரைப் போற்றுவேம்; புகாரைப்போற்றுவேம். அஃது எற்றுக்கெனின், மிக்க கடலை வேலியாகவுடைய உலகின்கண் அவன் குலம்புகழ்வார் இதனையும் புகழ்வாராகலினென்க.

உலகிற்கு - உலகின்கண்; உருபுமயக்கம்; † "யாதனு.... .சாரும்" என்பதனுன் முடிந்தது; ‡ "இல்லைச் சூழ்பொழிற்கு" என்றாற்போல.

திங்களை முற்கூறினர், இத் தொடர்நிலைச் செய்யுட்குச் சிறந்த முதன்மொழி அதுவாகலான். இத் திங்கள்முதலியவற்று இவனளித்தல்முதலிய செய்கையொத்தலான், இவையும் இவனுற் சிறந்தனவென்பதாம். இறப்பப் புனைந்துரைத்தற்கு, "குடைநிழல் மரபு" என்றதனால் திகிரியும் வாளுயிற்று. கொடையும் உயர்ச்சியும் புனைந்துகூறிய

ஆங்கு,
பொதியி லாயினு மிமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினு
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
யொடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே

இ - ள். அப்படிப்போற்றினல்லத, ¦ முனைவனூலின் முடித்தகேள்வியான்

‡எனைத்தப்பொருளையு முணர்ந்தபெரியோா, பொதியில் இமயம் புகாரென்னும் இம் ⸻ மூன்றும் ஒருதன்மையவாதலான், ஆதியிற்றோன்றிச் சலிப்பின்றி நிலைபெற்றனவெ

ன்று கூறினல்லது, அவற்றிற்கு அந்தமுண்டென்றுகூறுரர்; அவற்றில் உயர்ந்தோரு

ண்டாகலா னென்க.

---

* புகார் - காவிரிப்பூம் பட்டினம்.

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமைமயங்கியல், உகூ.

‡ திருச்சிற்றம்பலக்கோவையார், கசுஎ. "சுரும்புறு நீலங்கொய் யற்றமி

ன்று தயில்பயின்மோ, வரும்பெறற் றோழியொ டாயத்து ணாப்ப ணமரரொன்று,

சிரும்புறு மாமதில் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர், தரும்புறச் செற்ற

சொற் றத்தெம்பி ரான்றில்லைச் சூழ்பொழிற்கே."

## க.—மங்கலவாழ்த்துப்பாடல். கஎ

ஆயினுமென்பது ஒரெண்ணிடைச்சொல்; * "இளைத்த வல்ல வேறுபிற தோன் றினும், இளந்தவற்றியலா னுணர்ந்தனர் கொளலே" என்னும் புறனடையாற் கொ ⸻ பதிவெழுவறியா - பதியினின்றும் பெயர்தலையறியாத; எனவே பகையின்மை கூறிற்று. ¦ பழங்குடி - தொன்மரபு; ஆதிகாலத்தேறிய குடியுமாம். ¹ செழீஇய- பொருந்தின. ¹ பொதுவறுசிறப்பு - தனக்கே உரியசிறப்பு. ¹ ஒடுக்கம் - முடிபு. ¹ உய (⸻ ர்ந்தோர் - முனிவனும், இறைவனும், அரசனும். இனி உயர்ந்தோர்

அகத்தியனும் இருடிகளும் பழங்குடியிலுள்ளாரு மென்றுமாம்; என்றது இமயத்தோரமே பொதியி லோடுமுள்ள இருடிகளையும் வணிகரையும் உவமித்தவாறும். உண்மையின் - உண் டாகவின். முடித்தகேள்வி - கரைகண்ட கேள்வி.

இவற்றாற் செம்பியன் சிறப்பும் புகார்ச்சிறப்பும் கூறியவாறாயிற்று.

அதனால்—இ - ள். அஃது அத்தன்மையதாகலான்,

என்றது புகார் நிலைபேறுடையதாகலாற் போகமும் புகழும் நிலைபேறுடைய வென்றவாறு.

நாகநீ ணகரொடு நாகநா டதனொடு
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னின்

மாகவா னிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்ப
ரீகைவான் கொடியன்னா ளீராறாண் டகவையாள்

இ - ள். சுவர்க்கம் பவணமென்னும் இவற்றிற்குள்ள புகழும் போகமும் நிலைபெற்ற அப்புகாரென்னு நகரின்கண் மழைபோல்வழங்கும் கையையுடைய மாநாய்கனுடைய குலத்திற்றோன்றிய கொம்புங்கொடியும் போல்வாள்; பன்னீராண் 2 டிற்குட்பட்ட பிராயத்தாளாயினளென்க.

நாகநீணகர் - சுவர்க்கம், நாகநாடு † பவணம். போகநீள்புகழ் - உம்மைத்தொகை; இருபெயர்க்கண்வந்தது; எதிர்நிரனிறை. மன்னும - நிலைபெறும்; இடைநிலை விளக்கு. மாகவான் - விசும்பின்மேகம், மாநாய்கன் - சிறப்புப்பெயர். ஈகை- பொன்; வான்கொடி - வானவல்லி; பொன்மெய் வானவல்லியென்க. அவற்றோடு 2.6 மொக்க மன்னும் புகாரெனினுமமையும்.

அவளுந்தான்—இ - ள் அவள்தான்,

உம்மை இசைநிறை.

போதிலார் திருவினள் புகழுடை வடிவென்றுந்
தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்று

மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென்

பாண்மன்னே

இ - ள். போதிற்பொருந்திய திருமகளுடைய புகழுடையவடிவு இவள்வடிவை யொக்குமென்றும், பழுதில்லாத அருந்ததியுடைய புகழையுடைய கற்பு இவள் கற்பையொக்குமென்றும் உலகின்மாதரார் தன்னைத்தொழுதேத்தும்படி விளங்கிய

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், இடையியல், சஅ.

† பவணம் - நாகலோகம். சுவர்க்கத்திலும் நாகலோகம் போகத்திற் சிறந்த தென்பது சைனநூற்றுணிபு.



பெருங்குணங்களைக் காதலிப்பாள்; அவள்யாரெனிற் கண்ணகியென்று பெயர்கூறப் படுவாளென்க.

பெயரால் வேறுபடுமென்பதாம். திருவினள் - ஒருபெயர். தீது-பிறர் நெஞ்சு புகுதல். திறம் - கற்பு. மன்னும் - இடைச்சொல். புகழ் - இடைநிலைவிளக்கு. பின்வருகின்ற இவளென்பதனை முன்னுங்கூட்டுக. மன்னும் ஒவும் இடைச்சொல்.

ஆங்கு,

பெருநில முழுதாளும் பெருமகன் றலைவைத்த
வொருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பா
60 னிருநிதிக் கிழவன்மக னீரெட்டாண் டகவையான்

இ - ள் . அப் புகாரினிடத்து*நெடுநிலமுழுவதையும் தனியேயாளும் கரிகாலின்
முதற்குடி யாகவைத்து எண்ணுதலையுடைய ஒப்பற்றகுடி களின் மிக்கோங்கிய செல்
வத்தையுடையான் ; அவன்யாரெனின், தன்னுடையபொருளை இல்லாதார்க்கருளும்
மாசாத்துவானென்று பெயர்கூறப்படுவான் ; அவ்விரு நிதிக் கிழவனுடையமகன் பதி ... ணுருண்டி ற் குட்பட்ட பிராயத்தானென்க.

பன்னிரண்டும் பதினாறுமாகிய பிராயத்தின் முதிர்தல் மரபன்மையின், அகவை
யாள், அகவையானென்றார். ஒப்பின்மையின் மிகுதிகூறுவார் ஒருதனிக்குடியென்
றார். ஓடு - இன் ; உருபுமயக்கம் ; உறழ்பொரு ; இதுவும் புறனடையான் முடிந்
தது. வருநிதி - நல்வினையாற் கலத்தினுங் காலினும் வருநிதி ; நியாயத்தால் வரு ... நிதியுமாம். பிறர்க்கு - பொருளற்றார்க்கு; நிதியற்றார்க்கும் நல்வினைசெய்தார்க்கு
மென்றுமாம். பலர்க்கென்றும் பாடம் ; அதற்கு இல்லாராகிய பலர்க்கென்க.

ஆர்த்தும் - நிறைவிக்கும் ; நுகர்விக்குமென்றுமாம்.
மாசாத்துவான் - இயற்பெயர்.
இருநிதிக்கிழவன் - சிறப்புப்பெயர்.

' அவனுந்தான்—இ - ள். அவன்றான்,

ுடு சஸ்டும் உம்மை இசைநிறை.

மண்டேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்
பண்டேய்த்த மொழியினா ராயத்துப் பாராட்டிக்
கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக் காதலாற்
கொண் டேத்துங் கிழமையான் கோவலனென் பான்மன்னோ

ருடo இ - ள். மண்ணைத்தொலைத்த புகழினையுடையான், பண்ணைத்தொலைத்த மொழியினாராகிய மதிபோலுமுகத்தினையுடைய மடவார் தங்காதலால் உலகிற் கண்டேத்தப்படுஞ்செவ்வேளென்று அவனிசையைத் தமதாயத்தின்கட் பாராட்டிப் பரப்பிக் காமக்குறிப்பின் உட்கொண்டு ஏத்துதற்குரியான் ; அவன் யாரெனின், கோவலனென்று பெயர்கூறப்படுவானென்க.

ருடு : மண்டேய்த்த வென்றார், புகழ்வளரப் பூமி சிறுகலான். மண் இடத்திற் சிறிது என்றார் வள்ளுவனாரும். புகழினான் - எழுவாய். பண்டேய்த்த - பண்ணைக்கெடுத்த. செவ்வேளென்றார், வேள் இருவருளராகவின். முருகவேளைச் செவ்வேளென்றது,

---

* நேமிநிலமென்றும் பிரதிபேதமுண்டு.

க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

* "ஞாயிறு கடற்கண் டாஅங்கு" என்பதனால். போக்கி - எங்கும் போகப்பண்ணி; பரப்பியென்றபடி. கொண்டு - காமக்குறிப்பினால் உட்கொண்டு. கிழமை - உரிமை. இனி, மடவாரென்பதற்குப் பூமாதும் கலைமாதும் சயமாதும் புகழ்மாதும் புவிமாதுமென்று கூறி, இவர், அழகிற்கும் அறிவுக்கும் ஆண்மைக்கும் புகழ்க்கும் பொறைக்கும் இவனென்றுட்கொண்டு ஏத்துங் கிழமையானெனினுமமையும்; † "கலையின '௹ தகலமுங் காட்சிக் கின்பமுஞ், சிலையின தகலமும் வீணைச் செல்வமு, மலையினி னக

லிய மார்ப னல்லதிவ், வுலகினி லிலையென வொருவ னுயினன்" என்றாற்போல. இனி, மொழியினுலென்று பாடமாயின், மடவார் திரண்டு மொழியாலே, புகழினுன் செவ்வேளென்று இசையைப்பரப்பு, ஏனையோருங் காதன்மையாற் கொடை அழகு வீரம் இவற்றிற்குரியான் யாவனெனிற் கோவலனென்று பெயர் சொல்லப்படுவோ ௲ ப னென்றலு மொன்று. இப்பொருளுக்குப் போக்கி - போக்கவென்க.

கண்ணகியை முற்கூறினர், பத்தினியை ஏத்துதல் உட்கோளாகலான்.

அவனை,
இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி

௲ ௧௩

இ - ள். அத்தன்மையானைக் குரவரிருவரும் ஒருபெருநாளிலே மணவணி காணவேண்டி மனமகிழ்ந்தனர்; மகிழ்ந்தவளவிலே யென்க.

உழி - அளவு.

யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்

இ - ள். அவர் அணியிழையானா யானையெருத்தத்திருத்தி அம்மாநகர்க்கு
இவர்மணமென்னுமகிழ்ச்சியைக் கொடுத்தானென்க.

எருத்தம் - புறக்கழுத்து. இரீஇ - இருத்தி. சாற்றரெனவே அறிவித்தானென்
பதாயிற்று. சிலமகளிரையணிந்து யானையேற்றி அறிவித்தல் மரபு. அவ்வழி,
உரு

முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம்
வெண்குடை
யரசெழுந்ததொர் படியெழுந்தன வகலுண்மங்கல வணி
யெழுந்தது

இ - ள். அவ்விடத்து, முரசுமுதலிய இயம்பின; முருடுமுதலிய அதிர்ந்தன; //
பணிலமுதலிய முழக்குதலெழுந்தன; வெண்குடைகள் அரசனுயர்வெழுந்தபடி எழு
ந்தன; மங்கலவணி எங்கும் எழுந்ததென்க.

முருடு - பத்தல்; மத்தளமுமாம். அகலுள் - தெருவுமாம்.

---

* பத்துப்பாட்டு, திருமுருகாற்றுப்படை, உ: " பலர்புகழ் ஞாயிறு கடற்கண்
டாஅங், கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி, யுறுநர்த் தாங்கிய மதனுடை
நோன்றாட் செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை, மறுவில் கற்பின் வாணுதல்
கணவன்."

+ சீவகசிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௬.



மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணத்து
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்

இ - ள். மாலைதங்கிய சென்னியையுடைய வயிரமணித் தூணினைபொருந்திய மண்டபத்து நீலப்பட்டு மேற்கட்டியின்கீழ்கிறுத்தின முத்தின்பந்தரிடத்தேயென்க. (ரு { நீலவிதானங்கூறினர், முத்து ஒளிபெறுதல்நோக்கி; அஃது அக்காலத்து முத்து நோக்குவார் ஒப்புக்கு விரித்து நோக்குப. பூ - பொலிவு.

வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
௫௦ தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை

இ - ள். மதியம் சகடணைந்தநாளிலே பார்ப்பான் மறையிற் சோதிடாங்கத்துள் வணிகர்க்குக் கூறியநெறியிலே சடங்குகாட்ட இவர் இங்ஙனம் தீவலஞ்செய்கின்ற விதனைக் காண்கின்றவர் கண்கள் முற்பவத்திற்செய்த தவம் யாதுகாணென் பாராயும்,

௫௪ காண்கின்றவர்கள் நோன்பு என்னையெனினுமமையும். சகடு - உரோகிணி.

மாமுதுபார்ப்பான் - பிதாமகன் ; புரோகிதனுமாம்.

விரையினர் மலரினர் விளங்கு மேனிய

ருரையினர் பாட்டின சொசிந்த நோக்கினர்

இ - ள். விளங்குமேனியர், விரையினராய் மலரினராய் உரையினராய்ப் 20 பாட்டினராய் ஒதுங்கிப்பார்த்த பார்வையராயும்,

சாந்தினர் புகையினர் தயங்கு கோதைய
ரேந்திள முலேயின ரிடித்த சுண்ணத்தர்

இ - ள். ஏந்திளமுலேயினர், சாந்தினராய்ப் புகையினராய்க் கோதையராய்ச் சுண்ணத்தராயும்,

2(

விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்

இ - ள். முகிழ்த்தமூரலர், விளக்கினராய்க் கலத்தினராய் முளைப்பாலிகையினராய் நிறைகுடத்திட்ட கை|புல்லினும் போதினும் யும் நிரையினர்கள்.

செகிழாமற் புணர்ந்தனரா

ஒருசொல் வருவிக்க.

போதொடு விரிகூந்தற் பொலனறுங் கொடியனார்
காதலற் பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமற்
றீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி

யங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினர் தங்கிய

க.—மங்கலவாழ்த்துப்பாடல்.

விப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை
யுப்பாலைப் பொற்கோட் டுமைய,நா வெப்பாலுஞ்
செருமிகு சினவேற் செம்பிய
னொருதனி யாழி யுருட்டுவோ னெனவே.

இ - ள். கூந்தலையுடைய கொடியன்னார், இவளும்
தன்காதலனைத் தன்கண் (ரு
ணினும் நெஞ்சினும் பிரியாமற் புணர்வோளாக; இவள்காதலனும்
இவளை அகத்
திட்டகை * புல்லினும் போதினும் நெகிழாமற் புணர்வானாக;
இருவரன்பும் சரு
வதா ஒருவரன்பாகவென நினைந்து தம் வழிபடுதெய்வத்தை
மனத்தால்வணங்கி அவ்
வகையேத்திப் பின்பு சிலமலரைத்தூவி, இப்பால் இமயத்திருத்திய
வேங்கை பொற்
கோட்டு உப்பாலிடத்ததாயே நிற்பதாக; எப்பாலுந் தன்
போரமேம்பட்ட வேலை சி ம
யுடைய கரிகாலன் மாறில்லாத தன்றிகிரியை உ
ருட்டுவோனாகவெனச் சொல்லி,
உலகில் அருந்ததியன்னாளை அமளியேற்றினொன்க.

கொடியன்னார், பிரியாமல் நெகிழாமல் நீதறகென ஏத்தித் தூவி
அருந்ததியன்
னாளை உழையதாக உருட்டுவோனாகவென அமளியேற்றினொன்க.

இது பிராசாபத்தியம்.

ரு

பா - மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா.

பருந்துநிழலுமென ... ... ... அடியார்க்குநல்லானென்பான்.

ஒருந்தமிழ் ... ... ... ... ... ரம்பையர்காவலனே.

நாற்றை ... ... ... ... ... ... சொல்வித்தரே.

மங்கலவாழ்த்துப்பாடல் முற்றிற்று.



* புல்லும்போதுநெகிழாமலெனவும் பிரதிபேதமுண்டு.

கூ

## இரண்டாவது
## மனையறம்படுத்தகாதை.



உரைசால் சிறப்பி னரசுவிழை திருவிற்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்
முழங்குகடன் ஞால முழுவதும் வரினும்
வழங்கத் தவாஅ வளத்த தாகி
(5) யரும்பொரு டரூஉம் விருந்திற் றேஎ
மொருங்குதொக் கன்ன வுடைப்பெரும் பண்டங்
கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக்

குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வ
ரத்தகு திருவி னருந்தவ முடித்தோ
ருத்தர குருவி னொப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியுங் காதற் கொழுநனு
மயன்விதித் தன்ன மணிக்கா லமளிமிசை
நெடுநிலை மாடத் திடைநிலத் திருந்துழிக்
கழுநீ ராம்பன் முழுநெறிக் குவளை
யரும்புபொதி யவிழ்ந்த சுரும்பிமிர்
தாமரை
வயற்பூ வாச மளைஇ யயற்பூ
மேதகு தாழை விரியல்வெண் டோட்டுக்
கோதை மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாதுதேர்ந் துண்டு மாதர்வாண் முகத்துப்
புரிகுழ லளகத்துப் புகலைக் கற்றுத்
திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
கோலச் சாளரக் குறுங்க ணுழைந்து
வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டு மகிழ்வெய்திக் காதலிற் சிறந்து
[1] விரைமலர் வாளியொடு வேனில்வீற்
றிருக்கு
நிரைநிலை மாடத் தரமிய மேறிச்

சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி
முதிர்கடன் ஞால முழுவதும் விளக்குங்
கதிரொருங் கிருந்த காட்சி போல

## ௨.—மனையறம்படுத்தகாதை.

வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்டோட்டு மல்லிகை விரியன் மாலையொடு
கழுநீர்ப் பிணையன் முழுநெறி பிறழத்
தாரு மாலையு மயங்கிக் கையற் றுத்
தீராக் காதற் றிருமுக நோக்கிக்
கோவலன் கூறுமோர் குறியாக் கட்டுரை
குழவித் திங்க ளிமையவ ரேத்த
வழகொடு முடித்த வருமைத் தாயினு
* முரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையிற்
பெரியோன் றருக திருநுத லாகென
வடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் பண்புண் டாகலி
னுருவி லாள னொருபெருங் கருப்புவி
லிருகரும் புருவ மாக வீக்க
மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலிற்
றேவர் கோமான் றெய்வக் காவற்

படைநினக் களிக்கவத னிடைநினக்
கிடையென
வறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியு
மிறுமுறை காணு மியல்பினி னன்றே
யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது
மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின்
சாயற் கிடைந்து தண்கா னடையவு
மன்ன நன்னுதால் மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவு
மளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழு மமிழ்துங் குழைத்தநின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியு
மடநடை மாதுநின் மலர்க்கையி னீங்கா
துடனுறைவு மரீஇ யொருவா வாயின
நறுமலர்க் கோதைநின் னலம்பா ராட்டுநர்
மறுவின் மங்கல வணியே யன்றியும்
பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்
பல்லிருங் கூந்தற் சின்மல ரன்றியு
மெல்லவிழ் மாலையொ டென்னுற் றனர்கொ—

* உரிதிதுநின்னோடெனவும், உரிதினினின்னோடெனவும் பாடம்.



ஞன நல்லகி னறும்புகை யன்றியு
மான்மதச் சாந்தொடு வந்ததை யெவன்கொ

திருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியு
மொருகாழ் முத்தமொ டுற்றதை
யெவன்கொ
றிங்கண் முத் தரும்பவுஞ் சிறுகிடை வருந்தவு
மிங்கிவை யணிந்தன ரென்னுற் றனர்கொன்
மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
யரும்பெறற் பாவா யாருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
வலையிடைப் பிறவா வமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா விசையே யென்கோ
தாழிருங் கூந்தற் றையா னின்னையென்
றுலவாக் கட்டுரை பலபா ராட்டித்
தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்துசெல்
வுழிநாள்
வாரொலி கூந்தற் பேரியற் கிழத்தி
மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண்
வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
வுரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க
யாண்டுசில கழிந்தன விற்பெருங் கிழமையிற்
காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கென.
* தூமப் பணிகளொன்றித் தோய்ந்தா

லெனவொருவர்

நாமர் மனைவியெனக் கைகலந்து - நாமந்
தொலையாத வின்பமெலாந் துன்னினர்

மண்மே

னிலையாமை கண்டவர்போ னின்று.

க-உ.† உரைசால் சிறப்பி னரசுவிழை திருவிற்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்

---

* இவ்வெண்பாப் பலபிரதிகளிலில்லை; தூமப் பணிபலவுந் தோலாத வேலைந தெனவும் பாடம்.

† இந்த "உரைசால் சிறப்பின்" என்னும் அடிக்குமுன்னர், ' 'திருவின் செல்வியொடு பெருகில மடந்தையை, யொருதனி யாண்ட செருவடு திண்டோட், கரிகாற் பெரும்பெயர்த் திருமா வளவனைப், பாலை பாடிய பரிசிலன் றெடுத்த, மாலைத் தாகிய வளங்கெழு செல்வத், தாறைந் திரட்டி யூயிரங் குடிகளும், வீறசான் ஞாலத்தி வியலணி யாகி, யுயர்ந்தோ ருலகிற் பயந்தரு தான, மில்லது மிரப்பு நல்லோர் குழு

உ.—மனையறப்படுத்தகாதை.

சுடு

இ-ள். புகழமைந்த சிறப்பினையுடைய அரசரும் விரும்பும் செல்வத்தையுடைய பரதரான் மிகுதிபெற்ற பயன்மிக்க மாநகரென்க.

அரசென்பது *"குடிமை யாண்மை" என்னுஞ் சூத்திரத்து "நிலையின வாயினு, மஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்" என்பதனுல்

முடிந்தது. சிறப்பும்மை விரிக்க. இனிப் பரதர் மிகுதிபெறுதற்குக் காரணமான நகரொனினுமாம். பயம் - மன் ருணர் விழைச்சி.

ந-கந. முழங்குகடன் ஞால முழுவதும் வரினும்
வழங்கத் தவா அ வளத்த தாகி
யரும்பொரு டரூஉம் விருந்திற் றேஎ
மொருங்குதொக் கன்ன வுடைப்பெரும் பண்டங்
கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக்
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வ
ரத்தகு திருவி னருந்தவ முடித்தோ
ருத்தா குருவி னொப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியுங் காதற் கொழுநனும்

இ - ள். மாககர், கலத்தானும் காலானும் ஈட்டுதலானே பெறுதற்கரிய பொருளைத்தரூஉம் புதுமையையுடைய தீவுமுதலிய தேயங்கள்வந்துகூடி ஒருங்குதொக்காற்போன்றுள்ள பண்டம் முழங்குகடல்சூழ்ந்த ஞாலமுழுதும் ஒக்கவரினும் வழங்கத் தொலையாத வளத்தினையுடையதாகலின்,
அங்ஙனம் அறத்தினாகிய பொருளால் †தலைப்படுதானத்தைச் செய்தோ ரெய்தும் உத்தரகுருவினை யொக்கும்படி குலத்திற்குன்றாத செல்வர்க்குத் தோன்றிய பெரியமலர்போலும் கண்ணையுடையாளும் அவள் காதலிக்கப்படும் கொழுநனுமென்க.

அத்தகு திருவினென்பதற்கு அவ்வளத்திற்குத் தக ஒழுகும் மனைவியோடே யெனினுமமையும். அரும்பொருளாவன: ‡ "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியுங், காலின் வந்த கருங்கறி மூடையும், வடமலைப் பிறந்த மணியும் பொன்னுங், குடமலைப் பிறந்த வாரமு மகிலுந், தென்கடன் முத்துங் குணகடற் றுகிருங், கங்கை வாரியுங்

காவிரிப் பயனு, மீழத் துணவுங் காழகத் தாக்கமு, மரியவும் பெரியவும்" எனப் பட்டினப்பாலையுட் சொன்னவும் பிறவும். §"இருவகைப் பிரிவு நிலைபெறத் தோன்றினு, முரிய தாகு மென்மனார் புலவர்" என்பதனாற் கலத்தினும் காலினு மென்றார். கலம்-

---

... — —வுந், தெய்வத் தானமுந் திருந்திய பூரிய, மைய றுறையுளு மறவோர் பள்ளியும், விண்ணவ ருலகினி னண்ணிடு நகரமொ, டெண்ணுவரம் பரியா விசையொடு சிறந்த" என்னும் அடிகள் பதின்மூன்றும், மிதிலைப்பட்டி அழகியசிற்றம்பலக் கவிராயரவர்கள் வீட்டுச் சிலப்பதிகார மூலப்பிரதியில் இருந்தன.

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ௫௬.

† தலைப்படுதானம் - உத்தமதானம். "அறத்தி னாற்றிய வரும்பெரும்பொருளைப், புறத்துறைக் குற்றமூன் றறுத்தாற் றவர்க்குக், கொள்கெனப் பணிந்து குறை யிரந் தவர்வயி, னுள்ளமுவந் தீவ துத்தம தானம்." என்பது திவாகரம்.

‡ பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, கஅ௫ - ககஉ.

§ தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், கக.



மரக்கலம். கால் - வட்டை. இதனானே பின்னரிரு மாபோரும் கலத்தொடு சேறல் பின்னரூழிக்கு மரபெனக்கொள்க. அருந்தவும் - ஈண்டுத் தானம். உத்தரகுரு-போக பூமி. அஃது அறுவகைப்படும்; என்னை: * "ஆதி யரிவஞ்ச நல்லரி வஞ்ச, மேமத வஞ்ச மிரண வஞ்சந், தேவ குருவ முத்தர குருவமெனப், போக பூமி யறுவகைப் படுமே" என்றாராகலின். அதிற்பிறந்து †போகநுகருமாறு, முடிபொருட்டொடர்

நிலையுள் தானப்பயன் கூறும்வழிக்காண்க. ஈட்டுதலால் ஒருங்கு தொக்கன்ன பண்

டம் வழங்கத்தவா வளத்ததென ஒட்டுக. ‡குலத்திற்குன்றுதல் -

பூப்பின்கட்பிரிதல்;

அன்றி ‡ நடுவின்றி நன்பொருள் வெஃகலுமாம்.

குலத்திற்குன்றுமை - § "நெடுநுக

த்துப் பகல்போல, நடுவுநின்ற நன்னெஞ்சினோர், வடுவஞ்சி

வாய்மொழிந்து, தமவும் பிறவு மொப்ப நாடிக், கொள்வதூஉ

மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொ

டாது" என்பதெனக் கொள்க. செல்வர் - இருவர் பிதாக்களும்.

மாநகர், வளத்ததாகலின் ஒக்கும்படி செல்வர்க்குத்தோன்றிய

கண்ணியும் கொழு

நனு மென்க.

கஉ-கரு. மயன்விதித் தன்ன மணிக்கா லமளிமிசை

௧௫ நெடுநிலை மாடத் திடைநிலத் திருந்துழி

இ - ள். அங்ஙனந் தோன்றிய கண்ணியும் கொழுநனும்

மாடத்து இடைநிலை

க்கணனே மயன் நிருமித்துவைத்தாற் போன்ற

மணிக்காலமளிமிசையே இருந்துழி

யென்க.

¦ உழி - அளவு. மயன் - தெய்வத்தச்சன். நெடுநிலை -

கச-உடு. கழுநீ ராம்பன் முழுநெறிக் குவளை
யரும்புபொதி யவிழ்ந்த சுரும்பிமிர் தாமரை
வயற்பூ வாச மளைஇ யயற்பூ
மேதகு தாழை விரியல்வெண் டோட்டுக்
கோதை மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாதுதேர்ந் துண்டு மாதர்வாண் முகத்துப்
புரிகுழ லளகத்துப் புகலேக் கற்றுத்
திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
கோலச் சாளரக் குறுங்க ணுழைந்து

---

* திவாகரம், கஉ - வது.

† போகபூமியிற் பிறந்து போகநுகருமாற்றைப் பின்வரும் திவாகரச்சூத்திரத்தா லுணர்க. "பதினு ருட்டைக் குமரனும் விதிவழிப், பன்னீ ராட்டைக் குமரியு மாகி, யொத்த வன்பினு மொரத நலத்தினுங், கற்பக நன்மர கற்பய னுதவ, வாகிய செய்தவத் தளவு மவ்வழிப், போக நுகர்வது போக பூமி."

‡ திருக்குறள், வெஃகாமை, க: "நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன் றிக், குற்றமு மாங்கே தரும்."

§ பட்டினப்பாலை, உ0சு - உகo.

## உ.—மனையறம்படுத்தகாதை.

வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டுமகிழ் வெய்திக் காதலிற் சிறந்து

இ - ள். முழுநெறியாகிய மேதகு குவளையுடைய அரும்புகள் சுரும்பிமிர இதழவிழ்ந்த கழுநீர்முதலிய நீர்ப்பூக்களின் வாசத்தைக் கலந்துண்டு அவற்றின் வேறாய கோட்டுப்பூமுதலியவற்றுள் தாழையினது விரிந்த வெள்ளிய தோட்டினையும் சண்பகப் பொதும்பரிலுண்டாகிய கோதைபோலும் மாதவிப்பூவின் தாதினையும் ஆராய்ந்துண்டுபோந்து வாண்முகத்து மாதருடைய புரிந்த குழற்சியையுடைய அளகத்துண்டாகிய கலவைமணம்பெறுதற்கு எக்கற்றுப் புகுதற்கு வழிகாணுமற் சுழலுகின்ற சுரும்பொடும் வண்டொடும் மணித்தாமத்தாலே ஒழுங்குபடநிலைத்து வகுத்த அழகினையுடைய சாளரக்குறும்புழையாற் செவ்வியறிந்து நுழைந்துபுக்க சிறு மணவாய்த் தென்றலைக்கண்டு மகிழ்ச்சியெய்திப் புணர்ச்சியைவிரும்பிக் காதன்மிகுதலாலெனக.

சாதிபற்றி ஆம்பலென்றாெனினு மமையும். ஈண்டுக்கூறியது சேதாம்பலென வுணர்க. இஃது அவற்றோடு ஒருதன்மைத்தாகிய பகற்போதன்றெனினும் அலைவிரியுங்காலத்து இது குய்தலின்மையிற கலந்துண்டென்றார். இதழொடிக்கப்படாத சிறு வெனச்வ செவ்விகூறிற்று. * "நீம்பெருங் குளத்து சுனைபூத்த குவளைக், கூம்புவிடு முழுநெறி" என்றார் புறப்பாட்டினும்.

கோதை - மாலை; ஒழுங்குமாம். வெண்டோட்டுத்தாழையுமாம்; சண்பகப்பொதும்பர்க் கோதைமாதவியென்க. பொதும்பர் - மரச் செறிவு. இவை சண்பகத்தோடு மலர்தலின் தேர்ந்துண்டென்றார். வாண்முகத்தளக மென்பாருமுளர். புகல்-புகுதற்கு. ஒடு - ஒருவினை. செவ்விபார்த்து நுழைந்து புக்க உப வென்க. செவ்வி-இவர் மகிழுஞ்செவ்வி. பின்னின்ற உண்டென்பதனை அளைஇ உண்டெனவும், தேர்ந்துண்டெனவும் இரண்டிடத்தும் ஒட்டுக. அன்றி அளைஇ

வண்டோ டுபுக்க தென்றலெனினுமமையும். மணவாய்த்தென்றல் - மணத்தைத் தன்னிடத்தே யுடைய தென்றல்.

அளைஇ உண்டு தேர்ந்தண்டு எக்சற்றுத் திரிதருசுரும்பொடும் வண்டொடும்புக்க ?? தென்றலென்க.

உசு-உஎ. விரைமலர் வாளியொடு வேனில்வீற் றிருக்கு
நிரைநிலை மாடத் தரமிய மேறி

இ - ள். அங்ஙனம் அவர் காதல்மிகுதலாலே இடைநிலத்துநின்றும் மேல்நிரைத்தவகுத்த நிலங்களில் மணத்தினையுடைய மலர்வாளியோடே காமன்வீற்றிருக் கு-கும் வேனிலமாகிய நிலாமுற்றத்தின்மேல் ஏறியென்க.

---

* புறநானூறு, கககூ: "தீம்பெருங் குண்டு சுனைபூத்த குவளைக், கூம்புவிடு முழுநெறி புரள்வரு மல்கு, லேந்தெழின் மழைக்க ணின்னகை மகளிர், புன்மூசு கவலைய முண்மிடை வேலிப், பஞ்சி முன்றிற் சிற்றி லாங்கட், பீரை நாறிய சுரையிவர் மருங்கி, னீத்திலைக் குப்பை யேறி யுமண, ருப்போ யொழுகை யெண்ணுப மாதோ, கோகோ யானே தேய்கமா காலை, பயில்பூஞ் சோலை மயிலெழூஉந் தாலவும், பயிலிருஞ் சிலம்பிற கலைபாய்ந் தகளவுங், கலையுங் கொள்ளா வாகிப் பலவுங், கால மன்றியு மரம்பயம் பகரும், யாண ரறாஅ வியன்மலை யற்றே, யண்ண னெடுவரை யேறித் தந்தை, பெரிய நறவிற் கூர்வேற் பாரிய, தருமை யறியார் போரெதிர்ந்து வந்த, வலம்படு தானை வேந்தர், பொலம்படைக் கலிமா வெண்ணுவோரே." திணை - பொதுவியல். துறை - கையறுநிலை. கபிலர்பாடியது.

வேனில் - ஆகுபெயராற் காமன். பகையின்றிக் கல்வியொடு செல்வத்திடை
நஞ்சுற்றகாம நுகர்ந்திருத்தலின், வாளியும் காமனும் வருத்தாதிருந்தமைதோன்ற
வீற்றிருக்கு மென்றார். இஃது உதாரமென்னு மலங்காரம்; என்னை? * "உதார மெ
ன்ப தோதிய செய்யுளிற், குறிப்பி னொருபொரு ணெறிப்படத் தோன்றல்" என்பது (ரு) அணியியலாகலின்.

உஅ-௩க. சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி
முதிர்கடன் ஞால முழுவதும் விளக்குங்
கதிரொருங் கிருந்த காட்சி போல

௩௦ இ - ள். அங்ஙனம் நிலாமுற்றத்து ஏறினவர்கள் சுரும்புகளுண்டற்குப் பாரித்து
வைத்தாற்போலக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக் கண்ணே கடல்சூழ் ஞாலமுழுவதை
யும் விளக்கும் ஞாயிறும் திங்களும் சேர இருப்பக்கண்ட காட்சிபோல இருந்து கரு
ம்பு வல்லியென்பனவற்றைப் பெரிய தோளிலேயெழுதியென்க.

கரும்பையும் வல்லியையும் தோளில் எழுதியெனவே தொய்யிலொன்றையும் ‹‹ (‹ முலைமேலெழுதி யென்பதாயிற்று. பூவின்செவ்வி கூறுவார், சுரும்புணக்கிடந்த வெ
ன்றார். இனி † அதிகாரப்புறனடையால், உகரங்கெடுத்து உண என்பதனைப் பெ
யர்ப்படுத்துச் சுரும்புகடாம் பலவகையுணவும் உளவழி அவ்வக்காலத்து ஆண்டுச்செ
ன்று ஏறியும் இழிந்தும் சுழன்றும் மெய்வருந்தாது அவையெல்லாம் ஒருகாலத்து ஒரு

வழிபுண் ணும் உணவுகிடந்த தன்மையொத்த பூஞ்சேக்கை யெனவுமமையும். இது
பூக்களின் சாதிப்பன்மையும், செவ்வியுங் கூறிற்ருகும். முதிர்தல் - முற்றுதல்; சூழ்த

லுமாம்; ‡ "நீர்முற்றி மதில்பொரூஉம்" என்ருர் பிறரும்; முதிர்ந்த
கடலுமாம். ஒரு
ங்கிருத்தல் இல்பொருளுவமம். போல இருந்தென
ஒருசொல்வருவிக்க.

இனிப் புணர்ச்சி கூறுவார்:

௩௨-௩௭. வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்டோட்டு மல்லிகை விரியன்
மாலையொடு
கழுநீர்ப் பிணையல் முழுநெறி பிறழத்
தாரு மாலையு மயங்கிக் கையற்றுத்
தீராக் காதற் றிருமுக நோக்கிக்
கோவலன் கூறுமோர் குறியாக்கட்டுரை

இ - ள். அங்ஙனமிருந்தவர்கள், வண்டுகள் புரிநெகிழ்க்க
வாயவிழ்ந்த வெள்
ளிய இதழையுடைய மல்லிகையினது பெரிய இளக்கத்தையுடைய
மாலையோடே
இதழொடியாது கட்டின கழுநீர்ப்பிணையலும் குலைந்தலைய
மார்பிவிட்ட இவ்விரு
வகைமாலையு மயங்கப்பட்டு இருவரும் செயலற்ற
புணர்ச்சியிறுதிக்கண்ணே கோவ
லன் திருமகளைப் போல்வாளுடைய முகத்தைநோக்கித் தனது
அறிவுமுதலியனவற்றைக் குறியாத நலம்பாராட்டலென்னும்

பொருள்பொதிந்த உரையைக் கூற
மென்க.

* தண்டியலங்காரம், பொதுவணியியல், உக.
† தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகரப்புணரியல், எஅ.
‡ கலித்தொகை, மருதம், உ.

## உ.—மனையறம்படுத்தகாதை.

சூகூ

நிலாவிரிந்த-உவமத்தொகை;ஒளியுமாம்.|விரியல்-மலர்ச்சி. பிறழ-சரிய. மயங்கி-மயங்கப்பட்டு; இடக்கர். நிரா - நிர்தலென்னும் விடற்பொருண்மையெதிர்மறை கூறும் - முற்று.|ஓர்-இடைச்சொல். இனிக் குறியாக்கட்டுரை - முன் கருதப்படாத சட்டுரையெனினும் பொருந்தும். கட்டுரை - நலம்பாராட்டலென்னும் பொருள் பொதிந்தவுரை. ரு

ஏறி இருந்து எழுதிப் பிறழ மயங்கிக் கையற்றுக் கூறுமென்க.

அக்கட்டுரை மேற்கூறுவார்.

கூஅ-சக. குழவித் திங்க ளிமையவ ரேத்த
வழுகொடு முடித்த வருமைத் தாயினு
முரிதினின் ஹொ டுடன்பிறப் புண்மையிற்
சுo
பெரியோன் றருக திருநுத லாகென

இ - ள். பிறை, இறைவன் இமையவரேத்தாநிற்கத் தன்முடிக்கு அழகுசெய் தல்காரணத்தாற் சூடிய பெறுதற்கருமையுடைத்தெனினும் அதனை அவன் நினக்குத் திருநுதலாகத் தரக்கடவன்; அஃது எற்றாலெனின், அப் பிறை நின்னோடு உடன்

பிறப்புண்டாகலின் நினக்கு உரித்தாதலானென்க.

பெரியோன் - இறைவன், "உரித லுரிது குறியா வின்ப மெளிதல்" எனவும், "உரிதினிற் கொண்டாங்குப் பெயர்தல் வேண்டும்" எனவும் அகப்பாட்டினுங்கூறி|| னர். திங்கட்குழவியென்றது "சொல்லிய வல்ல பிறவவண் வரினும்" என்னும் மரபியற் புறனடையான் முடியும். *"அப்பிறை, பதினெண் கணனு மேத்தவும்
படுமே" என்றார் புறப்பாட்டினும். அருஃமத்து - அஃறிணை வினைக்குறிப்பு உ முற்று. தருகவென்றது சூடினபிறை இரண்டகலையாதலின், அதனை எண்ணாட்டிங் களாக்கித் தருகவென்பது கருத்து ; என்னை † "மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்
துப், பசுவெண் டிங்க டோன்றி யாங்குக், கதுப்பயல விளங்குஞ் சிறுநுதல்" என்று
ராகலின். இதனுன் மேற் கூறுகின்ற கரும்பையும் வச்சிரத்தையும் அவ்வவ் வுறுப்
புக்கட்கேற்பத் திருத்தி ஈக்க அளிக்க வென்பதாயிற்று; என்றது கரும்பிற்கு நிற உ
னும், வச்சிரத்துக்கு நேர்மையும் உண்டாக்கியென்றவாறு. இஃது எதிரதுபோற்ற|
லென்னும் தந்திரவுத்திவகை.

இங்ஙனங்கூறினர் ; பிறை திருவொடு பாற்கடலிடைப் பிறத்தலின், இவளைத்
திருமகளாகமதித்து.

---

* புறநானூறு, கடவுள்வாழ்த்து. "கண்ணி

கார்நறுங் கொன்றை காமர், வண்ண
மார்பிற் றாருங் கொன்றை, யூர்தி வால்வெள் ளேறே சிறந்த, சீர்கெழு கொடியு மவ்
வே றென்ப, கறைமிட றணியலு மணிந்தன் றக்கறை, மறைநவி லந்தணர் நுவலவும்

படுமே, பெண்ணுரு வொருதிற னாகின் றவ்வுருத், தன்னு ளடக்கிக் கரக்கினுங் கரக்
கும், பிறைநுதல் வண்ண மாகின் றப்பிறை, பதினெண் கணனு மேத்தவும் படுமே,
யெல்லா வுயிர்க்கு மேம மாகிய, நீரற வறியாக் கரகத்துத், தாழ்சடைப் பொலிந்த
வருந்தவத் தோற்கே." பாரதம்பாடிய பெருந்தேவனர் பாடியது.

† குறுந்தொகை, கஉக. "எருவ சிறுஅ ரேமஞ்சு நண்ப, புலவர் தோழ
கேளா யத்தை, மாக்கட லடுவ ணெண்ணுட் பக்கத்துப், பகவெண் டிங்க டோன்றி
யாங்குக், கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல், புதுக்கோ ளியானையிற் பிணித்தற்று
லெம்மே." என்று தலைமகன் பாங்கற்குரைத்தது. கோப்பெருஞ் சோழன் பாடியது. எ



சஉ-சரு. ‡அடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
¦படைவழங் குவதோர் பண்புண் டாகலி
னுருவி லாள னொருபெருங் கருப்புவி
லிருகரும் புருவ மாக வீக்க
௫

இ - ள். அநங்கன் போர்செய்தற்கு எடுத்த ஒப்பில்லாத கருப்புவி லொன்றை
யும் நினக்குக் கரிய இருபுருவமாகத் திருத்தித் தரக்கடவன்; அஃதெற்றாலெனின்,
பகைவர்முனையிடத்தே மன்னனை மேம்படுப்பார்சிலர்க்குப்

படைக்கலமுதவிய

கொடுத்தல் அரசர்க்கு இயல்பாதலானென்க.

தன்னால் ஒறுக்கப்படாததெவ்வேந்தரை அழிக்குங்கால் இவருறப்பாகியபடைக்

கீழ கலங்கொண்டன்றி அழிக்கலாகாமையிற் கூறினர். ஈக்க ''

ஈத்துவக்கும்'' என்

ருற்போலநின்றது. முனிவராகிய மூரட்பகையை அழித்தற்கு வல்வில்லை வேண்டு

தலின், ஒருபெருங்கருப்புவில்லென்றார். என்றது காமனுக்குக் *காமநூலும் ஆலேயும்

வில்லாதலின், அதன் வன்மைகூறினர்.

ஒருபெருங்கருப்புவில் இருகரும்புருவ

மென்றது சேமவில்லையுங்கூட்டி ; † "

வானோர்......வேண்டினன்" என்றாராகலின். கூ சகூ-சஅ.

மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலிற்

றேவர் கோமான் றெய்வக் காவற்

படைநினக் களிக் கவத னிடைநினக்

கிடையென

இ - ள். இந்திரன் அசுரரையழித்துச் சுரரைக் காத்தற்காக வெடுத்த வச்சிரப்

படையை நினக்கு இடையாகவெனத் திருத்தித் தாககட்டீவன் ; அஃது எற்று ?; ? லெனின், இமையவர்க்கு மரணமின்மையைப் பயக்கும் அமிழ்திற்கு நீ முற்பிறத்

தலானென்க.

ஆகவென ஒருசொல் வருவிக்க. மூவா - மூத்தவென்னும் பெயரெச்ச வெதிர்

மறை. ‡ எனவே மூப்புக்கும் பிணிக்கும் மருந்தென்பதாயிற்று ;

என்றது அமிர்தத்

னை. மருந்தின் - உருபுமயக்கம். நீ அமுதாகலின், நினக்குமுன்னர் வச்சிரம் பிற

ரு த்தலாலெனினுமமையும். வச்சிரமும் அமுதமும் கடல்கடைகின்ற காலத்துப்

பிறந்தவெனப் புராணங்கூறும். வச்சிரம் இருதலைச்சூலமாய் நடுவு பிடியாயிருத்த

லான் அதனிடையை நுசுப்புக்கு உவமங்கூறுப. இறைவன் காமன் இந்திரனென்னு

மிவர், பிறை கரும்பு வச்சிரமென்னுமிவற்றை நுதல் புருவம் இடையாகத் தருக

ஈக்க அளிக்க உடன்பிறப்புண்மையிற் பண்புண்டாகலின் முன்னர்த் தோன்றலி

ற்று னென உய்த்துணர்க.

சகூடுஉ. அறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியு

மிறுமுறை காணு மியல்பினி னனரே

---

* காமநூல் - பூவிசேடம். இதனை மன்மததந்திரமென்பர் வடநூலார். இது

மன்மதனுக்கு வில்லென்பதை அரவிசயத்திற் காண்க.

† சீவகசிந்தாமணி, சுரமஞ்சரியாரிலம்பகம், எக : "வானார் கமழ்மதுவுஞ்

சாந்து மேந்தி மதுத்துளித்து வண்டிஞ் சுரும்பு மூசுந், தேனார்பூங் கோதாய் நினக்

குக் காமன் சிலையிரண்டுஞ் செவ்வனே கோலித் தந்தான், மூனாரப் பண்ணித் தடா

நீக்கித் தன்குருதி தோய்த்துத் தசைமை சான்ற, ஆனுர்ந்த வோரிணை யம்புர் தம்
தானென்னை யுளனுக வேண்டி னே."

## உ.—மனையறம்படுத்தகாதை.

ருக

யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது

இ - ள். முருகவேள் தன்கையில் அழகிய சுடராயுடைய நெடிய வேலொன் றையும் நின்முகத்து மழைக்கண் இரண்மோம்படி ஈதற்குக் காரணம் வேறில்லையாக வும் ஈத்தது யான் இறந்தபடுமுறைமையைத் தன்கண்ணாற் காணவேண்டுதல் கார ( ணத்தானென்க.

* "துள்ளுநர்க் காண்மார்" என்றாற்போல.
பெறுமுறையின்றியும் - அவ்வாறு தானீன்றது ஈத்தற்கு உரிமையின்றாகவும். வேலொன்று இரண்டாக வீத்தல்-திருமி/ த்தத்தருதல். †"ஒக்கிய முருக னெஃக மொன்றிரண் டனைய கண்ணுள்" என்று ராகலின். இனிப் பெறுமுறை யின்றியுமென்பதற்குத் தனக்குப் பெறுங்கூறு ஒன் ரும் இல்லையாகவுமெனினுமமையும். இறுமுறை - முடியுமுறை; வருந்துந்தன் மை யெனினுமமையும். இவை ‡ புகழுவமையலங்காரம்; அஃதாவது "இறை யோன் சடைமுடிமே லெங்காளுந் தங்கும், பிறையேர் திருநுதலும் பெற்ற - தறை புனல்சூழ், எனவரும்.
பூவலயந் தாங்கு மரவின் படம்போலும், பாவைநின் னல்குற் பரப்பு"
கூ (

இவற்றுட் புலனாய் எழுதப்பட்ட உறுப்புக்களைப் பாராட்டி, இனிக் கட்புலனாயும் ஆகாதமாய் எழுதப்படாதன பாராட்டுவான்.

ருஅ-சுஅ. மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞைநின்
சாயற் கிடைந்து தண்கா னடையவு
மன்ன நன்னுதால் மென்னடைக் கழிந்து
2_
நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவு
மளிய தாமே சிறுபசுங் கிளியே
குழலும் யாழு மமிழ்துங் குழைத்தநின்
மழலைக் கிளவிக் கு வருந்தின வாகியு
மடநடை மா துநின் மலர்க்கையி னீங்கா
2(
துடனுறைவு மரீஇ யொருவா வாயின

இ-ள். நன்னுதால், மாதே, மயிற்குலம் நின்னுடைய சாயற்கு எதிர்ந்துவந்து பொருது தோற்றுத் தண்ணிய காட்டிடத்தேபோய் ஒடுங்காநிற்கவும், அன்னம் மெல்

* கலித்தொகை, பாலை, ௪. "வலிமுன்பின் வல்லென்ற யாக்கைப் புலிநோக்கிற், சுற்றமை வில்லர் சுரிவளர் பித்தைய, ரற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாங், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துன்னூனக் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலிற், புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை, வெள்வேல் வலத்திர் பொருடால் வேட்கையி, னுள்ளினி ரென்ப தறிந்தன ளென்றோழி."

† சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், கஉசு: "நோக்கினு ணிறைய நாணு மாமையுங் கவினு நொய்திற், போக்கினள் வளையும் போர்த்தாள் பொன்னிறப் பசலை மூழ்கிற், றூக்கினு ளகங்க னப்புத் தூணியை யமரு ளாநு, நோக்கிய முருகன் வைவே லோரிரண் டனைய கண்ணாள்."

‡ புகழுவமையாவது உவமையைப்புகழ்ந்துவமிப்பது.



விய நடையினைக்கண்டு எதிர்ந்துவந்து தோற்றுத் தனதுநடையழிந்து நல்லநீர்பொரு

ந்தின பண்ணையிற் செறிந்த மலரிற்புக்கு மறையவும், சிறிய பசிய கிள்ளைகள்தாம்

குழலிசையினையும் யாழிசையினையும் அமுதத்தினையும் கலந்து குழைத்தாலொத்த

கினது முதிராத மழலைக்கிளவிக்கு எதிர்ந்துவந்து தோற்றனவாயும் கின்னை வழிபட்டு

3 அக்கிளவி கற்பக்கருதி கினதுகையினின்றும் நீங்காவாய் கின்னுடனே வெறுப்புத்

தோன்றாமல் உறைதலையும் பொருந்திப் பிரியாவாயினவாகலின், இக்காள் அளிக்கத்

தக்கனகாணென்றுனென்க.

மாயிரு - *"கோயில்" போலநின்றது; அதிகாரப்புறனடைவிதி. மா - கருமை.

இருமை - பெருமை. மணி - நீலமணி. † சாயல் - மென்மை. தண்கான் - இழிந்த

௩௦ காடு. கன்னுதால்- ‡ "என்சிய விரண்டி னிறுதிப் பெயரே, நின்ற வீற்றய னீட்டம்

வேண்டும்" என்பதனுல் நீட்டித்தது. களி - செறிவு. செறிதல் - ஒடுங்குதல். குழை

த்த-இல்பொருளுவமை; § "கரும்புந் தேனு மமிழ்தும் பாலுங் கலந்த தீஞ்சொல்"என்

றாற் போல.

இனிக் குழைத்த - குழைவித்தவெனினுமமையும்; வருத்தியவென்பதாம.
\ "குழைமுற்றின வாழைக் கொழுங்கனி குழைத்தும்" என்றாராகலின். மாது - முன்
ரு௫ னிலைவிளி; ||"ஓவு முவ்வு மேயொடு சிவணும்" என்பதனுன் முடிந்தது.

அடையவும், செறியவுமே இவை ஒருவ யாயினவாகலான் அளியவென்க.

கிளியும் இவள்வளர்ப்பன பலவாகலாற் பன்மைகூறினர்.

கூ௨-கூச. நறுமலர்க் கோதைநி னலம்பா ராட்டுநர்
மறுவின் மங்கல வணியே யன்றியும்
2.0 பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்

இ - ள். இத்தன்மையையாகிய கோதாய், நின்னைப் புனைந்து அழகுசெய்யும

களிர் குற்றமற்ற நினது புனையாத அழகன்றியு ம் வேறுசில அணிகளை அணிந்ததனுற்

பெற்ற உதவி யாதுதானென்றுனென்க,

¶ "ஐயா யாகும்" என்பதனுற் கோதை கோதாயென விளியேற்றது. மங்கல உ௫ வணி - மங்கலியமென்பாருமுளர்.

---

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், கஉகூ: "கந்து மாம ணித்திரள் க

டைந்து செம்பொ னீள்கவர், சந்து போழ்ந்தி யற்றிய தட்டு வேய்ந்து வெண்பொனு,

விந்தி ரன்றி ருசக ருரிமை யோடு மிவ்வழி, வந்தி ருந்த வண்ணமே யண்ணல்

கோயில் வண்ணமே."

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், உகூ.

‡ „ „ விளிமரபு, உஎ.

§ சீவகசிந்தாமணி, இலக்கணையாரிலம்பகம், சுக:

"கரும்புந் தேனு மமிழ்

தும் பாலுங் கலந்த தீஞ்சொன் மடவாட், கரும்பு மிலையு மயங்கி யாய்ந்த முல்லைச்

சூட்டு மிலைச்சித், திருந்து திங்கள் சூழ்ந்த மின்னிற் செம்பொற் பட்டஞ் சேர்த்தி,

விரும்பு முத்த மாலை நான்ற விழுப்பொன் மகரஞ் செறித்தாள்."

‖ தொல்காப்பியம், சொல்லதிகாரம், விளிமரபு, ரு.

¶ „ „ „ சு.

## உ.—மனையறம்படுத்தகாதை.

ரு

சுரு-சுசு. பல்லிருங் கூந்தற் சின்மல ரன்றியு
மெல்லவிழ் மாலையொ டென்னுற் றனர்கொல்

இ - ள். பலவகைத்தாகிய கூந்தலிற் சிலமலரைப்பெய்தலேயன்றி அதன்மேலும் ஒளிபொருந்தி அவிழ்கின்ற மாலையைப் புனைதற்கு அந்தமாலையோடு அவர்கள் என்ன உறவுடையார்களோ வென்றுனென்க.

ரு

[சின்மலர் - மங்கலமலர்; கற்புமுல்லை முதலியவை; அருச்சனை மலருமாம்.]

சுஎ-சுஅ. [நான நல்லகி னறும்புகை யன்றியு
மான்மதச் சாந்தொடு வந்ததை யெவன்கொல்

இ - ள். அவர், கூந்தற்கு செய்யையுடைய நல்ல அகிற்புகையை யூட்டுதன் மேலும் மான்மதச்சாந்தை அணிதற்கு அதனோடு

தமக்குளதாகிய அந்தக்கண்ணோட் கூடம் யாதுதானென்றுனென்க.

மான்மதம் - கத்தூரி.

சுகூ-எ0. திருமுலைத் தடத்திடைத்|தொய்யி லன்றியு
மொருகாழ் முத்தமொ டுற்றதை யெவன்கொல்

இ - ள். அவர் அழகிய முலைத்தடத்தின்மேல்|
தொய்யிலெழுதுதன்மேலும் கூடு தனிமுத்துவடத்தைப் பூட்டுவதறகு அதனோடு அவர்கருண்டான கெழுதகைமை யாதுதானென்றுனென்க.

| கெழுதகைமை-உரிமை. திரு- * முலைமேறறோன்றும் வீற்றுத்தெய்வம். தடம்- பரப்பு.| தொய்யில்-பத்திகீற்று. காழ - வடம. முத்தக்காழென மாறுக.

எக-எ௨. திங்கண்முத் தரும்பவுஞ் சிறுகிடை வருந்தவு
௨ ௰

மிங்கிவை யணிந்தன ரென்னுற் றனர்கொல்

இ - ள். இங்ஙனமாகிய மங்கலவணியும் சின்மலரும் அகிற் புகையும் தொய்யி லும் பாரமாய் அரும்பவும் வருந்தவும் இவ்விடத்து இவைகளவைத்தும் இவர்கள் பிறிதணியும் மாலையும் சாந்தும் முத்தும் அணிந்தாராகலின், அவாகள் என்னபேய் கொண்டார்களோ வென்றுனென்க. ௨௫

எங-எச. மாசறு பொன்னே......................தேனே

எங. மாசறுபொன்னே—இ - ள் கட்கினிமையான் மாசறவோடிய பொன்னை யொப்பாய்;

எங. வலம்புரி முத்தே—இ-ள். ஊற்றின் இன்பத்தான்முத்தையொப்பாய்;

மரபின் தூய்மைகூறுவான் வலம்புரிமுத்தென்றான்.|
ங

எச. காசறு விரையே—இ - ள் உயிரப்பின் இனிமையாற் குற்றமற்ற விரையையொப்பாய்;

௭௪. கரும்பே—இ-ள். சுவையினினிமையாற் கரும்பை யொப்பாய்;

௭௪. தேனே—இ-ள். இனியமொழியையுடைமையால் தேனையொப்பாய்;

---

* "ஆமணங்கு குடியிருந் தஞ்சணங்கு பார்த்தனவே" என்றார் சிந்தாமணி யிலும்; நாமகளிலம்பகம், ௧௪௨.



இவற்றாற்சொல்லியது, ஒளியும் ஊறும் நாற்றமும் சுவையும் ஓசையுமாகலின்,

* "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள"

என நலம்பாராட்டப்பட்டன.

௭௫-அக. அரும்பெறற் பாவா யாருயிர் மருந்தே
௫ பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா வமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா விசையே யென்கோ
தாழிருங் கூந்தற் றையா னின்னையென்
௮௦ றுலவாக் கட்டுரை பலபா ராட்டி

இ-ள். பாவாய், மருந்தே, மடமகளே, தையால், நின்னை யான் மணியே

† யென்கோ! அமுதேயென்கோ! இசையேயென்கோ! எனச் சொல்லித்தொலை

யாத நலம்பாராட்டாகிய பொருள்பொதிந்த உரையைப் பலபாராட்டியென்க.

| உயிர்மருந்து - மிருதசஞ்சீவினி. இவற்றாற்சொல்லியது

என்னையெனின்,— சீ\'\' காட்சியின் உயிர்மயக்குறுதலிற்
கொல்லியிற்பாவாயென்றும், அவ்வாறு அழியுமுயி
னா இமைப்பிற் றருதலின் ஆருயிர்மருந்தேயென்றுங்கூறி,
மலையிடைப்பிறக்குமணி
நுழையாமையின் அதிற்பிறவா மணியே யென் பேனே,
அலையிடைப்பிறக்கும் அமிர்
திற்கு இவ்வடி வின்மையின் அதனிற் பிறவாத
அமுதேயென்பேனே, யாழ் கட்கின்
ஞதாகலின் அதனிடைப்பிறவாத
இசையேயென்பேனேவெனத் தெரிதருதேற்ற உ ப வுவமையென்னு
மலங்காரமும், மலை கடலென விரோதமும், பின்வருநிலையென்னு
மலங்காரமும் புலப்படுத்தினரௌவுணர்க.

அஉ-அரு. தயங்கிணர்க
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்து

செல்வுழிநாள் இ - ள். வயங்கிணர்த்தாரோன் இங்ஙனம்
உடு செல்லாநின்றநாளிலே ஒருநாள்,
கோதையொடு தருக்கி மகிழ்ந்து
தயங்கல் வயங்கலிரண்டும் விளக்கமாதலிற் பரியாயமென்னும்
அலங்காரமும்,
தலையாய எதுகைத்தொடையின்பமும் புலப்படுத்தினமையுணர்க.

அசு-கூ०. வாரொலி கூந்தற் பேரியற் கிழத்தி
மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண்
ரூ०
வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண
வுரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க

யாண்டுசில கழிந்தன விற்பெருங் கிழமையிற்
காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கென

௨௫ இ-ள். நீண்டு ஒலித்த கூந்தலையுடைய வீரபத்தினியை இருநிதிக்கிழவன்

---

* திருக்குறள், புணர்ச்சிமகிழ்தல், க.
† என்கோ-என்பேனோ.

## உ.—மனையறம்படுத்தகாதை.

௫௫

மனைக்கிழத்தி, | சுற்றந்தழாலோடே | துறவறத்திற்குச் செய்யும் பரிசாரமும், விருந்தினைப் புறங்கண்டுபுகுதலும் ஒழிந்த செய்கைகளு மாகிய இவற்றோடுபொருந்திய இல்வாழ்க்கையைப் பலபடைப்பாகிய செல்வத்தோடே நடத்திக் கைவந்த உயர்ச்சி பெறுதலைக் காணவேண்டி அடிமைத்திரளோடே வேறேகூட்ட, அத்தைக் கண்டகண் அங்ஙனம் காட்சிதகும் சிறப்பினையுடைய கண்ணகிக்கு இற்பெருங்கிழமையிற் ௫

சிலவாண்டு கழிந்தனவென்க.

மறப்பு - பெ:ச்சாப்பு. இதனை எல்லாவற்றோடு மொட்டுக. இதன்கருத்து: கேண்மையோ டெனவே சுற்றந்தழாலும், அறப்பரிசாரமு மெனவே அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும் துறவோர்க்கெதிர்தலுமென்பதாயிற்று. இவற்றோடே பொருந்திய வாழ்க்கையெனவே அருளுடைமை, அன்புடைமை, இனியவைகூற க்முதலிய இல்லறப்பகுதி யெல்லாமடங்கும். இக்கருத்தானன்றே, கொலைக்களக் காதையிற் கண்ணகியார், * "அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலுந், துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின், விருந்தெதிர் கோடலு மிழந்த வென்னை" என்றது மென்க. கூந்தலையுடைய பேரியற்கிழத்தி யெனினுமமையும். பேரியற்கிழத்தி-கோவலன்மாதா. கண்ணகிர்குச் சிலயாண்டு கழிந்தனவெனவே மாதவிக்குப் பலயாண்டு கழிதலும் கொள்ளப்பட்டது. இன்னும் மேற் கனாத்திறமுரைத்தகாதையில், தேவந்தி † "கண்ணகி நல்லாளுக் குற்றகுறை யுண்டென்று" என்புழி எச்சவும்மை விரிக்க இவட்கு அவ ர் இளமைப்பருவந்தொடங்கி நிகழும் பார்ப்பனத்தோழியாய் மாநாய்கன் மனைவளர்தலின், ஒருகாலத்தே குடிபுக்குச் செல்கின்றுழிப் பிரிவும் ஒரு காலத்தாயிற் றென்பதாகலின், ‡ "காலீ ராண்டு கடந்ததற் பின்னர்" என்பதனை இருவர்க்குமாக்கி மாதவிக்கு எட்டினிறந்த பலயாண்டு சேறலிற் கண்ணகிக்குச் சிலயாண்டு கழிந்தவெனப் பொருள் கூறலுமொன்று. இதனுன் மிக்க பலமின்று; ஏற்குமேற் கொள்க. இது பொலி.

§ செல்வர்க்குத்தோன்றிய கண்ணியும் கொழுநனும் தென்றலைக் கண்டு மகிழ்ந்து சிறந்த எழிக் காட்சிபோலச் சேக்கையிலிருந்து எழுதி மயங்கிக் கையற்று முகநோக்கிக் குறியாக்கட்டுரை கூறுகின்றவன், திங்கள் முதலியவற்றை முதன்முதலில் வரச்சொல்லிப் பலபாராட்டி மகிழ்ந்து செல்வுழி ஒருநாள் பேரியற்கிழத்தி புணர்க்கக் கண்ணகிதனக்குப் பெருங்கிழமையோடு ஆண்டு சில கழிந்தனவெனக்கூட்டுக.

எல்லாவடியும் கோடியாய் வந்து முடிதலின், இது நிலைமண்டிலவாசிரியப்பா.

பருந்துநிழலுமென ... ... ... அடியார்க்குநல்லானென்பான்.

ஒருந்தமிழ் ... ... ... ... நிரம்பையர்காவலனே.

காற்றை ... ... ... ... ... சொல்வித்ததே.

மனையறம்படுத்தகாதை முற்றிற்று.



* கொலைக்களக்காதை, ஏக - எரு.

† கனுத்திறமுனைத்தகாஸ்த, சுக.
‡ வரந்தருகாதை, அகு.
§ இம்முடிபிலுள்ள செய்தனெச்சஞ்சிலவற்றைச்

செயவெனெச்சத்திரிபாகக்

கொள்க.

# மூன்றாவது

# அரங்கேற்றுகாதை.

[கூத்தியதமைதி.]

தெய்வ மால்வரைத் திருமுனி யருள
வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு
தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
ரு சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோண் மடந்தை
தாதவிழ் புரிகுழன் மாதவி தன்னை
யாடலும் பாடலு மழகு மென்றிக்
கூறிய மூன்றி னொன்று குறைபடாம
கய வேழாண் டியற்றியோ ரீரா றாண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி

[ஆடலாசிரியனமைதி.]

யிருவகைக் கூத்தி னிலக்கண மறிந்து
பல்வகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோ ராடலும் பாட்டுங் கொட்டும் கரு
விதிமாண் கொள்கையின் விளங்க வறிந்தாங்
காடலும் பாடலும் பாணியுந் தூக்குங்
கூடிய நெறியின கொளுத்துங் காலைப்
பிண்டியும் பிணையலு மெழிற்கையுந் தொழிற்கையுங்
கொண்ட வகையறிந்து கூத்துவரு காலைக்
கூடை செய்தகை வாரத்துக் களைதலும்
வாரஞ் செய்தகை கூடையிற் களைதலும்
பிண்டி செய்தகை யாடலிற் களைதலு
மாடல் செய்தகை பிண்டியிற் களைதலுங்
குரவையும் வரியும் விரவல செலுத்தி
யாடற் கமைந்த வாசான் றன்னொடும்

[இசையாசிரியனமைதி.]

யாழுங் குழலுஞ் சீரு மிடறுந்
தாழ்குரற் றண்ணுமை யாடலொ டிவற்றி

**௩.—அரங்கேற்றுகாதை.**

ருள.

னிசைந்த பாட லிசையுடன் படுத்து

வரிக்கு மாடற்கு முரிப்பொரு ளியக்கித்
தேசிகத் திருவி ஞேசைகடைப் பிடித்துத்
தேசிகத் திருவி ஞேசை யெல்லா
மாசின் றுணர்ந்த வறிவின ஞகிக்
கவியது குறிப்பு மாடற் ஞெருகுதியும்
பகுதிப் பாடலுங் கொளுத்துங் காலே
வசையறு கேள்வி வகுத்தனன் விரிக்கு
மசையா மரபி னிசையோன் ருனு
[கவிஞனமைதி.]
மிமிழ்கடல் ......ப்பிற் றமிழக மறியத்
தமிழ்முழு தறிநத தன்மைய ஞகி
வேத்தியல் பொதுவிய வென்றிரு திறத்தி
ஞட்டிய நன்னூ னனகு கடைப்பிடித்
திசையோன் வக்கிரித் திட்டதை யுணர்ந்தாங்
கசையா மரபி னதுபட வைத்து
மாற்ருேர் செய்த வசைமொழி யறிந்து
நாத்தொலே வில்லா நன்னூற் புலவனு
[தண்ணுமையோனமைதி.]
மாடல் பாட லிசையே தமிழே
பண்ணே பாணி தூக்கே முடமே
தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து
கூடை நிலத்தைக் குறைவின்று
மிகுத்தாங்கு
வார நிலத்தை வாங்குபு வாங்கி
வாங்கிய வாரத் தியாழுங் குழலு
மேங்கிய மிடறு மிசைவன கேட்பக்

கூருகிர்க் கரணங் குறியறிந்து சேர்த்தி
யாக்கலு மடக்கலு மீத்திறம் படாமைச்
சித்திரக் கரணஞ் சிதைவின்று செலுத்து
ருரு மததகு தண்ணுமை யருந்தொழின் முதல்வனுஞ்

[குழலோனமைதி.]

சொல்லிய வியல்பிற் சித்திர வஞ்சனை
புல்லிய வறிந்து புணர்ப்போன் பண்பின்
வர்த்தனை நான்கு * மயலறப் பெய்தாங்
கேற்றிய குரலிளி யென்றிரு நரம்பி

---

* மயலறத்தெரிந்தென்றும் பாடம்.

அ



சுo ணொப்பக் கேட்கு முணர்வின னாகிப்
பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து
தண்ணுமை முதல்வன் றன்னொடும் பொருந்தி
வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்
கிசையோன் பாடிய விசையி னியற்கை
சுரு வந்தது வளர்த்து வருவ தொற்றி
யின்புற வியக்கி யிசைபட வைத்து
வார நிலத்தைக் கேடின்று பார்த்தாங்

கிர_ நிலத்தி னெழுத்தெழுத் தாக
வழுவின் றிசைக்குங் குழலோன் றானு

[யாழாசிரியனமைதி.]

மீரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியி
னோரேழ் பாலை நி..த்தல் வேண்டி
வன்மையிற் கிடந்த தார பாகமு
மென்மையிற் கிடந்த குரலின் பாகமு
மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக்
கைக்கிளை யொழிந்த பாகமும் பொற்புடைத்
தளராத் தாரம் விளரிக் கீத்துக்
கிளைவழிப் பட்டன ளாங்கே கிளையுந்
தன்கிளை யழிவுகண் டவள்வயிற் சேர
வேனை மகளிருங் * கிளைவழிச் சேர
மேல துழையிளி கீழது கைக்கிளை
வம்புறு மரபிற் செம்பாலை யாய
திறுதி யாதி யாக வாங்கவை
பெறுமுறை வந்த பெற்றியி னீங்காது
படுமலை செவ்வழி யரும்பா லையெனக்
குரல்குர லாகத் தற்கிழமை திரிந்தபின்
முன்னதன் வகையே முறைமையிற்
றிரிந்தாங்
கிளிமுத லாகிய வெதிர்படு கிழமையுங்
கோடி விளரி மேற்செம் பாலையென
நீடிக் கிடந்த கேள்விக் கிடக்கையி
னிணைநிரம் புடையன வணைவுறக்
கொண்டாங்

யாழ்மேற் பாலை யிடமுறை மெலியக்
குழன்மேற் கோடி வலமுறை மெலிய
வலிவு மெலிவுஞ் சமனு மெல்லாம்
பொலியக் கோத்த புலமை யோனுட

* இளிவயிற்சேரவென்றும் பாடம்.

## ௩.—அரங்கேற்றுகாதை.

௫௧

[அரங்கினமைதி.]

னெண்ணிய நூலோ ரியல்பின் வழாஅது
மண்ணக மொருவழி வகுத்தனர் கொண்டு
புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக்
கண்ணிடை யொருசாண் வளர்ந்தது கொண்டு
நூனெறி மரபி னரங்க மளக்குங்
கோலள விருபத்து நால்விர லாக
வெழுகோ லகலத் தெண்கோ னீளத்
தொருகோ லுயரத் துறுப்பின தாகி
யுத்தரப் பலகையோ டரங்கின் பலகை
வைத்த விடைநில நாற்கோ லாக
வேற்ற வாயி லிரண்டுடன் பொலியத்
தோற்றிய வரங்கிற் றொழுதன ரேத்தப்
பூதரை யெழுதி மேனிலை வைத்துத்
தூணிழற் புறப்பட மாண்விளக் கெடுத்தாங்
கொருமுக வெழினியும் பொருமுக
வெழினியுங்

கரந்துவர லெழினியும் புரிந்துடன் வகுத்தாங்
கோவிய விதானத் துரைபெறு நித்திலத்து
மாலைத் தாமம் வளையுடன் நாற்றி
விருந்துபடக் கிடந்த வருந்தொழி
லரங்கத்துப்

[தலைக்கோலமைதி.]

பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் காம்புநனி கொண்டு
கண்ணிடை நவமணி யொழுக்கி மண்ணிய
நாவலம் பொலந்தக டிடைநிலம் போக்கிக்
காவல் வெண்குடை மன்னவன் கோயி
லிந்திர சிறுவன் சயந்த னாகென
வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணிய பின்னர் மாலை யணிந்து
நலந்தரு நாளாற் பொலம்பூ ணோடை
யரசுவாத் தடக்கையிற் பரசினர் கொண்டு
முரசெழுந் தியம்பப் பல்லிய மார்ப்ப
வரசொடு பட்ட வைம்பெருங் குழுவுந்
தேர்வலஞ் செய்து கவிகை கொடுப்ப
வூர்வலஞ் செய்து புகுந்துமுன் வைத்தாங்



[அரங்கிற்புகுந்தாடுகின்றமுறைமை.]

கியல்பினின் வழாஅ திருக்கை முறைமையிற்
குயிலுவ மாக்க ணெறிப்பட நிற்ப
வலக்கான் முன்மிதித் தேறி யரங்கத்து
வலத்தூண் சேர்தல் வழக்கெனப் பொருந்தி
யிந்நெறி வகையி னிடத்தூண் சேர்ந்த

தொன்னெறி யியற்கைத் * தோரிய மகளிருஞ்
சீரியல் பொலிய நீரல நீங்க
வார மிரண்டும் வரிசையிற் பாடப்
பாடிய வாரத் தீற்றினின் றிசைக்குங்
கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாங்
குழல்வழி நின்றது யாழே யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே முழவொடு
கூடிநின் றிசைத்த தாமந் திரிகை
யாமந் திரிகையோ டந்தர மின்றிக்
கொட்டிரண் டுடையதோர் மண்டல மாகக்
கட்டிய மண்டலம் பதினொன்று போக்கி
வந்த முறைமையின் வழிமுறை வழாமல்
லந்தரக் கொட்டுட னடங்கிய பின்னர்
மீத்திறம் படாமை † வக்காணம் வகுத்துப்
பாற்பட நின்ற பாலைப் பண்மே
னான்கி னொரீஇய நன்கன மறிந்து
மூன்றளந் தொன்று கொட்டி யதனை

யைது மண்டலத்தாற் கூடை போக்கி
வந்த வாரம்வழி மயங்கிய பின்றை
யாறு நாலு மம்முறை போக்கிக்
கூறிய வைந்தின் கொள்கை போலப்
பின்னையு மம்முறை பேரிய பின்றைப்
பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென
காட்டிய நன்னூ னன்கு கடைப்பிடித்துக்

காட்டின ளாதலிற் காவல் வேந்த
†னிலைப்பூங் கோதை யியல்பினின் வழாமைத்
தலைக்கோ லெய்தித் தலையரங் கேறி

---

* தோரியமகளுமெனவும் பாடம்.
† வர்த்தனைவகுத்தென்றும் பாடம்.

க: மு. தொல். புணர். சூ. கஅ - ரு.
இ-வி. பக். கூக

பக் ௩௭௪

* விதிமுறை கொள்கையி னாயிரத் தெண்கழஞ்
சொருமுறை யாகப் பெற்றன ளதுவே
நூற்றுப்பத் தடுக்கி யெட்டுக் கடைநிறுத்த
வீறுயர் பசும்பொன் பெறுவதிம் மாலை ;
மாலை வாங்குனர் சாலுநங் கொடிக்கென
மானமர் நோக்கியோர் கூனிகைக் கொடுத்து
நகர நம்பியர் திரிதரு மறுகிற்
பகர்வனர் போல்வதோர் பான்மையி னிறுத்த
மாமலர் நெடுங்கண் மாதவி மாலை
கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு
மணமனை புக்கு மாதவி தன்னோ
டணைவுறு வைகலி னயர்ந்தனன் மயங்கி
விடுத லறியா விருப்பின னாயினன்
வடுநீங்கு சிறப்பிற்றன் மனையக மறந்தென.

எண்ணு மெழுத்து மியலைந்தும் பண்ணான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்று - மண்ணின்மேற்
போக்கினாள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவிதன்
வாக்கினா லாடரங்கின் வந்து.

---

[கூத்தியது அமைதி.]

க - கக. தெய்வமால்வரை........காட்டல்வேண்டி

உ ய

க-எ. தெய்வ மால்வரைத் திருமுனி யருள
வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு
தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய

மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய

உ௫

பிறப்பிற் குன்றாப் பெருந்தோண் மடந்தை
தாதவிழ் புரிகுழன் மாதவி தன்னை

தெய்வமால்வரை - தெய்வத்தன்மையையுடைய
பெரியவரையென உருபுதொக்கது. வரை - பொதியில்; திருமுனி - அகத்தியன். வரை பொதியிலாதலும், திரு முனி அகத்தியனாதலும் பெறுமாறு என்னை? இமயமும் இறைவனுமாகற்பாலவெ
னின்,—அற்றன்று; மேல், † "திருமுனி யருள, வெய்திய சாபத் திந்திர சிறுவ னொடு, தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய" என இக்காதையிலும், ‡ "நயந்தெரி பா டலுந், தோரிய மடந்தை வாரம் பாடலு, மாயிரங் கண்ணோன் செவியக நிறைய, நா டக முருப்பசி நல்கா ளாகி, மங்கல மிழப்ப வீணை மண்மிசைத், தங்குக விவளெனச்

* விதிமுறையாகியவென்றும் பாடம். † அரங்கேற்றுகாதை, க - ரூ.

‡ கடலாடுகாதை, கஅ-உகி.



சாபம் பெற்ற, மங்கை மாதவி வழிமுதற் றோன்றிய, வங்கா வல்குல்" எனக் கட
லாடு காதையிலும் கூறினாராதலானும், நான்முகத்துள்ளும் "இருந்திய பொதியி லரு
ந்திற லகத்தியன், சுந்தர மணிமுடி யிந்திரன் மகனை, மாறு விறலோய் வேணு வா

கென, விட்ட சாபம் பட்ட சயந்தன், சாப விடையெமக் கருடவத் தோயென்று, ௫ மேவினன் ெறழுது மேதக வுரைப்ப, வருந்தவ மாமுனி தமிழ்க்கூத் தியர்க்குத்,

திருந்திய தலைக்கோற் றானந் தீருமென், றவனினி துரைப்ப வாகிவர் தனனென"

என்றாராகலானும் பொதியிலும் அகத்தியனு மென்பதாயிற் றெனக்கொள்க. அருள

நீங்கியவென்க. அவன் சாபமிட்டருள வென்றுமாம். அருளாற் பாடமாயின், அவ

னதருளாற் சாபநீங்கியவென்க.

௩ ௦ இ - ள். தெய்வத்தன்மையையுடைய பெரிய பொதியின்மலைக்கட் டிருமுனி

யாகிய அகத்தியன் முன்பாலிட்ட *சாபம் இந்திரசிறுவனோடே அம்முனியருளத்

தலைக்கோற்றானத்து நீங்கிய மாறுபடுதலரிய சிறப்பினையுடைய அரம்பையரில் வரி

சையிற் குறைவற்ற நாடகத்தொழிலொடுபொருந்திய உருப்பசியாகிய அம்மாதவி

மரபில்வந்த பிறப்பிற்குன்றுதலில்லாத பெரிய தோளினையும் தாதுகளவிழும் பூக்களை ௬௫ யுடைய கடைகுழன்றுசுருண்ட குழலினையுமுடைய மாதவியாகிய மடந்தைதன்னை

யென்க.

பெருந்தோளென்றார், மகளிர்தோள் பெருத்தல் மரபாதலின். என்னை? † "அக

லல்கு றோள்கண் ணென மூவழிப் பெருகி" என்றாராகலின்.

அ-கூ. ஆடலும் பாடலு மழகு மென்றிக்

௨ ௦ கூறிய மூன்றி னொன்றுகுறை படாமல்

இ - ள். கூத்தும் பாட்டும் அழகுமென்றுசொல்லப்பட்ட

இம்மூன்றினுள்ளும்

ஒன்றுங் குறைவுபடாமல்,

இவை குறைவுபடாமைக்குக் காரணமுடையளாகலினென்க.

௧௦-௧௧. ஏழாண் டியற்றியோ ரீரா றாண்டிற்

௨௩ சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி

இ - ள். ஐயாண்டி ல் தண்டியம்பிடிப்பித்து ஏழாண்டு இயற்றுவித்துப் பன்னி

ராண்டில் வீரக்கழல்சூழ்ந்த காலினையுடைய சோழன்கரிகாற்பெருவளத்தாற்கு அவ

ளவையரங்கேறிக் காட்டலைவிரும்பியென்க.

என்னை ? "பண்ணியம்வைத் தானைமுகன் பாதம் பணிந்துநாட், புண்ணிய வோ

* இந்திரனவைக்களத்து ஒருவனையொருவர் விழைந்து அகத்தியமுனிவராற் சாபம்பெற்ற சயந்தனும் உருப்பசியும் முறையே விந்தமலையில் மூங்கிலாயும், காஞ்சி நகரத்துத் தேவகணிகையாயும் பிறந்தனரென்று, "வானவர் கோமான் வானிடை யிருந்த" என்னும் ஆசிரியப்பாவாற் சுத்தாநந்தப்பிரகாசப்பரதநூலாசிரியர் கூறினர்.

† கலித்தொகை, முல்லைக்கலி, அ. "இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல, வகலல்கு றேனீகண் ணேனழவழிப் பெருகி, நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக், கவலையாற் காமனும் படையிடு வனப்பினே, டகலாங்க ணனைமாறி யலமந்து பெயருங்கா, ணைகைவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட, விக லாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்."

## ந.—அரங்கேற்றுகாதை.

சூ க.

ரை புகன்றனகொண் - டெண்ணியே, வண்டிருக்குங் கூத்தன் மடவரலை யையாண் டிற், றண்டியஞ்சேர் விப்பதே சால்பு" எனவும், "வட்டணையுந் தூசியும் பண்ணமைய வெண்மையாண், டிட்டடெ னீராறுண் டெய்தியபின்-வட்டணையுங், கீதக் குறிப்பு மலங்கார முங்கிளரச், சோதித் தரங்கேறச் சூழ்" எனவும் "நன்னர் விருப்புடையோ ணற்குணமு மிக்குயர்ந்தோள், சொன்னகுலத் தாலமைந்த தொன்மையளாய்ப் - பு பன்னிரண்டாண், டேய்ந்ததற்பி னாடலுடன் பாடலழ கிம்மூன்றும், வாய்ந்தவரங் கேற்றல் வழக்கு" எனவுங்கூறினர் பரதசேனாபதியார்.

[ஆடலாசிரியன் அமைதி.]

௧௨-௨௫. இருவகைக் கூத்தி னிலக்கண மறிந்து
பல்வகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோ ராடலும் பாட்டுங் கொட்டும்
விதிமாண் கொள்கையின் விளங்க வறிந்தாங்
காடலும் பாடலும் பாணியுந் தூக்குங்
கூடிய நெறியின கொளுத்துங் காலைப்
பிண்டியும் பிணையலு மெழிற்கையுந் தொழிற்கையுங்
கொண்ட வகையறிந்து கூத்துவரு காலைக்
கூடை செய்தகை வாரத்துக் களைதலும்
வாரஞ் செய்தகை கூடையிற் களைதலும்
பிண்டி செய்தகை யாடலிற் களைதலு
மாடல் செய்தகை பிண்டியிற் களைதலுங்
குரவையும் வரியும் விரவல செலுத்தி
யாடற் கமைந்த வாசான் றன்னொடும்

இ - ள். இருவகைத்தாகிய அகக்கூத்தின்

இலக்கணங்களையறிந்து பலவகை
ப்பட்ட| புறநடங்களையும் விலக்குறுப்புக்களைச் சேரப்புணர்க்கவும்
வல்லனாகி |அல்லிய
முதற்|கொடுகொட்டியீறாகக்கிடந்த|பதினொருகூத்துக்களும்
அக்கூத்துக்களுக்குரிய ௨௩ பாட்டுக்களும் அவற்றுக்கடைத்த
வாச்சியங்களின் கூறுகளும் நூல்களின் விதித் தவழியே தெரிந்து
கூத்தும் பாட்டும் தாளங்களும் தாளங்களின் வழிவந்த தூக்குக்| களும்
தம்மிற்கூடின நெறியையுடைய |அகக்கூத்தும் புறக்கூத்துமுதலாயின
நிகழ் த்துமிடத்துப் பிண்டி பிணையல் எழிற்கை
தொழிற்கையென்றுசொல்லப்பட்ட நான்| கினையும்
நூலினகத்துக்கொண்ட கூறுபாட்டை யறிந்து அகக்கூத்து
நிகழுமிடத்துக் ே ப |கூடைக்கதியாகச்செய்த கை |வாரக்கதியுட்
புகாமலும் | வாரக்கதியாகச்செய்தகை கூடைக்கதியுட் புகாமலும்
புறக்கூத்துநிகழுமிடத்து ஆடனிகழுமிடத்து அவிநய ! நிகழாமலும்
அவிநயநிகழுமிடத்து ஆடனிகழாமலும், குரவைக்கூத்தும் வரிக்கூத்தும்
தம்மில் விரவாதபடியுஞ் செலுத்தி அமைந்த ஆடலாசிரியனுமென்க.
இது பொழிப்புரை.

கஉ. இருவகைக் கூத்தாவன: வசைக்கூத்து, புகழ்க்கூத்து;
வேத்தியல், பொ ' துவியல்; வரிக்கூத்து,
வரிச்சாந்திக்கூத்து; சாந்திக்கூத்து, விநோதக்கூத்து; ஆரியம், தமிழ்;
இயல்புக்கூத்து, தேசிக்கூத்தெனப் பலவகைய. இவை
விரிந்தநூல்களிற்
காண்க.

கஉ. ஈண்டு இருவகைக் கூத்தாவன: சாந்தியும், விநோதமும். என்னை? "அவை
தாம், சாந்திக் கூத்தும் விநோதக் கூத்துமென், றாய்ந்துற வகுத்தன னகத்தியன்
றனே" என்றாராகலின்.
"சாந்திக் கூத்தே தலைவ னவிநய, மேந்திநின் றாடிய வீரு நடமவை, சொக்க ரு மெய்யே யவிநய நாடக, மென்றிப் பாற்படூஉ மென்மனார் புலவர்" என்பதனால் நாய
கன் சாந்தமாக ஆடி யகூத்துச் சாந்திக்கூத்தெனப்படும். இவற்றுள்,—
சொக்கமென்பது சுத்தநிருத்தம். அது
நூற்றெட்டுக்கரணமுடைத்து.
மெய்க்கூத்தாவது தேசி வடுகு சிங்களமென மூவகைப்படும். இவை மெய்த்
தொழிற்கூத்தாகலின், மெய்க்கூத்தாயின. இவை அகச்சுவைபற்றியெடுத்தலின், கஎ அகமார்க்கமென நிகழ்த்தப்படும். அகச்சுவையாவன: இராசதம், தாமதம், சாத்துவி
கமென்பன. "குணத்தின் வழியதகக் கூத்தெனப் படுமே" என்றார் குணநூலுடை
யார். "அகத்தெழு சுவையா னகமெனப் படுமே" என்றார் சயந்த

நூலுடையாருமென
க்கொள்க.

அவிநயக்கூத்தாவது *நிருத்தக்கை தழுவாது பாட்டி
னதுபொருளுக்குக் கை கூடு காட்டி வல்லபஞ்செய்யும்
பல்வகைக்கூத்து.

நாடகம் - கதைதழுவிவருங் கூத்து.

விநோதக்கூத்தாவது குரவை, கலிநடம், குடக்கூத்து,
கரணம், நோக்கு, தோ
ற்பாவை என்பர். இவற்றுள்,—

குரவையென்பது காமமும் வென்றியும் பொருளாகக்
குரவைச்செய்யுள் பாட்
டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும்
கைபிணைந்தாடுவது; "குரவை
யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலு,
மெய்தக் கூறு மியல்
பிற் றென்ப" என்றாராகலின். குரவை வரிக்கூத்தின் ஒருறுப்பு;
'அவை வந்தவழிக்
கண்டுகொள்க.

கலிநடமென்பது கழாய்க்கூத்து.

குடக்கூத்தென்பது மேற்பதினோராடலுட் காட்டப்படும்.

கரணமாவது படித்தவாடல்.

நோக்கென்பது பாரமும் நுண்மையும்
மாயமுமுதலாயினவற்றை உடையது.

தோற்பாவையென்பது தோலாற் பாவைசெய்து
ஆட்டுவிப்பது.

இன்னும் கழைத்திறச்சுவை யென்பதனோடு ஏழென்பாருமுளர். அஃதாவது
விதூடகக்கூத்து. இதனை வசைக்கூத்தென்பாருமுளர். வசை-வேத்தியல், பொ
துவியலென இரண்டுவகைப்படும்; அவைமுந்துநூல்களிற் கண்டுகொள்க. வெறி

யாட்டுமுதவாகத் தெய்வமேறியாடுகின்ற அத்திறக்கூத்துக்களுங்கூட்டி ஏழென்பாருமுளர். என்னை? "எழுவகைக் கூத்து மிழிகுலத் தோனா, யாட வருத்தன வக த்தியன் றானே" என்றாராகலின்.

---

* கிருத்தக்கை - ௬௦. அவைபின்னர்க் காட்டப்படும்.

## ௬.—அரங்கேற்றுகாதை.

௬௫

௧௨. இவற்றினிலக்கணங்களாவன: * "அறுவகை நிலையும் † ஐவகைப் பாதமும், ‡ ஈரெண் வகைய வங்கக் கிரியையும், § வருத்தனை நான்கு || கிருத்தக்கை மூப் பது, மத்தகு தொழில வாகு மென்ப." இவை விரிப்பிற்பெருகும்.

௧௩. பல்வகைக்கூத்தாவன: வென்றிக்கூத்தும், வசைக்கூத்தும், விநோதக் கூத்துமுதலியன; என்னை? "பல்வகை யென்பது பகருங் காலை, வென்றி வசை டுயே விநோத மாகும்" என்றாராகலின்.

| "அவற்றுள், மாற்று ஞெடுக்கமு மன்னா னுயர்ச்சியு, மேற்படக் கூறும் வென் றிக் கூத்தே."

| "பல்வகை யுருவமும் பழித்துக் காட்ட, வல்ல தாதல் வசையெனப் படுமே."

¶ "எனவிவை தாளத்தி னியல்பின வாகும்."

௫௦

| "விநோதக் கூத்து வேறுபா டுடைத்து, வென் றி விநோதக் கூத்தென விளம்பு வர்." இதன்கருத்து: கொடித்தேர்வேந்தரும் குறுநிலமன்னருமுதலாக உடையோர் பகைவென்றிருந்தவிடத்து விநோதங்காணுங் கூத்தென்பதாம்.

௧௩. விலக்கினிற்புணர்த்து - விலக்குறுப்பினோடு பொருந்துவித்து; இன் - சாரியை; மூன்றனுருபு ஐந்தனோடுமயங்கிற்று; வென்றிக்கூத்துமுதலாகிய பலவகைப்ப சிறு ட்ட புறநடங்களையும் வேந்தவிலக்குப் படைவிலக்கு ஊர்விலக்கென்று சொல்லப்ப

ட்ட விலக்குக்களாகிய பாட்டுக்களுக்கு உறுப்பாய்வருவனவற்றுடனே பொருந்தப் புணர்த்தி. பொருந்தப் புணர்த்தல் - ஈண்டுப் பாட்டுக்களுக்கு வரவுவகுத்தல்.

விலக்குறுப்பாவன: பதினான்குவகைப்படும்; அவை பொருள், யோனி, விரு

* அறுவகைநிலையாவன: க. வைணவம், உ. சமநிலை, ங. வைசாகம், ச. மண்டலம், ரு. ஆலீடம், சு. பிரத்தியாலீடமென்பன.

† ஐவகைப்பாதமாவன: க சமநிலை, உ. உற்கடிதம், ங. சஞ்சாரம், ச. காஞ்சிதம், ரு. குஞ்சிதமென்பன.

‡ அங்கக்கிரியைபதினாறாவன: க. சரிகை, உ. புரிகை, ங. சமகலி, ச. திரிகை, ரு. ஊர்த்துவகலிகை, சு. பிருட்டகம், எ. அர்த்தபிருட்டகம், அ. சுவத்திகம், கூ. உல்லோலம், க0. குர்த்தனம், கக. வேட்டனம், கஉ. உபவேட்டனம், கங. தானபதப்பிராயவிருத்தம், கச. உக்ஷேபணம், கரு. அவக்ஷேபணம, கசு. நிகுஞ்சனமென்பன.

§ வருத்தனைநான்காவன: க. அபவேட்டிதம், உ. உபவேட்டிதம், ங. வியாவர்த்திதம், ச. பராவர்த்திதமென்பன.

|| நிருத்தக்கைமுப்பதாவன: க. சதுரச்சிரம், உ. உத்துவீதம், ங. தலமுகம், ச. சுவத்திகம், ரு. விப்பிரகீர்ணம, சு. அருத்தரேசிதம், எ. அராளகடகாமுகம், அ. ஆவித்தவத்திரம், கூ. சூசிமுகம், க0. இரேசிதம், கக. உத்தானவஞ்சிதம், கஉ. பல்லவம், கங. நிதம்பம், கச. கசதந்தம், கரு. இலதை, கசு. கரிக்கை, கஎ. பக்கவஞ்சிதம், கஅ. பக்கப்பிரதியோகம், ககூ. கருடபக்கம், உ0. தண்டபக்கம், உக. ஊர்த்துவமண்டலி, உஉ. பக்கமண்டலி, உங. உரோமண்டலி, உச. உரப்பார்சுவார்த்தமண்டலி,

உகி. முட்டிக
ச்சுவத்திகம், உ௬. ஙளினீபதுமகோசம், உஎ. அலபதுமம், உஅ.
உற்பணம், உக. இல
ளிதை, ௩௦. உவிதையென்பன. இவை,
சுத்தாநந்தப்பிரகாசமென்னும் பழைய தமி
ழ்ப்பரததூலிற் காணப்பட்டன.
¶ வென்றிக்கூத்தும் வசைக்கூத்தும் தாள
இயல்புடையனவென்றபடி. க



த்தி, சந்தி, சுவை, சாதி, குறிப்பு, சத்துவம், அவிநயம், சொல்,
சொல்வகை, வண்
ணம், வரி, சேதமெனவிவை; என்னை? "விலக்குறுப் பென்பது
விரிக்குங் காலைப்,
பொருளும் யோனியும் விருத்தியுஞ் சந்தியுஞ், சுவையுஞ் சாதியுங்
குறிப்புஞ் சத்து
வமு, மவிநயஞ் சொல்லே சொல்வகை வண்ணமும், வரியுஞ்
சேதமு முளப்படத்
ரு தொகைஇ, யிசைய வெண்ணி னீரே மூறுப்பே" என்றாராகலின்.
அவற்றுள்,—பொருளாவது நான்குவகைப்படும்;
என்னை? "அறம்பொரு ளின்பம்
வீடென நான்குந், திறம்பட பொருளெனச் செப்பினர் புலவர்"
என்றாராகலின்.
இவை நாடகத்திற் பிரிந்தும் கூடியும் வருங்காற்
பெயர்வேறுபடும். அவை நாடகம்,
பிரகரணப்பிரகரணம், பிரகரணம், அங்கமெனப்பெயராம்.
என்னை? "அவை தாம்,
சி ௦

நாடகம் பிரகர ணப்பிர கரண, மாடிய பிரகரண மங்க மென்றே, யோதுப நன்னூ லுணர்ந்திசி னோரே" என்றார் மதிவாணனாரும். "அறமுத லன்கு மொன்பான் சுவையு, முறைமுன் னாடக முன்னோ னாகும்" எனவும், "அறம்பொரு ளின்ப மரசர் சாதி" எனவும், "அறம்பொருள் வாணிகர் சா . ?யென் றறைப" எனவும், "அறமேற்

சூத்திர ரங்க மாகும்" எனவும் சொன்னார் செயிற்றியனார். இவை நான்கும் நாடகமெ ...ன்றறிக.

யோனி நான்குவகைப்படும். உள்ளோன் தலைவனாக உள்ளதோர் பொருண்மேற் செய்தலும், இல்லோன்றலைவனாக உள்ளதோர் பொருண்மேற் செய்தலும், உள்ளோன் தலைவனாக இல்லதோர் பொருண்மேற் செய்தலும், இல்லோன் தலைவனாக இல்லதோர் பொருண்மேற் செய்தலு மெனவிவை; என்னை? "உள்ளோற் குள்ளது

70 மில்லோற் குள்ளது, முள்ளோற் கில்லது மில்லோற் கில்லது,
யோனி யாகும்" என்றாராகலின்.

மெள்ளா துரைத்தல்

விருத்தி நான்குவகைப்படும். அவை சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதியென விவை. இவற்றுள், சாத்துவதியாவது அறம்பொருளாகத் தெய்வமானிடர் தலைவராக வருவது. ஆரபடியாவது பொருள்பொருளாக வீரராகிய மானிடர் தலைவராக 75 வருவது. கைசிகியாவது காமம் பொருளாகக் காமுகராகியமக்கள் தலைவராகவருவது. பாரதியாவது கூத்தன் தலைவனாக நடன் நடி பொருளாகக் காட்டியும் உரைத்

தும் வருவது. இச்சொல்லப்பட்ட நால்வகைவிருத்தியுள்ளும் பாரதிவ்ருத்தி, அந்த மூன்றுவிருத்தியும்போலப் பிறிதின்றலவர் பிறிதுபொருள்பற்றி விருத்திகூறுது பொருளாலே விருத்திகூறுமெனக்கொள்க.

ரு.௦ சந்தி ஐந்துவகைப்படும். அவை முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தலெனவிவை. இவற்றுள் முகமாவது *எழுவகைப்பட்ட உழவினுற் சமைக்கப்பட்ட பூழியுளிட்ட வித்துப் பருவஞ்செய்து முளைத்து முடிவதுபோல்வது. பிரதிமுகமாவது அங்ஙனம் முளைத்தல் முதலாய் இலைதோன்றி நாற்ருய்முடிவதுபோல்வது.

கருப்பமாவது அந்நாற்று முதலாய்க் கருவிருந்து பெருகித் தன்னுட் பொருள்பொதி நிரு ந்து கருப்பமுற்றிநிற்பதுபோல்வது. விளைவாவது கருப்பமுதலாய் விரிந்து கதிர்திரண்டிட்டுக் காய்தாழ்ந்து முற்றி விளைந்தமுடிவதுபோல்வது. துய்த்தலாவது விளையப்பட்ட பொருளை அறுத்துப்போரிட்டுக்கடாவிட்டுத் தூற்றிப் பொலிசெய்து கொண்டுபோய் உண்டு மகிழ்வதுபோல்வது. இவை ஐந்துசந்தியும் நாட்டியக்கட்டுரை.

சுவை ஒன்பதுவகைப்படும். அவை வீரச்சுவையவிநயம், பயச்சுவையவிநயம்,

* ஆரம்பத்திற்கு ஏழங்கமுண்டென்று வடநூலாரிற் சிலர் கூறுவராதலின், அதற்குப்பொருந்த எழுவகைப்பட்ட உழவென்ருர்.

## ரு.—அரங்கேற்றுகாதை.

கூள

இழிப்புச்சுவையவிநயம், அற்புதச்சுவையவிநயம், இன்பச்சுவையவிநயம்,

அவலச் சுவையவிநயம், நகைச்சுவையவிநயம், நடுவுநிலைச்சுவையவிநயம், உருத்திரச்சுவைய விநயம். இவற்றுள்,—

"வீரச்சுவை யவிநயம் விளம்புங் காலை முரிந்த புருவமுஞ் சிவந்த கண்ணும், பிடித்த வாளுங் கடித்த வெயிறு, மடித்த வுதடுஞ் சுருட்டிய நுதலுந், திண்ணென வுற்ற சொல்லும் பகைவரை, யெண்ணால் செல்லா விகழ்ச்சியும் பிறவு, நண்ணு மென்ப நன்கு

குணர்ந் தோரே."

"அச்ச வவிநய மாயுங் காலை, யொடுங்கிய வுடம்பு நடுங்கிய நிலையு, மலங்கிய கண்ணுங் கலங்கிய வுளனுங், கரந்துவர லுடைமையுங் கையெதிர் மறுத்தலும், பரந்த நோக்கமு மிசைபண் பினவே."

௫௦

"இழிப்பி னவிநய மியம்புங் காலை, யிடுங்கிய கண்ணு மெயிறுபுறம் போதலு, மொடுங்கிய முகமு முஞற்றுக் காலுஞ், சோர்ந்த யாக்கையுஞ் சொன்னிரம் பாமையு, சேர்ந்தன வென்ப தெறியறிந் தோரே."

"அற்புத வவிநய மறிவரக் கிளப்பிற், சொற்சோர் வுடையது சோர்ந்த கையது, மெய்ம்மயிர் குளிர்ப்பது வியத்தக வுடைய, தெய்திய திமைத்தலும் விழித்தலு மிக வாதென், றையமில் புலவ ரறைந்தன ரென்ப."

௫௫

"காம வவிநயங் கருதுங் காலைத், தூவுள் ளுறுத்த வடிவுந் தொழிலுங், காரிகை கலந்த கடைக்கணுங் கவின்பெறு, மூரன் முறுவல் சிறுநிலா வரும்பலு, மலர்ந்த முகனு மிரந்தமன் கிளவியுங், கலந்தன பிறவுங் கடைப்பிடித் தனரே."

"அவலத் தவிநய மறிவரக் கிளப்பிற், கவலையொடு புணர்ந்த கண்ணீர் மாரியும், கைப வாடிய நீர்மையும் வருந்திய செலவும், பீடழி யிடும்பையும் பிதற்றிய சொல்லு, நிறை கை யழிதலு நீர்மையில் கிளவியும், பொறையின் முகனும் புணர்த்தினர் புலவர்."

"நகைபி னவிகய நாட்டுங் காலே, மிகைபடு நகையது பிறர்நகை யுடையது, கோட்டிய முகத்தது......,விட்டுமுரி புருவமொடு விலாவுறுப் புடையது, செய்வது

பிறிதாய் வேறுசே திப்பதென், றையமில் புலவ ராய்ந்தன ரென்ப."

௨௫

"நாட்டுங் காலே நடுவுநிலை யவிநயங், கோட்பா டறியாக் கொள்கையு மாட்சியு, மறந்தரு நெஞ்சமு மாறிய விழியும், பிறழ்ந்த காட்சி நீங்கிய நிலையுங், குறிப்பின் ருகலூர் தணுக்க மில்லாத், தகைமிக வுடைமையுந் தண்ணென வுடைமையு, மளத்தற் கருமையு மன்பொடு புணர்தலுங், கலக்கமொடு புணர்ந்த நோக்கும் கதிர்ப்பும், விலக்கா ரென்ப வேண்டுமொழிப் புலவர்." * உருத்திரச்சுவை யவிநயம் † ரூ

‡ அஃதாவது விரலென்பது; சத்துவமென்பாருமுளர். அச்சத்துவந்தான் § பத்

* உருத்திரச்சுவைக்கு நிரம் ஒருபிரதியிலும் இல்லை. அச்சுவையின்மெய்ப்பாடுகளை "கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா வெய்துயிரா, மெய்குலையா வேரா வெகுண்டெழுந்தான்" என்பதனாலுணர்க.

† நிறுத்தமுறையே சுவையின்பின்னர் வகைகாட்டுதற்குரிய சாதி பத்துவகைப்படும். அவை, நாடகம், பிரகரணம், பாணம், பிரகஸநம், டிமம், வியாயோகம், சமவாகாரம், வீதி, அங்கம், ஹீஹாமிருகமெனவிவை.

‡ அஃதென்றது அச்சுவையுணர்வு உள்ளத்து நிகழ்ந்தவழித்தோன்றும் மேற்கூறிய உடம்பின்வேறுபாட்டை.

§ இத்தொகையும் இதன்வகையும் வடநூல்விதிக்குமாறாக உள்ளன. ஆசி

சிலப்பதிகாரம்.

துவகைப்படும். என்னே? மெய்ம்மயிர்சிலிர்த்தல், கண்ணீர்வார்தல், நடுக்கமடுத்தல்,

வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு

ரூ

எனவிவை. சத்துவமாவது குறிப்புவழையறை. ஆவது, சத்தச்சுவையாகின்ற ஒன்பதினும் பாவிக்கும் அத்துணையே மெய்ம்மைத்தாய் வருவதெனக்கொள்க. என்னே?

வேம்பென்று காட்டப்புக்கால் அவ்வேம்பின் இரதங்காட்டாதே அதுதான் இறைவனுக்கு மெய்யின்கண்வருவது. கருணையென்றுற் பாவித்துக்காட்டுமதன்றி மெய்யாகக் கண்ணீர்வந்தழுவது. அல்லாத சுவைகளும் வந்த சத்துவமும இப்படி ஒட்டிக்கண்டுகொள்க. அவைதாம் அச்சுவை களின் வந்தாற் றோற்று முடம்பில்; உடம்பின் மிகத்தோற்றும் முகத்து; முகத்தின்மிகத்தே ாற்றும் கண்ணில்; கண்ணின்மிகத்தோ ற்றும் கண்ணின்கடையகத்தென்றவாறு.

குறிப்பு - சுவையதன்கட்டோன்றுவது.

சத்துவம் - அக்குறிப்பின்கண் நிகழ்கின்ற நிகழ்ச்சி.

அவிநயமென்பது பாவகம். அஃது இருபத்து நான்குவகைத்து. வரலாறு: வெகு ண்டே ானவிநயம், ஐயமுற்றோனவிநயம, சோம்பினோனவிநயம், களித்தோனவி நயம், உவந்தோனவிநயம், அழுக்காறுடையோனவிநயம், இன் பமுற்றோன விநய ம், தெய்வமுற்றோனவிநயம் ஞெஞ்சை புற்றோன விநயம் உடன்பட்டோனவிநயம், உறங்கினோனவிநயம், துயிலுணர்ந்தோன விநயம், செத்தோனவிநயம், மழைபெய்யப் பட்டோனவிநயம், பனித்தலைப்பட்டே ானவிநயம், வெயிற்றலைப்பட்டோ னவிநயம், நாணமுற்றோனவிநயம், வருத்தமு ற்றோனவிநயம், கண்ணோவுற் றோனவிநயம், தலை நோவுற்றோனவிநயம், அழற்றிறம்பட்டோனவிநயம், சீதமுற்றோனவிநயம், வெப்பமுற்றோனவிநயம், நஞ்சுண்டோனவிநயமெனவிவை. இவற்றுள்,—

"வெகுண்டோ னவிநயம் விளம்புங்காலை, மடித்த வாயு மலர்ந்த மார்புந், துடி த்த புருவமுஞ் சுட்டிய விரலுங், கன்றின வுள்ளமொடு கைபுடைத் திடுதலு, மன்ன நோக்கமோ டாய்ந்தனர் கொளலே."

௨௩ "பொய்யில் காட்சிப் புலவோ ராய்ந்த, வைய முற்றே னவிநய முணாப்பின், வாடிய வுறுப்பு மயங்கிய நோக்கமும், பீடழி புலனும் பேசா திருத்தலும், பிறழ்ந்த செய்கையும் வான்றிசை நோக்கலு, மறைந்தனர் பிறவு மறிந்திசி னோரே."

"மடியி னவிநயம் வகுக்குங் காலை, நொடியொடு பலகொட் டாவிமிக வுடை மையு,மூரி நிமிர்த்தலு முனிவொடு புலார்தலுங், காரண மின்றி யாழ்ந்தமடிங் திரு ௺ ப த்தலும், பிணியு மின்றிச் சோர்ந்த செலவோ, டணிதரு புலவ ராய்ந்தன ரென்ப."

"களித்தோ னவிநயங் கழறுங் காலை, யொளித்தவை யொளியா னுரைத்த
லின்மையுங், கவிழ்ந்துஞ் சோர்ந்துந் தாழ்ந்துந் தளர்ந்தும், வீழ்ந்த சொல்லொடு மிழற்றிச் சாய்தலுங், களிகைக் கவர்ந்த கடைக்கணோக் குடைமையும், பேரிசை யாளர் பேணினர் கொளலே."

௫ "உவந்தோ னவிநய முரைக்குங் காலை, நிவந்தினி தாகிய கண்மல ருடைமையு, மினிதி னியன்ற வுள்ள முடைமையு, முனிவி னகன்ற முறுவனகை யுடைமையு, மிருக்கையுஞ் சேறலுங் கானமும் பிறவு, மொருங்குட னமைந்த குறிப்பிற் றன்றே."

"அழுக்கா றுடையோ னவிநய முணாப்பி, னிழுக்கொடு புணர்ந்த விசைபொரு ளுடைமையுங், கூம்பிய வாயுங் கோடிய வுரையு,

மோம்பா து விதிர்க்குங் கைவகை ௬.—அரங்கேற்றுகாதை.

சீா கே

யுடைமையு, மாரணங் காகிய வெகுளி யுடைமையுங், காரண மின்றி மெலிந்தமுக் முடைமையு, மெலிவொடு புணர்ந்த விடும்பையு மேவரப், பொலிவு மெனப பொருந் தமொழிப் புலவர்."

"இன்பமொடு புணர்ந்தோ னவிநய மியம்பிற், றுன்ப நீங்கித் துவர்த்த யாக்கை யுந், தயங்கித் தாழ்ந்த பெருமகிழ் வுடைமையு, மயங்கி வந்த செலவுகனி யுடைமையு, ழ மழகுள் ளுறுத்த சொற்பொலி வுடைமையு, மெழிலொடு புணர்ந்த நறுமல ருடை மையுங்,

கலங்கள்சேர்ந் தகன்ற தோண்மார் புடைமையு, கலங்கெழு புலவர் காடின ரென்ப."

"தெய்வ முற்றோ னவிநயஞ் செப்பிற், கைவிட் டெறிந்த கலக்க முடைமையு, மடித்தெயிறு கௌவிய வாய்த்தொழி லுடைமையுங், கடித்த புருவமுந் தளங்கிய நிலை கூ0 யுஞ், செய்ய முகமுஞ் சேர்ந்த செருக்கு, மெய்து மென்ப வியல்புணர்ந் தோரே."

{"ஞஞ்ஞை யுற்றோ னவிநய நாடிற், பன்மென் றிறுகிய நுனாசேர்ந்து கூம்பும் வாயு நோக்கினர்க், குனைப்பான் போல

நாவழி வுடைமையு,
வுணர்வி லாமையும்,
விழிப்போன் போல விழியா திருத்தலும், விழுத்தக வுடைமையு
மொழுக்கி லாமை
யும், வயங்கிய திருமுக மழுங்கலும் பிறவு, மேவிய தென்ப
விளக்குமொழிப் புலவர்." தரு
இஃது ஏழு நமாக்களவிநயம்.
. "சிந்தையுடம் பட்டோ னவிநயந் தெரியின், முந்தை யாயினு
முணரா நிலைமை
யும், பிடித்த கைமே லடைத்த கவினு, முடித்த லுறுத கரும
நிலைமையுஞ், சொல்
லுவது யாது முணரா நிலைமையும், புல்லு மென்ப பொருந்துமொழிப்
புலவர்."
"துஞ்சா நின்றோ னவிநயந் துணியி, னெஞ்சுத லின்றி யிருபுடை
மருங்கு,மல உ0
ர்ந்துங் கவிழ்ந்தும் வருபடை யியற்றியு, மலர்ந்துயிர்ப் புடைய வாற்றலு
மாகும்."
"இன்றுயி லுணர்ந்தோ னவிநய
மியம்பி, லொன்றிய குறுங்கொட் டாவியு முயி

ர்ப்புந், தூங்கிய முகமுந் துளங்கிய வுடம்பு, மோங்கிய திரிபு மொழிந்தவுங் கொளலே."

"செத்தோ னவிநயஞ் செப்புங் காலே, யத்தக வச்சமு மழிப்பு மாக்கலுங், கடி
த்த நினைப்பலின் வெடித்துப் பொடித்துப், போந்ததுணி வுடைமையும் வலித்த வுறு 2௫
ப்பு, மெலிந்த வகடு மென்மைமிக வுடைமையும், வெண்மணி தோன்றக் கருமணி கா
த்தலு, முண்மையிற் புலவ ருணர்ந்த வாறே."

"மழைபெய்யப் பட்டோ னவிநயம் வருக்கி, விழிதக வுடைய வியல்புகனி
யுடைமையு, மெய்கூர் நடுக்கமும் பிணித்தலும் படாத்தை, மெய்பூண் டொடுக்கிய
முகத்தொடு புணர்தலு, மொளிப்படு மனனி லுலறிய கண்ணும், விளியினுந் துளி ௩௰
யினு மடிந்தசெவி யுடைமையுங, கொடுகிவிட் டெறிந்த குளிர்மிக வுடைமையும்,
நடுங்கு பல்லொலி யுடைமையு முடியச, கனவுகண் டாற்று னெழுதலு முண்டே."

"பனித்தலைப் பட்டோ னவிநயம் பகரி, னடுகக முடைமையு நகைபடு நிலைமை
யுஞ், சொற்றளர்க் திசைத்தலு மற்றமி லவதியும், போர்வை விழைதலும் புத்திகோ
வுடைமையும், நீரும் விழியுஞ் சேறு முனிதலு, மின்னவை பிறவு மிசைத்தனர் ௩௫
கொளலே."

"உச்சிப் பொழுதின் வந்தோ னவிநய, மெச்ச மின்றி யியம்புங் காலைச், சொரி

யா கின்ற பெருந்துய ருழந்து, தெரியாகின்ற வுடம்பெரி யென்னச், சிவந்த கண்ணு

மயர்ந்த நோக்கமும், பயர்த தென்ப பண்புணர்ந் தோரே."

எ0 சிலப்பதிகாரம்.

"காண முற்றோ னவினய காடி, னிறைஞ்சிய தலையு மறைந்த செய்கையும், வா

டிய முகமுங் கோடிய வுடம்புங், கெட்ட வொளியுங் கீழ்க்க ணோக்கமு, மொட்டின

ரென்ப வுணர்ந்திசி னோரே."

"வருத்த முற்றோ னவிநயம் வகுப்பிற், பொருத்த மில்லாப் புன்க ணுடைமை

ரு யுஞ், சோர்ந்த யாக்கையுஞ் சோர்ந்த முடி யுங், கூர்ந்த வியர்வுங் குறும்பல் லுயாவும்,

வற்றிய வாயும் வணங்கிய வுறுப்பு, முற்ற தென்ப வுணர்ந்திசி னோரே."

"கண்ணோ வுற்றோ னவிநயங் காட்டி, னண்ணிய கண்ணீர்த் துளிவிரற் றெறி

த்தலும், வளைந்த புருவத்தொடு வாடிய முகமும், வெள்ளிடை நோக்கின் விழிதரு

மச்சமுந், தெள்ளிதிற் புலவர் தெளிந்தனர் கொளலே."

கூ. 6 "தலைநோ வுற்றோ னவிநயஞ் சாற்றி, னிலைமை யின்றித் தலையாட் டுடைமையுங்,

கோடிய விருக்கையுந் தளர்ந்த மேனியொடு, பெருவிர லிடுக்கிய நுதலும் வருந்தி, யொ

டுங்கிய கண்ணொடு பிறவுந், திருந்து மெ ாப செந்நெறிப் புலவர்."

"அழற்றிறம் பட்டோ னவிநய முரைப்பி, னிழற்றிறம் வேண்டு நெறிமையின்
விருப்பு, மழலும் வெயிலுஞ் சுடரு மஞ்சலு, நிழலு நீருஞ் சேறு முவத்தலும், பனிநீ ருரு ருவப்பும் பாதிரித் தொடையலு, நனிவிர வீர மருநெறி யாக்கலும், புக்க துன்பொடு
புலர்ந்த யாக்கையுந், தொக்க தென்ப துணிவறிந் தோரே."
"சீத முற்றோ னவிநயஞ் செப்பி, னேதிய பருவர லுள்ளமோ டுழத்தலு, மீர
மாகிய போர்வை யுறுத்தலு, மார வெயிலுழந் தழலும் வேண்டலு, முரசியு மூரன்று
மூயிர்த்து முரைத்தலுந், தக்கன பிறவுஞ் சாற்றினர் புலவர்."
20 "வெப்பி
னவிநயம் விரிக்குங் காலைத், தப்பில் கடைப்பிடித் தன்மையுந் தாகமு,
மெரியி னன்ன வெம்மையோ டியைவும், வெருவரு மியக்கமும் வெம்பிய விழியும்,
நீருண் வேட்கையு நிரம்பா வலியு, மோருங் காலை யுணர்ந்தனர் கொளவே."
"கொஞ்சிய மொழியிற் கூரெயிறு மடித்தலும், பஞ்சியின் வாயிற் பனிதுரை
கூம்பலுக், தஞ்ச மாந்தர் தம்முக நோக்கியோ, ரின்சொ லியம்புவான் போலியம் பா
25 மையும், நஞ்சுண் டோன்ற னவிநய மென்ப."
"சொல்லிய வன்றியும் வருவன வுளவெனிற், புல்லுவழிச் சேர்த்திப் பொருந்து
வழிப் புணர்ப்ப." எனவரும்.
இனி, சொல்வருமாறு: அது மூன்றுவகைப்படும்; உட்சொல், புறச்சொல், ஆகா
யச்சொல்லெனு. அவை

நெஞ்சொடுகூறல், கேட்போர்க்குரைத்தல், தானேகூறல்.
ருப என்னை? "நெஞ்சொடு கூறல் கேட்போர்க் குரைத்தல், தஞ்சம் வரவறிவு தானே
கூறலென், றம்மூன் றென்ப செம்மைச் சொல்லே" என்றாராகலின்.
சொல்வகை நான்குவகைப்படும்; சுண்ணம், சுரிதகம், வண்ணம் வரிதகமென.
சுண்ணம் நான்கடியான் வருவது. சுரிதகம் எட்டடியான்வருவது. வண்ணம் நாலு
ன்கடியான்வருவது. வரிதகம் முப்பத்திரண்டடியான் வருவது. என்னை? "சுண்ண ருடு நான்கடி சுரிதக மெட்டடி, வண்ண நாலுன்கு வரிதக மெண்ணுன்கென், றெண்ணிய
வடித்தொகை யெய்தவும் பெறுமே" என்றாராகலின்.
வண்ணம் ஒருவகையான்
மூன்றுவகைப்படும்; பெருவண்ணம், இடைவண்ணம்,
வனப்புவண்ணமென. அவற்றுட்பெருவண்ணம் ஆறாய்வரும். இடைவண்ணம் இரு
பத்தொன்றாய் வரும். வனப்புவண்ணம் * நாற்பத்தொன்றாய்வரும்.

* நாற்பத்தொன்பதென்றும் பிரதிபேதமுண்டு.

## ௩.—அரங்கேற்றுகாதை.

௭௧

வரி எட்டுவகைப்படும்; கண்கூடுவரி, கானல்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரியென.

என்னே? "கண்கூடு கானல்வரி
யுள்வரி புறவரி, கிளர்வரி யைந்தோ
த்துக் கோளென, மாட்சியின் வரூஉ

டொன்ற வுரைப்பிற், காட்சி தேர்ச்சி யெடு
மெண்வகை நெறித்தே" என்றாராகலின். அவ
ற்றின் பகுதியெல்லாம் கானல்வரியிற் கூறுதும்.

ரு

இவ்வரியென்பதனைப் பல்வரிக்கூத்தென்பாருமுளர்; என்னை?

"சிந்துப் பிழுக்கை யுடன்சந்தி யோர்முலை, கொந்தி கவுசி
குடப்பிழுக்கை, கந்தன்பாட் - டாலங் காட் டாண்டி பருமண
ணெல்லிச்சி, சூலந் தருநட்டந் தூண்டிலுடன் - சில்மிகு, மாண்டி
யமண்புனவே டாளத்தி கோப்பாளி, பாண்டிப் பிழுக்கையுடன்
பாம்பாட்டி - மீண்ட, ககவுட் சடைவீர மாகேசங் காமன், மகிழ்சிந்து
வாமன ரூப - விகடநெ டுபடம், பத்திரங் கொற்றி பலகைவாள்
பரப்பெண், டத்தசம் பாரத் தகுணிச்சங் - கத்து, முறையீண்
டிருஞ்சித்து முண்டித மன்னப், பறைபண் டிதன்புட்ப பாண-
மிறைபரவு, பத்தன் குரவையே பப்பறை காவதன், பித்தனொடு
மாணி பெரும் பிழுக்கை-யெத்துறையு, மேத்துவருங் கட்களி யாண்டு
விளையாட்டுக், கோத்த பறைக்குடும்பு தோற்கூத்து - மூத்த, கிழவன்
கிழவியே கிள்ளுப் பிராண்டி, யழகுடைய கூறு பள்ளிவிக்கட் டாங்கந்-
திகழ்செம்பொ, னமமனே பந்து கழங்காட லாலிக்கும், விண்ணகக் காளி
விறற்கொந்தி - யல்லாத, வாய்ந்த தனிவண்டு வாரிச்சி பிச்சியுடன்,
சாந்த முடைய சடாதாரி - யேய்ந்தவிடை, தக்கபிடார் கிர்த்தந்
தளிப்பாட்டுச் சாதுரங்கந், தொக்க தொழில் புனைந்த சோணுண்டு-மிக்க,
மலையாளி வேதாளி வாணி குதிரை, சிலையாடு வேடு சிவப்புத் - தலையிற்,
றிருவிளக்குப் பிச்சி திருக்குன் றயிற்பெண், உடன் டிருண்முகத்துப்

பேதை யிருளன்- பொருமுகத்துப், பல்லாங் குழியே பகடி பகவதி யா,
ஊல்லார் தந் தோள்வீச்சு நற்சாழ- லலலாத, வுந்தி யவலிடி யூராளி
யோகினிச்சி, குந்திவரும் பாரன் குலைக்கூத்- தந்தியம்போ, தாடுங்
களிகொய்யு முள்ளிப்பூ வை யனுக்குப், பாடும்பாட் டாடும் படுபெள்ளி -
நாடறியும், கும்பிடு நாட்டங் குணுட்டங் ! குணலையே, தஞ்சாத
சும்மைப்பூச் சோனக- மஞ்சரி, யேற்ற வுழைமை பறைமைமுத உரு
லென்றெண்ணிக், கோத்தவரிக் கூத்தின் குலம்" என்றுராகலின்.

சேதம் : ஆரியம் தமிழென இருவகைக்கூத்து; என்னை? "ஆரியந் தமிழெனுஞ் சீரட மிரண்டினு, மாதிக் கதையை யவற்றிற் கொப்பச், சேதித் திடுவது சேதமென் றுரும்" என்றுராகலின்.

இனி விலக்குறுப்பென்ற சொற்குப் பொருள்
யாதோவெனின்,—தலைவன் செ ரு வுத்துகின்ற கதையை விலக்கியும்,
அக்கதையை நடாத்தியும், முன்புசெய்த கதைக் கே
உறுப்பாகுவதென்க.

கசு-கரு. பதினோ ராடலும் பாட்டுங் கொட்டும, விதிமாண
கொள்கையின் விள ங்க வறிந்தாங்கென்பது அல்லியமுதற கொடுகொட்டி
யீறுய்க்கிடந்தனவும், அவற்றுக்குரிய பாட்டுக்களுட, அக்கூத்துக்களின்
விகற்பங்களுக்கெல்லாம் அமைந்த வாச்சி ருரு யக்கூறுகளும்,
தென்க.
மாட்சிமைப்பட்ட நூல்களில்விதித்த முறைமையாலே விளங்க வறிந்

கசு. பதினோராடலாவன: "கடையமயி ராணிமரக் கால்விந்தை
கந்தன், குடை அடிமா லல்லியமற் கும்பஞ்-சுடர்விழியாற், பட்டமதன்
பேடுதிருப் பாவையரன் பா ண்டரங்கங், கொட்டியிவை காண்பதினோர்
கூத்து." இவை தெய்வவிருத்தி. கூ ௦ எட
சிலப்பதிகாரம்.

இவை இரண்டுறுபபம். என்னை? "அல்லியங் கொட்டி
குடைகுடம் பாண்

டாங்க, மல்லுட லின்றூட லாறு." "துடிகடையம் பேடு மாக்காலே பாவை, வடிவு

டன் வீழ்ந்தா லேந்து." இவை அகாரக்கொல்ல அமராாடின.

"அல்லிய மாயவ னுடிற் றதற்குறுப்புச், சொல்லுப வாறு மெனல்."

ரு "கொட்டி கொடியிடையோ னுடிற் றதற்குறுப், பொட்டிய நான்கா மெனல்."

"அறுமுகத்தோ னுடல் குடைமற் றதற்குப், பெறுமுறுப்பு நான்கா மெனல்."

"குடத்தாடல் குன்றெடுத்தோ னுட லதனுக், கடைக்குப வைந்துறுப் பாய்ந்து."

"பாண்டரங்க முக்கணு னுடிற் றதற்குறுப், பாய்ந்தன வ ாறு மெனல்."

"நெடியவ னுடிற்று மல்லாடன் மல்விற், கொடியா வுறுப்போரைந் தாம்."

கூ * "துடியாடல் வேன்முருக னுட லதனுக, கொடியா வுறுப்போரைந் தாம்."

"கடைய மயிராணி யாடிற் றதனுக், கடைய வுறுப்புக்க ளாறு."

"காமன தாடல்பே டாட'லதற்குறுப்பு, வாய்மைபி னாயினன்கு."

"மாயவ ளாடன் மரக்கா லதற்குறுப்பு, காமவகை யிற்சொலுங்கா னன்கு."

"பாவை திருமக ளாடிற் றதற்குறுப், போவாம லொன்றுடனே யொன்று."

அ(" "புரமெரித்தல் சூழுா துளைபடுத்தல் கஞ்ச,

ஞரனெரித்தல் வாணனைவா னுய்
த்தல் - பெரிய, வரன்முத லாகவே வன்முதன் மாயோ,
னமர்முத லாடிய வாறு”
எனக் கண்டுகொள்க.

கச. பாட்டுமென்பது அகநாடகங்களுக்கும்
களுமென்க.
புறநாடகங்களுக்கும் உரிய உருக்
உ௦

அகநாடகங்களுக்குரிய உருவாவன: சந்தமுதலாகப் பிரபந்தவுருவீறாக இருபத்தெட்டும். இவற்றுள், சந்தமென்பது அடிவரையறையுடைத்தாய் ஒருதாளத்தாற் புணர்ப்பது. பிரபந்தமென்பது அடிவரையறையின்றிப் பலதாளத்தாற் புணர்ப்பது.

புறநாடகங்களுக்குரிய உருவாவன: தேவபாணிமுதலாக அரங்கொழிசெய்யுளீறாகச் செந்துறைவிகற்பங்களெல்லாமென்க.

உரு கசு. கொட்டுமென்பது கூத்துவிகற்பங்களுக்கமைந்த
வாச்சியக்கூறுகளுமென்
றவாறு.

அவை கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கமென்பன.

அவற்றுள் கீதாங்கம் கீத
த்துக்குவாசிப்பது; நிருத்தாங்கம் நிருத்தத்திற்கு வாசிப்பது,
உபயாங்கம் இரண்டிற
கும் வாசிப்பது.

ரு௦ கரு. விதிமாண் கொள்கையின் விளங்க வறிந்தென்பது
அவற்றை நூல்களில் விதித்தமுறையே விளங்கவறிந்தென்க.
ஆங்கு - அசைநிலை.

கசு. ஆடலும் முற்கூறிய அகக்கூத்தினும

புறக்கூத்தினுமுள்ள ஆடலுமென்

றவாறு.

---

---

* குடியாடனங்கை யெழுவரதாடலெனவும்பாடம்.



நிற்ற நடிசாரிமுதலாகிய * தேசிக்குரிய கால்களும், சுற்றுதல் எறிதல் உடைத்தல் முதலாகிய † வடுகிற்குரிய கால்களும், உடற்றுக்குமுதலாகிய ‡ உடலவர்த்தனையும் அகக்கூத்துக்குரியன. ஈண்டுச் சிந்துமென்று வழங்கிவருகின்ற கூத்துச் சொல்விற்றிலராலெனின் "சிக்கள மிருவகை நிலையினு மெய்தும்" என்னுஞ்சூத்திரத்தான் இதற்கு வேறு கால்களின்மையினென்க; பாலைக்கு

நிலமில்லாததுபோல. §

புறக்கூத்துக்குரிய ஆடல்களாவன: பெருநடை,

சாரியை, பிரமரி இவைமுத

லாயினவும், பதினோராடலிற் கூத்துக்களுமாம்.

இவ்வகையால் அகக்கூத்துக்களுக்கும், புறக்கூத்துக்களுக்குமுரிய

ஆடலுமென்

றவாறு.

கசு. பாடலுமென்பது பண்ணன்முதலிய எட்டுவகைப்பட்ட குறிக்கோளும்; அவை "இன்பந் தெளிவே நிறையோ டொளியே, ன்சொ விறுதி மந்த முச்சமென, வந்த வெட்டும் பாடலின் பயனே" என்றுசொல்லப்பட்ட எண்வகைப்பயனுமுடைய

பாடலும்.

கசு. பாணியுமென்பது தாளங்களுமென்றவாறு; * "கொட்டு

மசையுந் தூக்கு

மளவு, மொட்டப் புணர்ப்பது பாணி யாகும்" என்றாராகலின்.

கடு

இவை மாத்திரைப்பெயர்கள்; கொட்டு அரைமாத்திரை; அதற்குவடிவு, க; அசை ஒருமாத்திரை; அதற்குவடிவு, எ; தூக்கு இரண்டுமாத்திரை; அதற்குவடிவு, உ;
அளவு மூன்றுமாத்திரை; அதற்குவடிவு, ஃ எனக்கொள்க.
என்னை? "ககரங் கொட்
டே யெகர மசையே, யுகரந் தூக்கே யளவே யாய்தம"
என்றாராகலின். இவற்றின்
றொழில் வருமாறு: கொட்டாவது அமுக்குதல்; அசையாவது தாக்கியெழுதல்; தூக்காவது தாக்கித் தூக்குதல்; அளவாவது தாக்கினவோசை நேரே மூன்றுமாத்திரை ௨ ๐

பெறுமளவும் வருதலெனக்கொள்க.

அரைமாத்திரையுடைய ஏகதாளமுதலாகப்

பதினாறுமாத்திரையுடைய பார்வதி
லோசனமீறாகச் சொன்ன நாற்பத்தொருதாளமும்
புறக்கூத்திற்குரிய; ஆறன்மட்
டமென்பனவும், எட்டன்மட்டமென்பனவும்
தாளவொரியலென்பனவும், தனிநிலை ௨௫

---

* தேசிக்குரியகால்கள், உச, க. கீற்று, உ. கடிசாரி, ௩. மண்டலம், ௪. வர்த்
தனை, ரு. கரணம், ௬. ஆலீடம், எ. குஞ்சிப்பு, அ. கட்டுப்புரியம், ௯. களியம், க௦. உள்
ளாளம், கக. கட்டுதல், கஉ. கம்பித்தல், க௩. ஊர்தல், க௪. நடுக்கல், கரு. வாங்குதல்,
க௬. அப்புதல், கஎ. அனுக்குதல், கஅ. வாசிப்பு, க௯. குத்துதல், உ௦. நெளிதல், உக.
மாறுகால், உஉ. இட்டுப்புகுதல், உ௩. சுற்றிவாங்குதல், உ௪. உடற்புரிவு.

† வடுகிற்குரியகால்கள், க௪, க. சுற்றுதல், உ. எறிதல், ௩.

உடைத்தல், ௪.
ஒட்டுதல், ௫. கட்டுதல், ௬. வெட்டுதல், ௭. போக்கல், ௮. நீக்கல், ௯. முறுக்கல், ௧௦.
அனுக்கல், ௧௧. வீசல், ௧௨. குடப்புக்கால், ௧௩. கத்தரிகைக்கால், ௧௪. கூட்டுதல்.

‡ உடலவர்த்தனை, ௯ ; ௧. மெய்சாய்த்தல், ௨. இடைநெரித்தல், ௩. சுழித்தல்,
௪. அணைத்தல், ௫. தூக்குதல், ௬. அசைத்தல், ௭. பற்றல், ௮. விரித்தல், ௯. குவித்த
லெனவிவை. "மெய்சாய் விடைநெரிவு மேற்சுழிவோ டாங்கணைத்தல், கைதூக் கசை
த்தல் கலைபற்றல்-கைகள், விரித்தல் குவித்தலிவை சிங்களமா மென்று, தெரித்தனர்
தண்டமிழோர் தேர்ந்து." என்பது ௬ - ம். மெய்சாய்த்தல் - உடற்றூக்கு.

§ நிலமின்மைமைய, தொல், பொரு, அகத், ௨ - ௬. உரையிற்காண்க.





யொரியலென்பனவும், ஒன்றன்பாணிமுதலாக எண்கூத்துப்பாணியீறாகக் கிடந்த
பதினொருபாணிவிகற்பங்களும், முதனடை வாரமுதலாயினவும் அகக்கூத்திற்குரிய
வென்க.

௧௬. | தூக்குமென்பது இத்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு, மதலைத்தூக்கு,

ரு |துணிபுத்தூக்கு, | கோயிற்றூக்கு, | நிவப்புத்தூக்கு, | கழாற்றூக்கு, |நெடுந்தூக்கெனப்

பட்ட எழுதூக்குக்களுமென்க; "ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் துணிபு

நாற்சீர் கோயி, லைஞ்சீர் நிவப்பே யறுசீர் கழாலே, யெழுசீர் நெடுந்தூக் கென்மனார்

புலவர்" என்றாராகலின்.

கஎ. கூடிய நெறியினவென்பது முற்செ ால்லப்பட்ட கூத்தும் பாட்டும் தாள

கிo மும் தூக்கும் தம்மிற்கூடின நெறியையுடைய |அகக்கூத்தும புறக்கூத்துமுதலா

யினவு வென்க.

கஎ. கொளுத்துங்காலை - ஆட்டுவிக்குமிடத்தென்க.

கஅ. |பிண டியுமென்பது ஒற்றைக்கையுமென்றவாறு.

முற்கூறிய சொல்விகற்பமாகிய உட்சொல், புறச்சொல்; ஆகாயச்சொலென்னு கூடு |மூன்றினையும், அவிநயத்தோடே நாட்டிச்செய்யுமிடத்துச் செய்யுமுறைமைதான்

நான்குவகைப்படும்; கையும் கருத்தும் மிடறும் சரீரமுமென. என்னை? "அவை

தாம், கையே கருத்தே மிடறே சரீரமென், றெய்தமுன் பமைத்த விவையென மொ

ழிப" என்றாராகலின்.

அவற்றுட் கைதான் இர ண்டுவகைப்படும்; |இணையாவினைக்கையும் |இணைக்கை உ ட யுமென. இவை ஒற்றைக்கை இரட்டைக்கையென்றும் வழங்கப்படும். இன்னும் ஒரு

சாரார் ஒற்றைக்கை இரட்டைக்கையென்னு மிவற்றை, இவ்வகையோடும் * ஆண்கை

பெண்கை அலிக்கை பொதுக்கையென்னும நான்கினையுங்கூட்டி

ஆறென்பாருமுளர்.

என்னே? "மெய்பெறத் தெரிந்து மேலோ ராய்ந்த, கைவகை தன்னைக் கருதுங் காலை,

யிணையா வினைக்கை யிணைக்கை யென்ன, வணையுமென்ப வறிந்திசி னோரே" "......

உரு மொழிகரு முளரே." "இணையா தியல்வ திணையா வினைக்கை, யிணைந்துடன் வருவ

திணைக்கை யாகும்" என்று பிறரும்கூறினாராகலின்.

இனி அவற்றுள் இணையாவினைக்கை முப்பத்துமூன்று வகைப்படும். அவை

பதாகை-க, திரிபதாகை-உ, கத்தரிகை - ௩, தூபம் - ௪, அராளம்-ரு, இளம்பிறை-

சு, சுகதுண்டம் - எ, முட்டி - அ, கடகம்-கூ, சூசி - க0, கமலகோசிகம் கக, காங்கூ ௫௦ லம்-கஉ; கபித்தம் - கரு, விற்பிடி - கச, குடங்கை - கரு, அலாபத்திரம் - கசு, பிரம

---

* ஆண்கைமுதலிய நான்கன்வகையினை வரும்வெண்பாக்களால் உணர்க. க.

"முட்டி சிகர மலர்பதுமஞ் சந்தஞ்சம, வட்ட சிலந்தி மிகுசூசி - ஒட்டுஞ், சதுரம

பதாகந் தருதிரிப தாக, மதிகமுறுமாண்கைநவ மாம்" உ. "கடகஞ் சுகதுண்டங் கா

ங்கூல மன்னு, மடைவாம் பிறைக்கை யராளந் - தடமருவு, மன்னபக்கந் தாம்பிர

சூடமொடு மான்றலையே, யின வெட்டும் பெண்ணுகு மே" ௩. "சர்ப்பசிரம் வண்டு

தனிமுகுளங் கத்தரிகை, விற்பனஞ்சேர் கோசங கபித்தமுட-னற்புதமே, யாகுமலி

க்கைக ளாறென் றுரைப்பரே, பாகனைய சொல்லாய் பரிந்து" ௪. "உன்னமா மண்டல......வலம்புரியே, மெய்க்நிலையாஞ் சங்கிலதை மேம்படவே-மன்னிவரு, தாமமொடு பிண்டியயச் சொன்னார் போதுக்கையெனத், தாம முறுக்குழலாய் தான்"
இவை சுந்தரநந்தப்பிரகாசத்திலுள்ளன.

## ங.—அரங்கேற்றுகாதை.

எரு

ரம்-கஎ, தாம்பிரசூடம் - கஅ, பசாசம் - ககூ, முகுளம்-உ௦, பிண்டி - உக, தெரிநிலை- உஉ, மெய்ந்நிலை - உங, உன்னம்-உச, மண்டலம் - உரு, சதுரம் - உகூ, மான்றலை- உஎ, சங்கு - உஅ, வண்டு - உகூ, இலதை - ங௦, கபோதம் - ஙக, மகரமுகம் - ஙஉ, வலம்புரி - ஙங; என்னை?
"இணையா வினைக்கை யியம்புங் காலை, யிணைவுறு பதாகை திரிபதாகையே, கத்தரிகை தூப மராள மிளம்பிறை, சுகதுண் டம்மே முட்டிக்ட ருகஞ், சூசி பதும கோசிகந் துணிந்த, மாசில்காங் கூலம் வழுவறு கபித்தம், விற்பிடி குடங்கை யலாபத் திரமே, பிரமரந் தன்னொடு தாம்பிர சூடம், பசாச முகுளம் பிண் டி தெரிநிலை, பேசிய மெய்ந்நிலை யுன்ன மண்டலஞ், சதுர மான்றலை சங்கே வண் டே, யதிர்வி லிலதை கபோத மகரமுகம், வலம்புரி தன்னொடு முப்பத்து மூன்றென், றிலங்குமொழிப் புலவ ரிசைத்தன ரென்ப" என்றாராகலின்.
கப

இவற்றுட் பிண்டியென்பது ஒன்றாய் ஆகுபெயரான் ஒற்றைக்கைக்குப் பெயரா யிற்று. பிணையல் இணைதலாதலால் இணைக்கையாயிற்று. ஆதலாற் பிண்டியும் பிணை யலுமென்றாரென க்கொள்க.

இவற்றுட் பிண்டிக்குக்காட்டிய முப்பத்தமூன்று வகையினுள்,—

பதாகைக்கையாவது நான்குவிரலும் தம்முள் ஒட்டிநிமிரப் பெருவிரல் குஞ்சித் ஈரு தமிற்பது; என்னை! "பதாகை யென்பது

பகரும் காலைப், பெருவிரல் குஞ்சித் தலாவி ர ணன்கு, மருவி நிமிரு மரபிற் றென்ப" என்றாராகலின், க.

இக்கைகளின் தொழில் முதலியவிரிப்பின் உரைபெருகுமாதலின், விடுக்கப்பட் டன; விரிந்தநூல்களிற் கண்டுகொள்க.

திரிபதாகையாவது பதாகைக்கையின் * அணிவிரல் முடக்குவது; என்னை? ௨ட "திரிப தாகை தெரியுங் காலை, யறைப தாகையி னணிவிரன் முடக்கினஃ, தாமென மொழிப வறிந்திசி னோரே" என்றாராகலின். ௨.

கத்தரிகையாவது திரிபதாகையின் முடங்கிய அணிவிரற்புறத்ததாகிய நடுவிர லைச் சுட்டுவிரலோடு பொருந்தநிமிர்ப்பது; என்னை? "கத்தரி கையே காண்டக விரிப்பி, னத்திரி பதாகையி னணியின் புறத்தைச், சுட்டக மொட்ட விட்டுநிமிர்ப் பது ௨டு வே" என்றாராகலின். ௩.

தூபமென்பது நிமிர்ந்த நடுவிரலும் சுட்டுவிரலும் பாதிப்படவளையநிற்பது; என்னை? "தூப மென்பது துணியுங் காலை, விளங்குகத் தரிகை விரலகம் வளைந்து, துள ங்கு மென்ப துணிபறிந் தோரே" என்றாராகலின். ௪.

அராளமாவது பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரல் முடக்கி ஒழிந்தவிரன்மூன் ௨ட றும் நிமிர்ந்தவளைவது; என்னை? "அராள மாவ தறிவுரக் கிளப்பிற், பெருவிரல் குஞ்சித்துச் சுட்டுவிரன் முடக்கி, விரல்கண் மூன்று நிமிர்த்தகம் வளைத்தற், குரிய தென்ப வுணர்ந்திசி னோரே" என்றாராகலின். ௫.

இளம்பிறை: "சுட்டும் † பேடு ‡ மகாமிகை சிறுவிர, லொட்டி யகம்வளைய வொசித்த பெருவிரல், விட்டு நீங்கும் விதியிற் றென்ப." ௬. ௩௫

---

---

* அணிவிரல் - பவித்திரவிரல்.

† பேடு - நடுவிரல்; இது பேடியெனவும் வழங்கப்படும்.

‡ அநாமிகை - பவித்திரவிரல்.



சகதுண்டம்: "சகதுண்ட மென்பது தொழில்பெறக் கிளப்பிற், சுட்டு விரலும்
பெருவிர ருனு, மொட்டியுகிர் நுனை கவ்வி முன்வளைந், தநாமிகை முடங்கப் பேட்
டொடு சிறுவிர, ருன்மிக நிமிர்ந்த தகுதித் தென்ப." எ.

முட்டி: "முட்டி யென்பது மொழியுங் காலைச், சுட்டு நடுவிர லநாமிகை சிறு ரு விர, லிறுக முடக்கி யிவற்றின் மிசைப் பெருவிரன், முறுகப் பிடித்த முறைமைத்
தென்ப." அ.

கடகம்: "கடக முகமே கருதுங் காலைப், பெருவிர லுனியுஞ் சுட்டுவிர லுனியு,
மருவ வளைந்தவ் வுகிர்நுனி கௌவி, யொழிந்த மூன்றும் வழிவழி நிமிர, மொழிந்
தன ரென்ப முடிபறிந் தோரே." கூ.

கூ0 | சூசி: "சூசி யென்பது துணியுங் காலை, நடுவிரல் பெருவிர லென்றிவை தம்மி,
லடைவுட னெற்றிச் சுட்டுவிர னிமிர, வொழிந்தன வழிவழி முடங்கி நிற்ப, மொழி
ந்தனர் மாதோ முடிபறிந் தோரே." க0.

பதுமகோசிகம்: "பதும கோசிகம் பகருங் காலை, யொப்பக் கைவளைத் தைந்து
விரலு, மெய்ப்பட வகன்ற விதியிற் றாகும்." கக.

கூடு காங்கூலமாவது மூன்றுவகைப்படும்; குவிகாங்கூலம்,

முகிழ்காங்கூலம், விரி
காங்கூலமென. என்னை? *"காங்கூ லம்மே கருதுங் காலைச், சுட்டும் பேடும் பெருவி
ரன் மூன்று, மொட்டிமுன் குவிய வநாமிகை முடங்கிச், சிறுவிர னிமிர்ந்த செய்
கைத் தாகும்" "முகிழ்காங் கூல முந்தற மொழிந்த, குவிகாங் கூலங் குவிவிழந் தது
வே." "மலர்காங் கூல மதுமலர்ந் ததுவே." கஉ.
௨0 கபித்தமாவது சுட்டுவிரலுனியும் பெருவிரலுனியும் உகிர்நுனை கௌவிப்பிடித்து
ஒழிந்த மூன்றுவிரலும் மெல்லெனப் பிடிப்பது; என்னை? "கபித்த மென்பது காணுங்
காலைச், சுட்டுப் பெருவிர லொட்டிநுனி கௌவி, யல்ல மூன்றுமெல் லப்பிடிப்
பதுவே" என்றாராகலின். கங.
விற்பிடி : "விற்பிடி யென்பது விரிக்குங் காலைச், சுட்டொடு பேடி யநாமிகை சிறு
உரு விர, லொட்டி யகப்பால் வளையப் பெருவிரல், விட்டு நிமிரும் விதியிற் றாகும்." இத
ற்குச் சிகரமென்றும் பெயர். கச.
குடங்கையாவது எல்லாவிரலுங்கூட்டி உட்குழிப்பது ; என்னை?"குடங்கை யெ
ன்பது கூறுங் காலை, யுடங்கு விரற்கூட்டி யுட்குழிப் பதுவே" என்றாராகலின். கரு.
அலாபத்திரமாவது சிறுவிரன்முதலாகியவைந்தும் வளைந்துமறிவது. என்னை? ௩௨ "அலாபத் திரமே யாயுங் காலைப், புனைமையின் மிகுத்த சிறுவிரன் முதலா, வருமு
றை யைந்தும் வளைந்துமறி வதுவே" என்றாராகலின். கசு.

பிரமரமாவது அநாமிகைவிரலும் நடுவிரலும் தம்மிற்பொருந்தி வலஞ்சாயப் பெ

ருவிரல் நடுவிரலினுள்ளேசேரச் சுட்டுவிரலும் சிறுவிரலும் பின்பேவளைந்துநிற்

பது; என்னை? "பிரமர மென்பது பேணுங் காலை, யநாமிகை நடுவிர லறவுறப் பொ ருந்தித், தாம்வலஞ் சாயத் தகைசால் பெருவிர, லொட்டிய நடுவுட் சேரச் சிறுவிரல், சுட்டு வளைந்துபின் றோன்றிய நிலையே" என்றாராகலின். கஎ.

தாம்பிரசூடமாவது நடுவிரலும் சுட்டுவிரலும் பெருவிரலும் தம்மில் நுனியொ

த்துக் கூடி வளைந்து சிறுவிரலும் அணிவிரலும் முடங்கிநிமிர்வது; என்னை? "தாம்

பிர சூடமே சாற்றுங் காலைப், பேடை சுட்டுப் பெருவிர லுனியொத்துக், கூடி வளைந்து சிறுவிர லணிவிர, லுடனதின் முடங்கி நிமிர்நிற்பதுவே" என்றாராகலின். கஅ.

பசாசமாவது பெருவிரலும் சுட்டுவிரலுமன்றி ஒழிந்த மூன்றுவிரலும் தம்மிற் பொலிந்துநிற்பதெனக்கொள்க. அப்பசாசந்தான் மூன்றுவகைப்படும்; அகநிலைப்பசாசம், முகநிலைப்பசாசம், உகிர்நிலைப்பசாசமெனை. அவற்றுள் அகநிலைப்பசாசம் சுட்டு ரு விரல்நுனியிற் பெருவிரலகப்படுவது; முகநிலைப்பசாசம் அவ்விரன்முகங்கூடி உகிர் ' விட்டுநிற்பது; உகிர்நிலைப்பசாசம் சுட்டுவிரலும் பெருவிரலும் உகிர்நுனை கவ்வி நிற்பது. என்னை?

---

* காங்கூலமென்றது குவிகாங்கூலத்தை.

## ங.—அரங்கேற்றுகாதை.

ஏஎ

"பசாச மென்பது பாற்படக் கிளப்பி, னகநிலை முகநிலை யுகிர்நிலை யென்னத், தொகநிலை பெற்ற மூன்றுமென மொழிப." "அவைதாம், சுட்டுவிர னுனியிற் பெருவிர லகப்பட, வொட்டி வளைத்த தகநிலை முகநிலை, யவ்விர னுனிகள் கீழ் கவ்விப் பிடித்தல், செவ்வித் தாகுஞ் சிறந்த வுகிர்நிலை, யுகிர்நுனை கவ்விய தொழிந்த மூன்றுந், தகைமையி னிமிர்த்தலம் மூன்றற்குந் தகுமே" என்றாராகலின். ௧௯.

முகுளமாவது ஐந்துவிரலும் தம்மில் தலைகுவிந்து உயர்ந்துநிற்பது; என்னை? "முகுள மென்பது மொழியுங் காலை, யைந்து விரலுந் தலைகுவிந் தேற்ப, வந்து நிகழு மாட்சித் தாகும்" என்றாராகலின். ௨௦.

௧௫

பிண்டியென்பது சுட்டுவிரல் பேடிவிரல் அநாமிகை சிறுவிரல் ஒட்டிநெகிழமுடங்க அவற்றின்மேலே குறுக்கிடப் பெருவிரல் கட்டி விலங்கி விரல்வழி முறையொற்றல்; என்னை? "பிண்டி யென்பது பேசுங் காலைச், சுட்டுப் பேடி யநாமி கை சிறுவிர, லொட்டி நெகிழ முடங்க வவற்றின்மிசை, விலங்குறப் பெருவிரல் விட்டுங் கட்டியு, மிலங்குவிரல் வழிமுறை யொற்றலு மியல்பே" என்றாராக ௨௦ லின். ௨௧.

தெரிநிலையாவது எல்லாவிரலும் விரிந்து குஞ்சித்துநிற்பது; என்னை? "தெரிநிலை யென்பது செப்புங் காலை, யைந்துவிரலு மலர்ந்துகுஞ் சித்த, கைவகை யென்ப கற் றறிந் தோரே" என்றாராகலின். ௨௨.

மெய்ந்நிலையாவது சிறுவிரலும் அணிவிரலும் நடுவிரலும் சுட்டுவிரலும் விட்டுறு நிமிரச் சுட்டுவிரன்மேற் பெருவிரல் சேரவைப்பது; என்னை? "மெய்ந்நிலை யென்பது விளம்புங் காலைச், சிறுவிர லநாமிகை பேடொடு சுட்டிவை, யுறுத லின்றி நிமிரச் சுட்டின்மிசைப், பெருவிரல் சேரும் பெற்றித் தென்ப" என்றாராகலின். ௨௩.

உன்னமாவது சிறுவிரலும் பெருவிரலும் தம்முட்கூட ஒழிந்த

மூன்றுவிரலும் விட்டு நிமிர்வது; என்னை? "உன்ன நிலையே யுணருங் காலைப், பெருவிரல் சிறுவிரலிடை லென்றிவை யிணைய, வருமுறை
வின். உச.
மூன்று மலர்ந்துநிமிர்ந் ததுவே" என்றாராக

மண்டலம்: "மண்டல மென்பது மாசறக் கிளப்பிற், பேடு நுனியும் பெருவிரனு னியுங், கூடி வளைந்தும் முகிழ்நுனை கவ்வி, யொழிந்த மூன்று மொக்க வளைவதென, மொழிந்தன ரென்ப முழுதுணர்ந் தோரே" என்றாராகலின். உரு.

சதுரமாவது சுட்டுவிரலும் நடுவிரலும் அணிவிரலும் தம்முட் சேர்ந்து இறைஞ்சப் பெருவிரல் அகம்வரவைத்துச் சிறுவிரல் பின்பே நிமிர்ந்துநிற்பது; என்னை? "சதுர மென்பது சாற்றுங் காலை, மருவிய மூன்று நிமிர்ந்தகம் வளையப், பெருவிர லது

சி ல ப் ப தி கா ர ம்.

லகமுறப் பொற்பச் சேர்த்திச், சிறுவிரல் பின்பே நிமிர்ந்த செவ்வியி, னிறுமுறைத்
தென்ப வியல்புணர்ந் தோரே" என்றாராகலின். உசு.
மான்றலையாவது பெருவிரலும் சிறுவிரலுமொழிந்த மூன்றும் தம்மில் ஒத்து
ஒன்றி முன்னே இறைஞ்சிநிற்பது; என்னை? "மான்றலை யென்பது வகுக்குங் காலை, ரு மூன்றிடை விரலு நிமிர்ந்தக மிறைஞ்சிப், பெருவிரல் சிறுவிர லென்றிவை நிமிர்
ந்து, வருவ தென்ப வழக்கறிந் தோரே" என்றாராகலின். உஎ.
சங்காவது பெருவிரல் நிமிர ஒழிந்த நான்குவிரலும், வளைந்துநிற்பது; என்னை?
"சங்கெனப் படுவது சாற்றுங் காலைச், சிறுவிரன் முதலாச் செறிவிர லொன்கும், பெறு

முறை வளையப் பெருவிர னி மிர்ந்தாங், கிறுமுறைத் தென்ப வியல்புணர்ந் தோரே" கூ௦ என்றாராகலின். உஅ.

வண்டாவது பெருவிரலும் அணிவிரலும் வளைந்து நுனியொன்றிச் சிறுவிரல்

நி மிர்ந்து சுட்டுவிரலும் நடுவிரலும் நெகிழ வளைந்துநிற்பது ; என்னை? "வண்டென் பது

வே வகுக்குங் காலை, யநாமிகை பெருவிர னனிமிக வளைந்து, தா நுனி யொன்றித்

தகைசால் சிறுவிரல், வாலிதி னிமிர மற்றைய வளைந்த, பாலின தென்ப பயன்றெரிந் தோரே" என்றாராகலின். உகூ.

இலதையாவது நடுவிரலும் சுட்டுவிரலும் கூடிநிமிரப் பெருவிரல் அவற்றின்கீ

ழ்வரைசேர ஒழிந்த இரண்டுவிரலும் வழிமுறை பின்னே நிமிர்ந்துநிற்பது; என்

னை? "இலதை யென்ப தியம்புங் காலைப், பேடி யுஞ் சுட்டும் பிணைந்துட னிமிர்ந்து,

கூடிய பெருவிரல் கீழ்வரை குறுகக், கடையிரு விரலும் பின்னர் நிமிர்ந்த, நடை ௨ப யின தென்ப நன்னெறிப் புலவர்" என்றாராகலின். ௩௦.

கபோதமென்பது பதாகைக்கையிற் பெருவிரல் விட்டுநிமிர்வது; என்னை?

"காணுங் காலைக் கபோத மென்பது, பேணிய பதாகையிற் பெருவிர னிமிரும்" என்

றாராகலின். ௩௧.

மகரமுகமாவது பெருவிரலும் சுட்டுவிரலும் நிமிர்ந்துகூட ஒழிந்த மூன்றுவிர ௨ு லும் தம்முளொன்றி அதற்குவேறாய்நிற்பது. என்னை? "மகரமுக மென்பது வகுக்

குங் காலைச், சுட்டொடு பெருவிர ல் கூட வொழிந்தவை,

யொட்டி நிமிர்ந்தாங் கொ
ன்றுா வாகும்" என்றுராகவின். ௬௨.
வலம்புரியாவது சிறுவிரலும் பெருவிரலுநிமிர்ந்து சுட்டுவிரலின் அகம்வளைந்து
ஒழிந்தவிரண்டும் நிமிராது இறைஞ்சிநிற்பது. என்னை? "வலம்புரிக் கையே வாய்ந்த ரு ப கனிட்ட, னலந்திகழ் பெருவிர னயமுற நிமிர்ந்து, சுட்டுவிரன் முடக்கிச் சிறுவிர
னடுவிரல், விட்டுநிமிர்ந் திறைஞ்சும் விதியிற்றென்று, கூறுவர் தொன்னூற் குறிப்பு
ணர்ந் தோரே" என்றுராகவின். ௬௩.
இச்சொல்லப்பட்ட முப்பத்துமூன்றும் பிண்டிக்கையெனக்கொள்க. * இணை
யாவிணைக்கையெனினும் ஒற்றைக்கையெனினும் பிண்டிக்கையெனினுமொக்கும்.
ரு௫ கஅ. இத்தன்மையவாகிய பிண்டிக்கையுமென்க.
கஅ. பிணையலுமென்பது இரட்டைக்கையுமென்றவாறு.
அஃதாவது இணைக்கை. அது பதினைந்துவகைப்படும். அவையாவன அஞ்ச
லி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கற்கடகம், சுவத்திகம், கடகாவருத்தம்,
நிடதம், தோரம், உற்சங்கம், புட்பபுடம், மகரம், சயந்தம், அபயவத்தம், வருத்த

---

* இணையாவிணைக்கையெனவும் பிரதிபேதமுண்டு.

## ௩.—அரங்கேற்றுகாதை.

மானமென்றிவை. என்னை? "எஞ்சுத லில்லா விணைக்கை யியம்பி, லஞ்சலி தன்னொடு புட்பாஞ் சலியே, பதுமாஞ் சலியே கபோதங் கற்கடகம், நலமாஞ் சுவத்தி கங் கடகா வருத்த, கிடதந் தோர மூற்சங்க மேம்பட, வுறுபுட் பபுட மகரஞ் சயந்த,
மந்தமில் காட்சி யபய வத்த, மெண்ணிய வருத்த மானந் தன்னொடு, பண்ணுங்காலைப் பதினேழ்தென்ப" என்றாராகலின். அவற்றுள்,— ரு

அஞ்சலியென்பது இரண்டுகையும் பதாகையாய் அகமொன்றுவது. என்னை? "அஞ்சலி யென்ப தறிவுறக் கிளப்பி, னெஞ்ச வின்றி யிருகையும் பதாகையாய், வக் தகம பொருந்து மாட்சித் தென்றனர, ரந்தமில் காட்சி யறிந்திசி னோரே." க.

புட்பாஞ்சலியாவது இரண்டுகையும் குடங்கையாய்வந்து ஒன்றுவது. என்னை? "புட்பாஞ் சலியே பொருந்தவிரு குடங்கையுங், கட்டி நிற்குங் காட்சிய தென்ப" என் கூ ஈ றாராகலின். உ.

பதுமாஞ்சலியாவது இருகையும் பதுமகோசிகமாகக் கூட்டுவது; என்னை? "பது ! மாஞ்சலியே பதும கோசிக, மெனவிரு ஸ்கயு மியைந்துநிற் பதுவே" என்றாராகலின். ங.

கபோதமென்பது இரணடுகையும் கபோதமாக்கூட்டுவது; என்னை? "கருதுங் கூடு காலைக் கபோத விணைக்கை, யிருகையுங் கபோத மிசைந்துநிற் பதுவே" என்றாரா கலின். ச.

கற்கடகமென்பது தெரிநிலைக்கையிரண்டும அங்குலிபிணைந்து வருவதெனக்கொ ! ள்க; என்னை? "கருதுங் காலைக் கற்கட கமமே, தெரிநிலை யங்குலி யிருகையும் பிணை யும" என்றாராகலின். ரு.

சுவத்திகமென்பது மணிக்கட்டிற்பொருந்திய பதாகை யிரண்டையும் மணிக்கட் டிலேற்றிவைப்பது; என்னை? "சுவத்திக மென்பது சொல்லுங் காலே, மணிக்கட் டமை ந்த பதாகை யிரண்டையு, மணிக்கட் டேற்றி வைப்ப தாகும்" என்றாராகலின். சு.

கடகாவர்த்தமாவது இரண்டுகையும் கடகமாய் மணிக்கட்டுக்கு ஏற

இயைந்து நிற்பது; என்னை? "கருதிய கடகா வருத்தக் கையே, யிருகையுங கட்கெ மணிக்கட் டியைவது" என்றுராகலின். எ.

நிடதமாவது முட்டியாக இரண்டுகையும் சமஞ்செய்வது; என்னை? "நிடத மென்பது நெறிப்படக் கிளப்பின், முட்டி யிரண்டுகை யுஞ்சம மாகக், கட்டி நிற்குங் காட்சித் தென்ப" என்றுராகலின் அ.

* தோரமாவது இரண்டுகையும் பதாகையாக்கி அகம்புறமொன்றி முன் தாழ் ந்துநிற்பது; என்னை? "தோர மென்பது துணியுங் காலை, யிருகையும் பதாகை யகம் புற மொன்ற, மருவிமுன் றாழும் வழக்கிற் றென்ப" என்றுராகலின். கூ.

உற்சங்கமாவது ஒருகை பிறைகையாகக்கொண்டு ஒருகை அராளமாக்கி இரண் டுகையும் மணிக்கட்டிலேற்றிவைப்பது; என்னை? "உற்சங்க மென்ப துணருங் காலை, யொருகை பிறைக்கை யொருகை யராளந், தெரிய மணிக்கட்டி லேற்றிவைப் பதுவே" என்றுராகலின். க0.

புட்பபுடமாவது குடங்கையிரண்டும் தம்மிற் பக்கங் காட்டி நிற்பது; என்னை?

* இது உடோளமெனவுங் கூறப்படும்.



"புட்பபுட மென்பது புகலுங் காலை, யொத்த விரண்டு குடங்கையு மியைந்து, பக்கங் காட்டும் பான்மைத் தென்ப" என்றுராகலின். கக.

மகரமென்பது கபோதமிரண்டுகையும் அகம்புறமொன்றவைப்பது; உச்சித்த மென்பதும் இதனதுபெயர். "மகர மென்பது வாய்மையி னுரைப்பிற், கபோத மிரு ண்டு கையு மகம்புற, மொன்ற வைப்பதென் றுரைத்தனர் புலவர்" என்றுராக லின். கஉ.

சயந்தமென்பது....................கங.

அபயவத்தமாவது இருகையும் சுகதுண்டமாக நெஞ்சுறநோக்கி நெகிழ்ந்துநிற்

பது; என்னை? "அபயவத் தம்மே யறிவுறக்கிளப்பின், வஞ்சமில் சுகதுண்ட மிருகையு கூ0 மாட்சியி, னெஞ்சுற நோக்கி நெகிழ்ந்துநிற் பதுவே" என்றாராகலின். கசு.

வருத்தமானமாவது முகுளக்கையிற் கபோத க்கையை எதிரிட்டுச் சேர்ப்பது;

என்னை? "வருத்த மானம் வகுக்குங் காலை, முகுளக் கையிற் கபோதக் கையை, நிக

ழச் சேர்த்து நெறியிற் றென்ப" என்றாராகலின். கரு.

இச்சொல்லப்பட்ட பதினைந்தும் பிணையற்கையெனக்கொள்க. இணைக்கையெ கூ0 னினும் இரட்டைக்கையெனினும் பிணையலெனினுமொக்கும்.

கஅ. இத்தன்மையவாகிய பிணையலுமென்க.

கஅ. எழிற்கையுந் தொழிற்கையுமென்பது: எழிற்கை - அழகுபெறக் காட்டுங் கை. தொழிற்கை - தொழில்பெறக்காட்டுங்கை. உம்மையாற் பொருட்கையும் கூறப் பட்டது. பொருட்கை-பொருளுறக்காட்டுங்கை; என்னை? "அவைதாம், எழிற்கை யழ 20 கே தொழிற்கை தொழிலே, பொருட்கை கவிமிற பொருளா கும்மே" என்றாராகலின்.

கக. கொண்ட வகையறிந்து - கொண்டவகையறிதலாவது பிண்டியும் பிணைய

லும் புறக்கூத்துக்குரியகையென்றும், எழிற்கையும் தொழிற்கையும் அகக்கூத்துக்குரி

யகையென்றுமறிதல்.

கக. கூத்துவருகாலையென்பது கூத்துக்களின் வரவு நிகழுமிடத்தென்க.

 ௨௦ - ௨௧. {கூடை செய்தகை வாரதிற் களைதலும், வாரஞ் செய்தகை கூடை
யிற் களைதலுமென்றது அகக்கூத்து நிகழுமிடத்து ஒற்றையிற்செய்த கைத்தொழில்
இரட்டையிற் புகாமலும் இரட்டையிறசெய்த கைதொழில் ஒற்றையிற்புகாமலுங்
களைதல். இன்னும் தேசியிற் கைத்தொழில் * மார்க்கத்துப் புகாமலும் மார்க்கத்துக்
கைத்தொழில் தேசியிற்புகாமலும் களைதலென்றுமாம்; ஒற்றையும் இரட்டையும் தேசி ௩ ௦ க்கூறுகலானும் இரட்டையும் இரட்டைக்கிரட்டையும் வடுகிற் கூறுகலானுமென்க.

௨௨ - ௨௩. பிண்டி செய்தகை யாடலிற் களைதலு, மாடல் செய்தகை பிண்டி
யிற் களைதலுமென்றது புறக்கூத்தினிடத்துப் | பிண்டியென்பது பொருட்கையென்
றும் [பிணையலென்பது தொழிறகையென்றுமாம். இதன்கருத்து ஆடல் நிகழுமிட
த்து அவிநயநிகழாமலும் அவிநயநிகழுமிடத்து ஆடனிகழாமலுங்களைதல்.

௨௪. குரவையும் வரியும் விரவலசெலுத்தியென்பது| குரவைக்கூத்திற்குரிய
கால்களும் வரிக்கூத்திற்குரிய கால்களும் தம்மில் விரவாதபடியே கூத்தை நடத்தி
யென்க.

---

* மார்க்கம் - வடுகு.

"நாவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் ... ... த வுரைக்கு மியல்பிற் றென்ப."

"வரியெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனுஞ் சிறந்த தொழிலு, மறி யக் கூறி யாற்றுழி வழங்கல்."

௨௫. ஆடற் கமைந்த வாசான் றன்னொடு மென்றது இக்கூத்துக்களை இப்படி ... யால் அவற்றுடனேபொருந்த ஆடவும் ஆடுவிக்கவும் வல்ல ஆடலாசிரியனோடுமென் றவாறு.

அறிந்து புணர்த்து விளங்கவறிந்து அறிந்து செலுத்தி அமைந்த ஆசானென்க.

[இசையாசிரியன் அமைதி.]

௨௬-௩௬. யாழுங் குழலுஞ் சீரு மிடறுந்
௩௰

தாழ்குரற் றண்ணுமை யாடலொ டிவற்றி
னிசைந்த பாட லிசையுடன் படுத்து
வரிக்கு மாடற்கு முரிப்பொரு ளியக்கித்
தேசிகத் திருவி னோசை கடைப்பிடித்துத்
தேசிகத் திருவி னோசை யெல்லா
௩௫

மாசின் றுணர்ந்த வறிவின னாகிக்
கவிய து குறிப்பு மாடற் றொகுதியும்
பகுதிப் பாடலுங் கொளுத்துங் காலை
வசையறு கேள்வி வகுத்தனன் விரிக்கு
மசையா மரபி னிசையோன் றானும்

இ - ள். யாழ்ப்பாடலும் வங்கியப்பாடலும் இருவகைத்தாளக் கூறுபாடுகளும் மிடற்றுப்பாடலும் மந்தமாகியசுரததினையுடைய தண்ணுமையும் அகக்கூத்தும் புறக்கூத்தும் பதினொராடலென்னுங் கூத்துக்களும் வல்லனாய் இவற்றுடனே சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும் இரதம் பொருந்தும்படியும் புணர்க்கவும் வல்ல னாய் இருவகைப்பட்ட பாடல்களுக்கும் பொருளான இயக்கம் நான்கினையுமமைத்துத் 1ௐ தேசாந்தரங்களிற் பாடைகளையுமறிந்து அந்தப்பாடைகள் இசைபூணும்படியையுமறிந்து இயற்புலவனினைவும் நாடகப்புலவனிடும் வரவுகளும் இவற்றுக்கடுத்த பாடல் களும் தம்மிற்சந்திப்பிக்குமிடத்துக் குற்றந்தீர்ந்த நூல்வழக்காலே வகுக்கவும் விரிக்க வும் வல்லனாயுள்ள இசைப்புலவனுமென்றவாறு.

இது பொழிப்புரை.

ௐ

உசு. யாழுமென்றது யாழப்பாடலுமென்றவாறு.

யாழ் நால்வகைப்படும்; அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழென்பன. இவை நாலும் பெரும்பான்மை; சிறுபான்மையான் என்னை? "பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன், சீர்பொலியுஞ் செங்கோடு செ வருவன்வுமுன; ப்பினர் - தார்பொலிந்து, மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே, பின்னு முள ^ வே பிற" என்றாராகலின். இந்நால்வகை யாழிற்கும் நரம்புகொள்ளுமிடத்துப் பேரி யாழிற்கு இருபத்தொன்றும், மகரயாழிற்குப் பதினேழும், சகோடயாழிற்குப் பதினா ன்கும், செங்கோட்டியாழிற்கு ஏழுங்கொள்ளப்படும். என்னை? "ஒன்று மிருபது மோ

ரேழ்மேற் பத்துடனே, நின்றபதி னூறேழு ரேடுங்காற் - குன்றாத, நால்வகை யாழி
ற்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகை நூலோர் விதி" என்றாராகலின். இனி
இவ்வியாழென்னும் ஒன்றிற்கமைந்த பலவுறுப்பாகிய "கோட்டின தமைதியுங் கொ ளுவிய வாணியு மாட்டிய பத்தரின் வகையு மாடகமுந், தந்திரி யமைதியுஞ் சாற் ® , றிய பிறவு, முந்திய நூலின் முடிந்த வகையே" வகுக்கப்பட்டனவெல்லாம் கானல்வ
ரியில், "குற்றநீங்கிய யாழ்" என்பதன்கண் விரியக்கூறுதும்.

உசு. குழலுமென்பது வங்கியப்பாடலுமென்றவாறு.

குழல் - வங்கியம்; அதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்
காலியென ஐந்துமாம். என்னை? "ஓங்கிய மூங்கி லுயர்சந்து வெண்கலமே, பாங்குறு ®, செங் காலி கருங்காலி -பூங்குழலாய், கண்ண னுவந்த கழைக் கிவைக ளாமென்றார், பண்ணமைந்த நூல்வல்லோர் பார்த்து" என்றாராகலின். இவற்றுள் மூங்கிற்
செய்வது உத்தமம். வெண்கலம் மத்திமம். ஏனைய அதமமாம். மூங்கில் பொழு
துசெய்யும். வெண்கலம் வலிது. மரம் எப்பொழுதும் ஒத்துநிற்கும். இக்கால
த்துக் கருங்காலி செங்காலி சந்தனம் இவற்றாற் கொள்ளப்படும்;

கருங்காலிவேண்டு தீருமென்பது பெருவழக்கு. கழை - குழல். இவை கொள்ளுங்கால் உயர்ந்த ஒத்தநிலத்

திற் பெருகவளர்ந்து காலுகாற்றுமயங்கின் நாதமில்லையாமாதலான் மயங்காநிலத்தின்

கண் இளமையும் நெடும்பிராயமுமின்றி ஒருபுருடாயப்புக்க பெரியமரத்தைவெட்டி.

ஒருபுருடாகாரமாகச்செய்து அதனைநிழலிலே யாற இட்டுவைத்துத் திருகுதல் பிள

த்தல் போழ்ந்துபடுதல்செய்கையறிந்து ஓர் யாண்டுசென்றபின் இலக்கணவகையான் உ௦ வங்கியஞ்செய்யப்படும்; என்னை? "உயர்ந்த சமதலத் தோங்கிக்கா லூன்கின், மயங்கா

மை நின்ற மரத்தின்-மயங்காமே, முற்றியமர மரந் தன்னை முதறடிந்து, குற்றமி

ல்லா ராண்டிற் கொளல்" என்றாராகலின். இதன் பிண்டியிலக்கணம்; நீளம் இரு

பதுவிரல்; சுற்றளவு நாலரைவிரல். இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஓர்பாதி

மரனிறுத்திக்கடைந்து வெண்கலத்தாலே அணைசுபண்ணி இடமுசத்தையடைத்த உரு வலமுகம் வெளியாகவிடப்படும். என்னை? "சொல்லுமிதற்களவு நாலேந்தாஞ் சுற்ற

ளவு, நல்லவிர லுலரையா நன்னுதலாய் - மெல்லத், துளையளவு நெல்லரிசி தூம்பிட

மாய, வளைவலமேல் வங்கிய மென்" என்றாராகலின். இனித் துளையளவிலக்கணம்:

அளவு இருபதுவிரல். இதிலே தூபமுகத்தின் இரண்டுநீக்கி முதல்வாய்விட்டு இம்மு

தல்வாய்க்கு ஏழங்குலம்விட்டு வளைவாயினுமிரண்டுநீக்கி நடுவினின்ற ஒன்பதுவிரலி ரு௦ னும் எட்டுத்துளையிடப்படும். இவற்றுள்

ஒன்று முத்திலாயென்றுகழித்துநீக்கி நின்ற

ஏழினும் ஏழுவிரல்வைத்து ஊதப்படும். துளைகளின் இடைப்பரப்பு ஒருவிரலகலம்

கொள்ளப்படும். "இருவிரல்க ணீக்கி முதல்வாயேழ் நீக்கி, மருவு துளையெட்டு மன்

னும் - பெருவிரல்க, ளலஞ்சு கொள்க பரப்பென்ப நன்னுதலாய், கோலஞ்செய்

வங்கியத்தின் கூறு" என்றாராகலின். இவ்வங்கியம் ஊதுமிடத்து வளைவாய்சேர்ந்த ஒரு துளையை | முத்திரையென்றுநீக்கி முன்னின்ற ஏழினையும் ஏழுவிரல்பற்றி வாசிக்க.

ஏழுவிரலாவன: இடக்கையிற்பெருவிரலும் சிறுவிரலுநீக்கி மற்றைமூன்றுவிரலும், வலக்கையிற் பெருவிரலொழிந்த நான்குவிரலும் ஆக ஏழுவிரலுமென்க. என்னை? | "வளைவா யருகொன்று முத்திரையாய் நீக்கித், துளையேழி னின்ற விரல்கள் - விளை

யாட், டி டமூன்று நான்குவல மென்றார்கா ணேகா, வடமாரு மென்முலையாய் வை

மரு த்து" என்றாராகலின். இவ்வங்கியத்து ஏழுதுளைகளில் இசைபிறக்குமாறு: அஃது

எழுத்தாற்பிறக்கும். எழுத்து, ச ரி க ம ப த நி என்பன. இவ்வேழெழுத்தினையும்

## ௬.—அரங்கேற்றுகாதை.

அ௯

மாத்திரைப்படுத்தித்தொழில் செய்ய இவற்றுள்ளே ஏழிசையும்பிறக்கும். ஏழிசை யாவன: சட்சம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதமென் பன. இவைபிறந்து இவற்றுள்ளே பண்கள் பிறக்கும். என்னை? "சரிக மபதநியென் றேழெழுத்தாற் றானம், வரிபரந்தகண்ணினுய் வைத்துத் - தெரிவரிய, வேழிசையுந் தோன்று மிவற்றுள்ளே பண்பிறக்குஞ், சூழ்முதலாஞ் சுத்தத்

தலை" என்றாராகலின். ரு

உசு. இத்தன்மைத்தாகிய குழலுமென்க.

உசு. சீருமென்பது "செம்முறை யுறழ்பே மெய்க்கிலே கொட்ட, வீட்ட னிமிர்த்தல்" என்றுசொல்லப்படாநின்ற வண்ணக்கூறுபாட்டையும் இருவகைத்தாளக்கூறுபாட்டையும் பாலைநிலையினையும் பண்ணுநிலையினையும் நிலைப்படப்படுத்துத் தூய்தாகக்காட்டுந் தன்மையுமென்க.
கூ

இதன்பகுதியெல்லாம் ஈண்டுரைப்பிற்பெருகும். வந்தவழிக்கண்டுகொள்க. அஃதன்றித் தாளவகையோத்தினுட் கண்டுகொள்க.

உசு மிடறுமென்பது * சாரீரவினையுமென்றவாறு.

அதனைப், "பூதமுதற் சாதனத்தாம் புற்கலத்தின் மத்திமத்து, காதமுத லாமெழுத்து நாலாகி-வீதி, வருவரத்தாற் றொனத்தால் வந்து வெளிப்பட், டிருவரத்தாற் றோன்று .றற மிசைக்கு" என்பதனாலுணர்க.
புற்கலம் - உடம்பு. அப்புற்கலத்துக்கு முதலாயுள்ள பூதமாவன: மண் நீர் தீ வளி வானெனவிவை. என்னை? "மண்ணுடனீர் நெருப்புக் கால்வான மென்றிவைதா, மெண்ணிய பூதங்க ளென்றறிந்து - நண்ணிய, மன்னர்க்கு மண்கொடுத்த மாற்றார்க்கு விண்கொடுத்த, தென்னவர்கோ தெளி" என்றாராகலின். இப்பூதங்களைந்தானும் புற்கலமாமென்ற ஆசானை

மானே
மாணுக் உ௦
கன் பணிந்து பூதங்கடாம் ஒன்றோடொன்று கூடுவனவல்ல; மண் செறிதலைக் குணமாகவுடைத்து; நீர நெகிழ்தலைக் குணமாகவுடைத்து; தீத் தெறுதலைக் குணமாகவுடைத்து; காற்று ஓரிடத்தும்

நிலைபெற்றுநிற்பதன்று; ஆகாயமென்பது ஒருருவுண்டில்லை யன்று; அன்றியும் "செப்பிய பூதங்கள் சேர்ந்தோர் குறியன்றே, யப்பரிச மண்ணைந்து நீர்நாலா - மொப்பரிய, தீயாகின் மூன்றிரண்டு காற்றம்பர மொன்று, வேயாறுந் தோ உரு ளி விளம்பு" என்பதனுல் மண் ஐந்துபயனுடைத்து; நீர் நான்குபயனுடைத்து; தீ மூன்றுபயனுடைத்து; காறறு இரண்டுபயனுடைத்து; வான் ஒருபயனுடைத்து; ஆதலால் இவை ஒன்ருேடொன்று கூடுவனவல்லவாகவும் இவற்றின் கூட்டமுடம்பென் றீராதலால் இவ்வைந்தின்கூட்டம் உடம்பாவது எவ்வாறுவெனின்,—இதற்குவிடை: "மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற, வைவாயு மாயவற்றின் மீது ...படுத்தத் - துய்ய, சுவையொளியூ றேசை நாற்றமென் றைந்தா, லவைமுதற் புற்கலமாம" என்பது பூதங்கள் பரிணமித்து உடம்பாமாறுகூறுகின்றது. பூதங்களைந்தும் தந்தம் தன்மைநீங்கி மண உடம்பாயும், நீர் வாயாயும், தீக் கண்ணாயும், காற்று மூக் காயும், ஆகாயம் செவியாயு நின்று உடம்பாம். பொறிகடோறும் விளியோகப்பட்ட புலன் சுவைமுதல் ஐந்துவகைப்படும். இவ்வைந்தும் பொறியைந்ினுமேறி, மண்...ஞல் உடம்பு ஊருயும், நீரால் வாய் சுவையாயும், தீயாற் கண் ஒளியாயும், காற்ருல் மூக்கு நாற்றமாயும், வானுற் செவி ஓசையாயும்வந்து உடம்பாம். அன்றியும் மண்ணின்பகுதி நரம்பு இறைச்சி என்பு மயிர் தோலெனவைந்து. நீரின்பகுதி நீர் மூளை சுக்கிலம் நிணம் உதிரமெனவைந்து. "பசிசோம்பு மைதுனங் காட்சிநீர் வேட்கை,

* சரீரவீணையென்றும் பிரதிபேதமுண்டு.



தெசிகின்ற நிக்குணமோ வைக்கு - மொசிகின்ற, போக்கு வரவுகோய் கும்பித்தன் மெ
ய்ப்பரிசம், வாக்குடைய காற்றின் வகை" என்பது தீயின்குணமும்

காலின்குணமுமு
ணர்த்துகின்றது ; ஆவன : பசி சோம்பு மைதுனம் காட்சி நீர்வேட்கையெனவிவை
நீக்குணம். போக்கு வரவு கோய் கும்பித்தல் பரிசமெனவிவை காற்றின்குணம். "ஓங
ரு கும் வெகுளி மதமான மாங்கார, நீங்கா வுலோபமுட னிவ்வைந்தும்-பாங்காய, வண்
ண மூலமடவாய் வானகத்தின் கூறென்ரு, ரெனணிமிக நாலுணர்ந்தோ ரெண்."
இது ஆகாயத்தின்குணமுணர்த்துகின்றது. வெகுளி மதம் மானம் ஆங்காரம் உலோ
பமெனவிவை. இப்பூதகுணம் இருபத்தைந்துங் கொண்டு உ டம்பாம். "ஒப்பார் பிரா
ண னபான னுதான னுடன், றப்பா வியானன் சமான னே - யிப்பாலு, நாகன் றன
ஞ்சயன் கூர்மன் கிருகரன், நீதிலாத் தேவதத்த னே." என்பது தசவாயுக்களையுமு
ணர்த்துகின்றது. ஆவன: பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன்
கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயனெனவிவை. "இடைபிங் கலைசுழுனை கா
ந்தாரி யத்தி, புடைநின்ற சிங்குவை சங்கி னிபூடாவோ, டங்குகு கன்னி யலம்பு வெ
னவுரைத்தார், தங்குதச நாடிக டாம்" தசநாடிகளாவன: இடை, 55ரு காந்தாரி, அத்திசிங்குவை, சங்கினி, பூடா, குகு, கன்னி,

பிங்கலை, சுழுமுனை,
அலம்பு எனவிவை;
"பூத வகைகளோ ரைந்தாய்ப் ' பொறியைந்தாய், வாதனையோ

லாயைந்தாய் மா

ருதமு, மேதகுசீர்ப், பத்தாகு நாடிகளும் பப்பத்தாம் பாரிடத்தே, முத்திக்கு வித

தா முடம்பு'' என்பது|பூதபரிணாமமுணர்த்துகின்றது. பூதங்களைந்தாவன: மண்

முதலாயின; பொறியைந்தாவன: செவிமு தலாயின; புலனைந்தாவன: சத்தமுத

உ௦ லாயின; |வாதனையையைந்தாவன:|நரம்புமுதலிய ஐந்தும், | நீர்முதலிய ஐந்தும்,|பசி

முதலிய ஐந்தும், போக்குமுதலிய ஐந்தும, வெகுளிமுதலிய ஐந்தும். தசவாயுக்களா

வன: பிராணன்முதலியபத்தும். தசநாடிகளாவன: இடை பிங்கலைமுதலிய பத்தும்.

மூலாதாரத்து|எழுபத்திராயிரநாடிகளும்| பீர்க்கங்கூட்டின் மூன்றுகண்ணும் போல

இடை பிங்கலை சுழுமுனையென்னும் மூன்றுநாடிகளுமா ய் நடுவுநின்ற சுழுமுனையொ டு| ழிய இரண்டானும் மேனோக்கியேறி இரணடுமூககானும் ஓரோர் பாரிசத்து ஐந்து

| நாழிகையாகக கொண்டு ஒருமாத்திரையில் நூறறிருபத்தைந்து சுவாதமாய் ஒருசுவா

தத்திலே பன்னிரண்டங்குலிவாயுப் புறப்பட்டு நாலங்குலி தேய்ந்து எண்விரலடங்

குகின்றது பிராணவாயுவெனக்கொள்க. |மாத்திரையாவது: இரண்டரை நாழிகை

யை எட்டுக்கூறிட்டு ஒருகூறென்றறிக. | அபானவாயு மலமூத்திரங்களைப் பெய்விக் கு ம். | உதானன் கண்டத்தானத்தில் நிறகும். | வியானவாயு போக்குவரவு செய்து

இயங்கப்பண்ணும். | சமானவாயு அறுவகைச்சுவையையும் அன்னத்தையும் பிரித்து

எழுவகைத் தாதுவின்கண் ணுங்கலப்பிக்கும். { கூர்மன் இமைப்பும் விழிப்பும் உறகக

மூம் உணர்ச்சியும் பண்ணும்.{நாகன் விக்கலிடுவிக்கும்{கிருகரன் கோபத்தைப்பண்ணு

விக்கும். தேவதத்தன் உடம்பெரிப்பைப் பண்ணுவிக்கும் தனஞ்சயன் பிராணன் போ நூடு னபின்னும் உடம்பைவிடாதேநின்று மூன்றுநாளுதிபபிதது உச்சந்தலையிற் பிறகூற்

றிலே மூன்றுநெற்கிடை வெடித்துப்போமென்றறிக. நாடிகள் எழுபத்திராயிரத்தி

னும் தசநாடிகளும் தசவாயுக்களும் பிரதானமெனக்கொள்க. என்னை? {"இடைபிங்

கலையிரண்டு மேறும் பிராணன், புடைநின் றபானன்மலம் போக்குந் - தடையின்றி-

யுண்டனகீ ழாக்கு முதானன் சமானனெங்குங், கொண்டெறியு மாறிரதக் கூறு" நும் (௪) எனவும், | "கூர்ம னிமைப்புவிழி கோனுகன் விக்கலாம், பேர்வில் வியானன்

பெரிதியக்கும் - போர்மலியுங், கோபங் கிருகரனுங் கோப்பி னுடம்பெரிப்புத், தே

வதத்தனுகுமென்று தேர்" (உ) எனவும், "ஒழிந்த தனஞ்சயன்பே

ரோசி லுயிர்போ ரு.—அரங்கேற்றுகாதை.

அரு

ய்க், கழிந்தாலும் பின்னுடலைக் கட்டி-யழிந்தழிய, மூக்கா லுதிப்பித்து முன்னிடவாலை மாவின்றிப், பின்னு வெடித்துவிடும் போந்து." (௩) எனவும் இசைநுணுக்க முடைய சிகண்டியாரும் கூறினாராகலின். இங்ஙனம் பூதங்களானும் பொறிமுதலியவ

ற்றானும் வாயுக்களானும் நாடிகளானும் பரிணமித்தச் சுக்கிலசுரோணிதங்களா லே உடம்பாகக்கொண்டு இருவினையுந் தன்னகத்தடக்கி உயிர்பிறக்குமென்றறிக. ரு

"தொய்யவுடம் பாவன தொண்ணூற்று றங்குலியா, மெய்யெழுத்து நின்றியங்கு

மெல்லத்தான் – வையத், திருபாலு நாற்பத் தெழுபாதி நீக்கிக,
கருவாகு மாதாரங் காண்" என்பது இசைக்குப் பிறப்பிடமாயுள்ள
ஆதாரமுணர்த்துகின்றது. சரீரத்த
ளவு தன்கையால் தொண்ணூற்றுறங்குலம். இதனுள் மேலே நாற்பத்தேழரையங்கு
லமும் கீழே நாற்பத்தேழரையங்குலமும்விட்டு நடுநின்ற ஓரங்குலம் மூலாதாரம். இத | கூப
ன்மேலே நால்விரல்விட்டுப் பின்னுதாரகின் றியங்குமெனக்கொள்க.| "ஆதாரம் பற்றி
யசைவ முதலெழுத்து, மூதார்ந்த மெய்யெழுத்து முன்கொண்டு – போதாரு, முந்தி
யிடைவளியா யோங்குமிடை பிங்கலையால், வந்துமே லோசையாம் வைப்பு."| "ஐவ
கைப் பூதமு மாய சரீரத்து, மெய்பெற நின் றியங்கு மெய்யெழுத்தாற் -
றுய்ய, வொரு நாடி நின்றியங்கி யுந்திமே லோங்கி, வருமா
லெழுத்துடம்பின் வந்து." கூரு

இனி| ஆளத்தியாமாறுணர்த்துகின்றது.| "மகரத்தி னொற்றுற் சுருதி
விரவும், பக ருங் குறினெடில்பா ரித்து – நிகரிலாத்,
தென்னு தெனவென்று பாடுவரே லாளத்தி, மன்னுவிச் சொல்லின்
வகை" முதற்பாடுமிடத்து மகரத்தினொற்றுலே நாதத்தையுச்
சரிக்குமரபுபகரிற் பாரித்து முற்கூறிய நாதத்தினைத்
தொழில்செய்யுமிடத்துக் குற் றெழுத்தாலும்
நெட்டெழுத்தாலுஞ்செய்யப்படும். அவை |அச்சு பாரணையென்றுபெய
உ ர்பெறும். அச்சுக்கு எழுவாய் குறறெழுத்து. பாரணைக்கு எழுவாய்
நெட்டெழுத்து. அச்சு தாளத்துடனிகழும். பாரணை கூத்துடனிகழும்.
ஆளத்திசெய்யுமிடத்துத் தென்னுவென்றும் தெனுவென்றும்
இரண்டசையுங்கூட்டித் தென்னுதெனுவென் றும் பாடப்படும்.
இவைதாம் |காட்டாளத்தி, |நிறவாளத்தி, ' பண்ணாளத்தியெனமூன்
றுவகைப்படும். இவற்றுட் காட்டாளத்தி அச்சுடனிகழும்.
நிறவாளத்தி நிறங்கு | 217 லையாமற் பாரணையுடனிகழும்.
பண்ணுளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும்:| "குன்றுக்
குறிலேந்துங் கோடா நெடிலேந்து, நின்றூர்ந்த மாநதாங்

தவ்வொடு-நன்ரூக, நீளத்தா லேழு நிதானத்தா னின்றியங்க, வாளத்தி யாமென் றறி'' என்பது ஆளத்திக்கு இன்னும்
படுவதோரிலக்கணமுணர்த்துகின்றது. குன்ரூக்குறிலேந்துங் கோடா நெடிலேந்துமென்பது குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலும்
ஆளத்திசெய்யப்படும் நூ எ - று. குற்றெழுத்தைந்தாவன: அ இ உ எ ஒ. நெட்டெழுத்தைந்தாவன: ஆ ஈ ஊ ஏ ஓ எனவிவை.
தின்ரூந்தவென்பது மெய்யெழுத்தாகிய பதினெட்டெழுத்தி னுள்ளும் மவ்வும் நவ்வும் தவ்வுமென மூன்றெழுத்தினுமல்லா
மற்றையெழுத்துக்
கள் ஆளத்திக்கு வரப்பெரு எ-று இம்மூவகைமெய்யினுள்ளும் மவ்வினம் சுத்தத்திற் குரித்து; நவ்வினம் சாளகத்திற்குரித்து; தவ்வினம் தமிழ்க்குரித்த. விரவவும்பெறும்.நீ ?
இங்ஙனம் மூலாதாரந்தொடங்கி எழுத்தினுதம் ஆளத்தியாய்ப் பின்னிசையென்றும்
பண்ணென்றும்பெயராம். என்னை? ''பாலோ டணைத லிசையென்றூர் பண்ணென் றூர், மேவார் பெருந்தான மெட்டானும - பாவா, யெடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப், படுத்தமையாற் பண்ணென்று பார்''
புல இயற்பாக்களுடனே திறத்தை இசைத்தலால்
இசையென்றுபெயராம். பெருந்தானமெட்டினும்
கிரியைகளெட்டா ஆம் பண்ணிப்படுத்தலாற் பண்ணென்று
பெயராயிற்று. |பெருந்தானமெட்டாவன: அ சு

# சிலப்பதிகாரம்.

நெஞ்சம் மிடறும் நாக்கும் மூக்கும் அண்ணக்கும் உதடும் பல்லும் தலையுமெனவிவை.

| கிரியைகளெட்டாவன: எடுத்தல் படுத்தல் நலிதல் கம்பிதம் குடிலம் ஒலி உருட்டு தா
க்கு எனவிவை.

இங்ஙனம்பிறந்து பண்ணப்படும் பண்ணும் இசையுமாகிய இவற்றைப் பயக்கு நூ மிடறு, ஆகுபெயரான் மிடற்றுப்பாடலு

மென்றுயிற்று.

உ.எ. தாழ்குரற் றன்னுமை யென்பது தாழ்ந்த குரலினையுடைய தண்ணுமைக் கருவிமுதலாயின வாசித்தலுமென்க. அவையாவன: பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு,

ரு.0 கண்விடு தூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெரும்பறையெனத் தோலாற்செய்யப்பட்டகருவிகள்; என்னை? "பேரிகை படக மிடக்கை யுடுக்கை, சீர்மிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை, திமிலை குடமுழாத் தக்கை கணப்பறை, தமருகந் தண்ணுமை தாவி றடாரி, யந்தரி முழவொடு சந்திர வளைய, மொந்தை முரசே கண்விடு தூம்பு, நிசாளந் துடுமை சிறுபறை யடக்க, மாசி 'றகுணிச்சம் விரலேறு பாகந், தொக்க வுபாங்கந் * துடிபெரும் பறையென, மிக்க நூலோர் விரித்துரைத் தனரே" என்றாராகலின். இவை அகமுழவு அகப்புறமுழவு புறமுழவு புறப்புறமுழவு † பண்ணமைமுழவு நாண் முழவு காலைமுழவென எழுவகைப்படும். அவற்றுள் அகமுழவாவன முன்சொன்ன ‡ உத்தமமான மத்தளம் சல்லிகை இடக்கை கரடிகை பேரிகை படகம் குடமுழா உ௬ வெனவிவை. அகப்புறக்கருவியாவன: முன்சொன்ன மத்திமமான தண்ணுமை தக்கை தகுணிச்சமுதலாயின. புறமுழவாவன: முன்சொன்ன அதமக்கருவியான கணப்பறைமுதலியன. புறப்புறக்கருவியாவன: மூற்கூறப்படாத நெய்தற்பறைமுத லாயின. பண்ணமைமுழவாவன: முன்சொன்ன வீரமுழவுநான்கும். அவையாவன முரசு நிசாளம் துடுமை திமிலையெனவிவை. நாண்முழவாவன: நாட்பறை; ஆவது நாழிகைப்பறை. காலைமுழவாவன முன் துடியென்றது.

இனி இவற்றுள், மத்தளம்: மத்து ஓசைப்பெயர்;

இசையிடனுகிய கருவிகட் கெல்லாம் தளமாதலான் மத்தளமென்று பெயராயிற்று. இக்கருவி பலகூத்திற்கும உரித்தாகலானும் பாடல் எழுத்தான் உள்ளே பிறத்தலானும் முழவுகளெல்லாம் இத | னுள்ளே பிறத்தலானும் இதனை நான்முகனுமென்ற வாறு.

‡ சல்லிகையென்பது சல்லென்ற ஓசையையுடைத்தாதலாற் பெற்றபெயர்.

ஆவஞ்சியெனினு ம்

குடுக்கையெனினும் இடக்கையெனினுமொக்கும்; அதற்கு ஆவினுடைய| வஞ்சித்தோலைப் போர்த்தலால்| ஆவஞ்சியென்று பெயராயிற்று; குடுக் கையுரகவுடைத்தலாற் | குடுக்கையென்றுபெயராயிற்று; வினைக்கிரியைகள் இடக் கையாற்செய்தலின்| இடக்கையென்றுபெயராயிற்று.

---

* முன்புகூறிய காழிகைப்பறை இவ்விடத்துக்கூறப்பட்டில து.

† பண்மைமுழவெனவும் பிரதிபேதமுண்டு.

‡ "தரித்த மதங்க மத்தளஞ் சல்லி, பெருத்த கரடி கையே பேரி - யுரத்த, பட கங் குடமுழவம் பாங்காய வேழு, மடைவே முதர் கருவி யாம்" என்ருர் சுத்தாநந்த ப்பிரகாசமுடையாரும்.

காடி கத்திறற்போலும் ஓசையையுடைத்தாதலாற் காடிகையென்ற பெயரா யிற்று.

பிறவற்றையும் இங்ஙனம் உய்த்துணர்ந்துகொள்க.

இவற்றுள் முதலிற் கரங்கொள்வது மத்தளமாதலின் முதற்கருவியாயிற்று.

இடைக்கருவி சல்லி; இடைகொளவைத்ததாகலின். கடைக்கட்டட்டுக்கு உரித்தாகலின்.

கடைக்கருவி உடுக்கை; ரு

இங்ஙனமாகிய கருவிகட்கெல்லாம் முதலாதலனோக்கித் தண்ணுமையொன்றனை யுமே கூறினார்.

உஎ. ஆடலொடென்பது அகக்கூத்துப் புறக்கூத்துப் பதினோராடலென்றுசொல்லப்படாநின்ற ஆடலுடனேயென்க. ஒடு - உடனிகழ்ச்சி; "ஒடுவென் கிளவி யுட கூ ப னிகழ் வாகும்" என்றாராகலின். இச்சொல்லப்பட்டவற்றுடனே யென்றவாறு.

உஎ - உஅ. இவற்றி னிசைந்த பாட லிசையுடன் படுத்தென்பது இச்சொல்ல ப்பட்ட கூத்துக்களுகுச் சேரச்செய்த உருக்களை இசைகொள்ளும்படியும் சுவைபொருந்தும்படியும் புணர்க்கவல்லனாகி யென்க.

உகூ. வரிக்குமாடற்கு முரிப்பொருளியக்கியெனபது செந்துறை வெண்டுறை கூரு என்னப்படாநின்ற இருவகைப்பாடல்களுக்கும் உரிமைப்பொருளாயமைந்த இயக்க

௩௦. தேசிகத்திருவிளைசை கடைப்பிடித்தென்பது இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்றுசொல்லப்பட்ட சொற்கள் இசைபூணும்படியைக் கடைப்பிடித்தறிந்தென்றவாறு.
௨௦

௩௧ - ௩௨. தேசிகத் திருவி ளைசை யெல்லா, மாசின் றுணர்ந்த வறிவின னாகி என்பது இச்சொற்களிற் புணர்ப்புண்ட இசைவேறுபா டுகளையெல்லாம் குற்றந்தீர உணரவல்ல அறிவினையுடையனாகியென்க.

௩௩. கவியது குறிப்புமென்பது இப்புலவனினைந்த கோட்பாடுமென்க.

௩௩. ஆடற் றொகுதியுமென்பது ஆடலாசிரியனிடும் மேல்வரவுகளின் தொகுதி ௨௫ யுமென்க.

௩௪. பகுதிப்பாடலுமென்பது இவற்றின்பகுதிக்கமைந்த பாடலுமென்க.

௩௪. கொளுத்துங் காலையென்பது இக்கூத்துக்களை ஆசிரியன் குறிப்புக்கும் பாடலுள்ளிட்டவற்றுக்கும் சேரவியற்றமிடத்தென்க.

௩௫ - ௩௬. வசையறு கேள்வி வகுத்தனன் விரிக்கு, மசையா மரபி னிசையோ ௩௦ ன் றானுமென்பது இச்சொல்லப்பட்டவற்றைக் குற்றந்தீர்ந்த நூல்வழக்காலே வகுக்கவும் விரிக்கவும்வல்ல பாடலாசிரியனுமென்க.

இசையுடன்படுத்து இயக்கிக் கடைப்பிடித்து உணர்ந்த அறிவினனாகி விரிக்கும் இசையோனென்க.

அஅ சிலப்பதிகாரம்.

[கவிஞன் அமைதி.]

கள் - சச. இமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறியத்
தமிழ்முழு தறிந்த தன்மைய னாகி
வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்தி
னாட்டிய நன்னூ னன்கு கடைப்பிடித்
ரு இசையோன் வக்கிரித் திட்டத்தை யுணர்ந்தாங்
கசையா மரபி னதுபட வைத்து
மாற்றோர் செய்த வசைமொழி யறிந்து
நாத்தொலை வில்லா நன்னூற் புலவனும்

களா-கஅ. இமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறியத்,
தமிழ்முழு தறிந்த தன்மைய ஆ ௦ னாகி - ஆரவாரத்தையுடைய கடல்சூழ்ந்தநிலத்திலே வடக்கும் தெற்குங் குடக்கும் குணக்கும் வேங்கடங் குமரி தீம்புனற்பௌவமெனத் தமிழ்நாட்டிற்கு எல்லைகூறப்ப

ட்ட தமிழ்த்தேசத்தாரறிய மூன்றுதமிழும் போமென்னுந் தன்மையையுடையனாகி

யென்க.

கக-௨0. வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்தி,
னாட்டிய நன்னூ னன்குக

ரு

டைப் பிடித்தென்பது வேத்தியலென்றும் பொதுவியலென்றுங் கூறப்பட்ட இரண்டு கூறுபாட்டினையுடைய நாடகநூலை நன்றாகக்கடைப்பிடித்தென்க.

வேத்தியல் - அகம், பொதுவியல் - புறமென்பாரும், பிறிதுகூறுவாருமுளர். அவை முடிந்தநூல்களிற் கண்டுகொள்க.

சக-சஉ. இசையோன் வக்கிரித் திட்டத்தை யுணர்ந்தாங்,
கசையர் மரபி னது ௨ ௦ பட வைத்தென்பது

இசைப்புலவன்|ஆளத்திவைத்த பண்ணீர்மையை முதலும முறை
யும் முடிவும் நிறையும் குறையும் கிழமையும் வலிவும் மெலிவும்
சமனும் வனாயறை
யும் நீர்மையுமென்னும் | பதினொருபாகுபாட்டினுமறிந்து அறிந்தவண்ணம் அவன் தானநிலையில் எய்தவைத்த நிறம் தன்கவியினிடத்தே தோன்றவைக்க வல்லனு
யென்க.

உ௫ சங-சச. மாற்றோர் செய்த வசைமொழி யறிந்து,
நாத்தொலை வில்லா நன்னூற்
புலவனுமென்பது பகைவராற்செய்யப்பட்ட வசையின்
அளவறிந்து அவைதோற்று
தபடியிலே வசையின்மொழிகளான் நாடகக்கவி செய்யவல்ல
நல்ல நூலைவல்ல புல
வனுமென்றவாறு.

| "இன்ன னல்லோன் செய்குவ னயிற்,|றேற்று மாந்த
ராரியம் போலக், கேட் ந௦ டார்க் கெல்லாம் பெருநகை தருமே"
என்றாராகலின்.

தன்மையனுகிக் கடைப்பிடித்து உணர்ந்து வைத்து
அறிந்து தொலைவில்லாத
புலவனுமென்க.

[தண்ணுமையோன் அமைதி.]

சடு - ருரு. ஆடல் பாடல் இசையே தமிழே
ந௫ பண்ணே பாணி தூக்கே முடமே
தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து
|கூடை நிலத்தைக் குறைவின்று
மிகுககாங்கு

நட-அரங்கேற்றுகாதை.

அகூ

வார நிலத்தை வாங்குபு வாங்கி
வாங்கிய வாரத் தியாழுங் குழலு
மேங்கிய மிடறு மிசைவன கேட்பக்
கூருகிர்க் கரணங் குறியமிந்து சேர்த்தி
யாக்கலு மடக்கலு மீத்திறம் படாமைச

ரு

சித்திரக் கரணஞ் சிதைவின்று செலுத்து
மத்தகு தண்ணுமை யருந்தொழின் முதல்வனும்

இ - ள். எல்லாக்கூத்துக்களும் எல்லாப்பாட்டுக்களும் எல்லாவிசைகளும் வடவெழுத்தொரீஇ வந்த எழுத்தானே கட்டப்பட்ட வாக்கியக்கட்டளைக் கூறுபாடு களும் எல்லாப்பண்களும் இருவகைத்தாளங்களும் எழுவகைத்தூக்குக்களும் இவற் றின்குற்றங்களும் இயற்சொல்முதலிய நால்வகைச்சொற்களுமென்று சொல்லப் பட்டனவற்றை நுண்ணிதாக உணர்ந்து ஒரோருருவை இரட்டிக்கிரட்டி சேர்த்த விடத்து நெகிழாதபடி நிரம்பநிறுத்தவும் அவ்விடத்துப் பெறும் இரட்டியேயாய்ப் பாகவுருவானவழி நிற்குமானநிறுத்திக் கழியுமானங்கழிக்கவும் வல்லனாய் இப்படி நிகழ்ந்த உருக்களில் யாழ்ப்பாடலும் குழலின்பாட்டும் கண்டப்பாடலும் இயைந்து கூடு கடக்கின்றபடி கேட்போர் செவிக்கொள்ள அமைந்த கரணத்தாற் குறியறிந்து •சேரவாசித்து மற்றைக் கருவிகளிற் குறைநிரப்புதலும்
மிகுதியடக்குதலும் ஆக்கு
மிடத்தும் அடக்குமிடத்தும் இசையில் இரந்திரந்தோன்றாதபடியே
செய்தலும்
செய்யுமிடத்துக் கைத்தொழில் அழகுபெறச் செய்துகாட்டலும்
வல்லனுய அழகு
தக்க தண்ணுமைக்கருவியினையும் அரிய தொழிலினையுமுடைய
ஆசிரியனுமென்ற உ ப
வாறு.

இது பொழிப்புரை.

சரு. ஆடலென்பது எல்லாக்கூத்துக்களும் எ - று.

சரு. பாடலென்பது பண்ணன்முதலிய எல்லாப்பாடலியல்பும் எ - று.

சரு. இசையென்பது 'நரப்படைவாலுணரக்கப்பட்ட பதினோராயிரத்துத் ூ௫
தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்றாகிய ஆதியிசைகளும் எ - று.

அவையாவன : " உயிருயிர் மெய்யள வுணர்த்தவைம் பாலினு, முடறமி ழிய
விசை யேழுடன் பகுத்து, மூவேழ் பெய்தந் ........., தொண்டு மீண்ட பன்னீ
ராயிரங், கொண்டன ரியற்றல் கொளவல்லோர் கடனே"
என்னுஞ்சூத்திரத்தா லுறழ்ந்து கண்டுகொள்க.

ரு௦

சரு. தமிழென்பது வடவெழுத்தொரீஇ வந்த எழுத்தானே உறழ்ந்து கட்டப்
பட்ட வாக்கியக்கூறுகளும், இயலிசைநாடகமென்று சொல்லப்பட்ட மூவகைத்
தமிழ்களும் எ - று.

சசு. பண்ணென்பது நரப்படைவால் திறந்தோன்றப் பண்ணப்படாநின்ற
பண்ணும் பண்ணியற்றிறமும் திறமும் திறத்திறமும் எ - று.
ரு ௧

சசு. பாணி என்பது இருவகைத்தாள விகற்பங்களும் எ - று.

சசு. தூக்கென்பது செந்தூக்கு முதலாய ஏழு தூக்குக்களும் எ - று.

சசு. முடமென்பது இவற்றின் குற்றங்களும் எ - று.

சஎ. தேசிகமென்பது இயற்சொன்முதலிய
நான்குசொற்கூறுய சொற்பி
யோகமும் எ - று.
சஎ. என்றிவை யாசினுணர்ந்தென்பது
என்றுசொல்லப்பட்ட ஒன்பதும் இலக்கணவழியே நுண்ணிதாக
அறிந்தென்க.
(ரு ஆசு - சிறுமை. ஆசின்றென்பது பாடமாயிற்
குற்றமின்றியுணர்ந்தென்க.
என்னை? "ஆசே சிறுமையுங் குற்றமு மாகும்" என்றாராகலின்.
இன்றியென்பது
இன்றாயிற்று; செய்யுளாதலின்.

சஅ-சக. கூடை நிலத்தைக் குறைவின்று மிகுத்தாங்கு, வார நிலத்தை வாங்குபு வாங்கியென்பது ஒருருவை இரட்டிகதிரட்டி சேர்த்தவிடத்து செறி
கூ0 தபடி நிரம்பநிறுத்தவும் அவ்விடத்துப் பெறும் இரட்டியேயாய்ப் பாகவரு
வானவழி நிற்குமானம் நிறுத்திக் கழியுமானங் கழிக்கவும்
வல்லனுயென்க.
ருo-ருஉ. வாங்கிய வாரத் தியாழுங் குழலு, மேங்கிய
மிடறு மிசைவன கேட் பக், கூருகிர்க் கரணங் குறியறிந்து
சேர்த்தியென்பது இப்படி நிகழ்ந்த உருக்
களில் யாழ்ப்பாடலும் குழலிசையும் கண்டப்பாடலும்
இயைந்து நடக்கின்றபடி ஏரு கேட்போர் செவிக்கொள்ளத்
தண்ணுமைக்கருவியமைந்தகரணத்தாற் குறியறிந்து
சேரவாசித்தென்க.

௩௩. ஆக்கலாவது மற்றைக்கருவிகளிற்
குறையைநிரப்புதல்.

௩௩. அடக்கலாவது மற்றைக்கருவிகளின் மிகுதியை
அடக்குதல்.

௩௩. மீத்திறம் படாமையாவது ஆக்குமிடத்தும்
அடக்குமிடத்தும் |இரண்டிரண் 2ப தெரியாமற் செய்வதென்க.

௩௪. சித்திரக் காரணஞ் சிதைவின்று
செலுத்துமென்பது இவ்வனைத்தும்
செய்யுமிடத்துக் கைத்தொழில் அழகுபெறச்செய்து
காட்டுமென்க.

௩௫. அத்தகு தண்ணுமை யருந்தொழின்
முதல்வனுமென்பது இச்சொல்லப்
பட்ட கூறுகளில் ஒன்றுங் குறைவின்றியேயிருக்கும்
தண்ணுமைக்கருவியாசிரியனு ௫ மென்க.

உணர்ந்து மிகுத்து வாங்கிச் சேர்த்திச் செலுத்தும்
தண்ணுமைமுதல்வனு
மென்க.

[குழலோன் அமைதி.]

௫௬-௬௯. சொல்லிய வியல்பிற் சித்திர வஞ்சனை
புல்லிய வறிந்து புணர்ப்போன் பண்பின்
௬௦ வர்த்தனை நான்கு மயலறப் பெய்தாங்
கேற்றிய குரலிளி யென்றிரு நரம்பி
னொப்பக் கேட்கு முணர்வின னாகிப்
பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து
தண்ணுமை முதல்வன் றன்னொடும்
பொருந்தி
௬௫ வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்

௩.—அரங்கேற்றுகாதை.

௬௬

இசையோன் பாடிய விசையி னியற்கை
வந்தது வளர்த்து வருவ தொற்றி
யின்புற வியக்கி யிசைபட வைத்து
வார நிலத்தைக் கேடின்று பார்த்தாங்
கீர நிலத்தி னெழுத்தெழுத் தாக

௫

வழுவின் றிசைக்குங் குழலோன் றானும்

௫௬. சொல்லிய வியல்பினென்பது நூல்களிற்சொன்ன முறைமையாலே யென்க.

௫௬-௫௭. சித்திர வஞ்சனை, புல்லிய வறிந்தென்பது சித்திரப்புணர்ப்பும் வஞ்சனைப்புணர்ப்புமென்று சொல்லப்பட்ட இரண்டுகூற்றினையுமறிந்தென்க. ௬௦

இவற்றுட் சித்திரப்புணர்ப்பாவது இசைகொள்ளும்

எழுத்துக்களின்மேலே வல்லொற்றுவந்தவழி மெல்லொற்றுப்போலப் பண்ணீர்மைநிறுத்தல். வஞ்சனைப் புணர்ப்பாவது இசைகொள்ளா வெழுத்துக்களின்மேலே வல்லொற்று வந்தவழி மெல்லொற்றுப்போல நெகிழ்த்துப்புணர்த்தல்.

ருஎ. புணர்ப்போன்பண்பினனென்பது
பாடலாசிரியனையொத்த அறிவினை ௬ம் · முடையனாகியென்க.

ருஅ. வர்த்தனை நான்கு மயலறப் பெய்தாங்கென்பது
வங்கியத்து விரலுளர்க் தூதுந் துளைகள் தர்ச்சனி முதலாக விட்டுப்பிடிப்பது ஆரோகணமாதலானும் கனிட்டன்முதலாக விட்டுப்பிடிப்பது அவரோகணமாதலானும் இரண்டுகூறும் இப்படிச் செய்தல் வர்த்தனையாகலான் இப்படியால் நூற்றுமூன்று பண்ணீர்மைகளையும் ௨௦ தந்நிலைகுலையாமற் காட்டவல்லனாயென்க.

தர்ச்சனி - சுட்டுவிரல். கனிட்டன் - சிறுவிரல். ஆங்கு - அவ்விடத்து.

ருகூ - கூ0. ஏற்றிய குரலிளி யென்றிரு நரம்பி, னொப்பக் கேட்கு முணர்வின
னாகியென்பது புதினாற்கோவையினிடத்துக் குரனரம்பு இரட்டிக்கவரும் அரும்பாலையையும், இளி நரம்பு இரட்டிக்கவரும் மேற்செம்பாலையையும், இவைபோல அல்லாத பாலைகளையும் இசைநூல்வழக்காலே இணைநரம்புதொடுத்துப்பாடும் அறி ௨௫

வினையுமுடையனாயென்க.

கூக. பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்தென்பது
பண்ணுதலமைந்த முழவின் கண்ணெறியினையறிந்தென்றவாறு.

கூ௨. தண்ணுமை முதல்வன் றன்னொடும் பொருந்தியென்பது
தண்ணுமை ௩௦ முதல்வனுடன் பொருந்தியென்க.
தன்னொடுமென்ற உம்மையாற் பொருந்து மிடம் பொருந்தியென்க.

௬௩. வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்கென்பது| பட்டடை - நரம்பு
களின் இளிக்குப் பெயர் ; என்னே ! எல்லாப் பண்ணிற்கும்
வண்ணம் - நிறம். இதனை யாழ்மேல்வைத்தென்க.

அடிமனையாதலின்.

ஆங்கு - அசை. இளிக்கிரமத்தாலே பண்களை யாழ்மேல்
வைத்தெனக்கூட்டி னுமமையும்.



௬௪. இசையோன் பாடிய விசையி னியற்கையென்பது அவனம்வைத்து
அதன்வழியே இசைக்காரன்பாடிய பாட்டினியல்பையென்க.
௬௫. வந்தது வளர்த்தென்பது பாடுகின்ற
|பண்வரவுகளுக்குச் சுரம் குறைவு
படாமை நிறுத்தியென்க.
௫ ௬௫. வருவ தொற்றியென்பது அந்தப்பண்ணுக்கு
அயல்விரவாமல் நோக்கி
யென்க. |ஒற்றல் - நினைதல்.
௬௬. இன்புற வியக்கியென்பது|வண்ணமுதலாகக்
காட்டப்பட்ட பாடலில்
இயன்ற *அழகெல்லாம் நிரம்பக்காட்டியென்க,
௬௭. இசைபட வைத்தென்பது முற்கூறிய முதலும்
முறையுமுதலாய பண் ௬௦ ணிலக்கணம் பதினொன்றையும்
நிரம்பவைத்தென்க.

சுஎ. வார நிலத்தைக் கேடின்று பார்த்தென்பது

முதனடை வாரம் கூடை

திரளென்றுசொல்லப்படும் இயுக்நான்கினும் முதனடை மிகவும் தாழ்ந்தசெல

வினை உடைத்தாகலானும், திரள் மிக முடுகிய நடையினை உடைத்தாகலானும்,

சு.ரு

இவைதவிர்ந்த இடைப்பட்ட வாரப்பாடல் சொல்லொழுக்கமும் இசையொழுக்கமுமுடைத்தாகலானும், கூடைப்பாடல் சொற்செறிவும் இசைச்செறிவுமுடைத்

தாகலானும் சிறப்புநோக்கி அவ்விரண்டினுள்ளும் வாரப்பாடலை அளவுநிரம்ப நிறு

த்தவல்லனென்க. எனவே கூடைப்பாடலும் அமைவதாயிற்று. நிலம் - இடம்.

சுஎ - சுஅ. ஆங், கீர நிலத்தி னெழுத்தெழுத் தாகவென்பது பாடலினிடத்

துச் சொன்னீர்மைகளின் எழுத்துக்கள் சிதையாமலே எழுத்தெழுத்தாக இசைக் ௭ ௦ குங் குழலோனென்க. அன்றியும் ச ரி க ம ப த நி யென்பாருமுளர்.

சுகூ. வழுவின் றிசைக்குங் குழலோன் ருனுமென்பது இச்சொல்லப்பட்ட

இயல்புகளை இலக்கணப்படியில் வழுவாமல் வாசித்துக்காட்டவல்ல வங்கியத்தானு

மென்க.

அறிந்து மயலறப்பெய்து உணர்வினனாகி அறிந்து பொருந்தி வைத்து வளர் ௭ ௫ த்து ஒற்றி இயக்கி வைத்துப் பார்த்து இசைக்குங்குழலோனென்க.

[யாழாசிரியன் அமைதி.]

எ0-கூச. ஈரேழ் தொடுத்த செமமுறைக் கேள்வியி
ஞேரேழ் பாலை நிறுத்தல வேண்டி
வன்மையிற் கிடந்த தார பாகமு
மென்மையிற் கிடந்த குரலின் பாகமு
மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக்
கைக்கிளை யொழிந்த பாகமும் பொற்புடைத்
தளராத் தாரம் விளரிக் கீத்துக்
கிளைவழிப் பட்டன ளாங்கே கிளையுந்
தன்கிளை யழிவுகண் டவள்வயிற் சேர

* வழக்கெல்லாமென்றும் பிரதிபேதமுண்டு.

ந.—அரங்கேற்றுகாதை.

வேனே மகளிருங் கிளைவழிச் சேர
மேல துழையிளி கீழது கைக்கிளை
வம்புறு மரபிற் செம்பாலை யாய
திறந்தி யாதி யாக வாங்கவை
பெறுமுறை வந்த பெற்றியி னீங்காது
படுமலை செவ்வழி யரும்பா லையெனக்
குரல்குர லாகத் தற்கிழமை திரிந்தபின்
முன்னதன் வகையே முறைமையிற் றிரிந்தாங்
கிளிமுத லாகிய வெதிர்படு கிழமையுங்
கோடி விளரி மேற்செம் பாலையென

நீடிக் கிடந்த கேள்விக் கிடக்கையி
னிணைநரம் புடையன வணைவுறக் கொண்டாங்
கியாழ்மேற் பாலை யிடமுறை மெலியக்
குழன்மேற் கோடி வலமுறை மெலிய
வலிவு மெலிவுஞ் சமனு மெல்லாம்

பொலியக் கோத்த புலமை யோனுடன்

எ௦ - எக. ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியி, னோரேழ் பாலை நிறுத்தல் வேண்டியென்பது *ஆயப்பாலையாய்நின்ற பதினாற்கோவை, கோவினிது செப்ப முடைத்தாய்ப் பெண்டிர்க்குரிய தானமுடைய பாடலியல்பொத்தமைந்த சிறப் புடைத்தாகலான் இதிலே செம்பாலை படுமலைப்பாலை செவ்வழிப்பாலை அரும்பாலை ௨ ப †கோடிப்பாலை விளரிப்பாலை மேற்செம்பாலையெனப்பட்ட எழுபாலையினையும் இணைநரம்புதொடுத்து நிரம்ப நிறுத்திக் காட்டல்காரணமாகவென்க.

௭௨ - எஅ. வன்மையிற் கிடந்த தார பாகமு, மென்மையிற் கிடந்த குரலின் பாகமு, மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக், கைக்கிளை யொழிந்த பாகமும் பொற்புடைத், தளராத் தாரம் விளரிக் கீத்துக், கிளைவழிப் பட்டன ளாங்கே கிளை ௨ ৲ ௪ யுந், தன்கிளை யழிவுகண் டவள்வயிற் சேரவென்பது "தார பாகமுங் குரலின் பாகமு, நேர்கடு வண்கிளை கொள்ள நிற்ப, முன்னர்ப் பாகமும் பின்னர்ப் பாகமும், விளரிகுர லாகு மென்மனர் புலவர்" என்னுஞ்சூத்திரத்தின்விதிபற்றி வட் டப்பாலையின்முடிவு தானமாய் வலிந்தநிலைமையினையுடைய தாரம்பெற்ற இரண் டலகில் ஒரலகையும் இப்பாலையின் முதல் தானமாய் மெலிவினிற்கும் குரல்நரம்பு ௹ ௨ பெற்ற நாலலகில் இரண்டலகையும் தாரநரம்பில்

அந்தாக்கோவிலே கைக்கிளை யாகநிறுத்தத் தாரந்தான் கைக்கிளையாயிற்று. அந்தரம்பில் ஒழிந்த ஓரலகையும் பண்டை விளரியிலேகூட்ட அவ்விளரி துத்தரம்பாயிற்று. இப்படிப் பன்னிரு

* ஆயப்பாலை - நான்குவகைப்பாலையினுள் ஒன்று. நான்குவகையாவன :
ஆயப்பாலை, சதுரப்பாலை, வட்டப்பாலை, திரிகோணப்பாலையென்பன ; "ஆயஞ் சதுரம் வட்டந் திரிகோணமெனப், பாய நான்கும் பாலை யாகும்" என்பதனாலறிக.

† இதனை இக்காலத்துக்கொடிப்பாலையென வழங்குகின்றனர்.



காற்றிரிக்கப் பன்னிருபாலையும் பிறக்கும். பன்னிருபாலையினுரு தொண்ணூற் ரொன்றும் பன்னிரண்மோய்ப் பண்கள் நூற்றுமூன் றாதற்குக் காரணமாமெனக் கொள்க. இவ்விடத்துத் தாரகரம்பின் அந்தாக்கோலைத் தாரமென்றார் ; மூக் தாரமுந் தன்வழிப் படர" என்னுஞ்சூத்திரத்தாலெனக்கொள்க.

" தன்ன

(ரு எக. ஏனை மகளிருங் கிளைவழிச் சேரவென்பது இதனைப் பெண்டிர்க்குரிய தானமாகிய பதினாற்கோவையிலே பொருந்தக்கூட்டவேண்டுமென்றவாறு.

கூட்டும்படி :

அ0 - அக. மேல துழையிளி கீழது கைக்கிளை, வம்புறு மரபிற் செம்பாலை

யாயதென்பது உழைமுதற் கைக்கிளை இறுதியாக மெலிவுநான்கும் வலிவுமூன்றுமாய் உழைமுதலாகச் செம்பாலையாயதென்க.

சமம் ஏழும்

அ௨ - அ௩. இறுதி யாதி யாக வாங்கவை, பெறுமுறை வந்த பெற்றியி னீங்

கா தென்பது தாரமுதலாகப் பெறுமுறையா ய்வந்தபடி யே நீங்காமலென்றவாறு.

கடு

அ௪ - அ௫. படுமலை செவ்வழி யரும்பா லையெனக், குரல்குர லாகத் தற் கிழமை திரிந்தபினென்பது கைக்கிளைகுரலாகப் படுமலைப்பாலையும் துத்தம் குரலாகச் செவ்வழிப்பாலையும் குரல்குரலாக அரும்பாலையும் தற்கிழமைதிரிந்தபினென்க.

அரும்பாலைக்கு கரம்பு இரட்டித்தபெற்றித்தென்க.

அ௬ - அ௭. முன்னதன் வகையே முறைமையிற் றிரிந்தாங், கிளிமுத லாகிய

வெதிர்படு கிழமையுங், கோடி விளரி மேற்செம் பாலையென, நீடிக் கிடந்த கேள்

விக் கிடக்கையினென்பது முன்பிற்படியே தாரம் குரலாகக் கோடிப்பாலையும், ௨௦ விளரி குரலாக விளரிப்பாலையும், இளி குரலாக மேற்செம்பாலையுமாய் மேற்

செம்பாலை இளிகரம்பிரட்டித்த நிலைமையினையுடைத்தாய் இப்படிச்சமைத்த பதி

னாற்கோவைப்பாலை நிலையிலென்றவாறு.

௯0. இணைகரம் புடையன வணைவுறக்

கொண்டாங்கென்பது இப்பதினாற்
கோவைப் பாலைநிலையினும்
உருபாலையும் இளிகுரலாகிய

பண்ணின்றநிலையினுமிரட்டித்த குரல்குரலாகிய அரும்
மேற்செம்பாலையும்போல் அல்லாதன ஐந்துபாலையும்
உழைகுரலாகச் செம்பாலைக்கு உழைபெய்தும் கைக்கிளை
குரலாகப் படுமலைக்குக்
கைக்கிளைபெய் தும் துத்தங்குரலாகச் செவ்வழிக்குத்
துத்தம்பெய்தும் தாரங்குர
லாகக்கோடிப்பாலைக்குத் தாரம்பெய்தும் விளரிகுரலாக
விளரிப்பாலைக்குவிளரி
பெய்தும் பாடப்படுமென்றவாறு.
ஈ௨௦ கக - க௨. யாழ்மேற் பாலை யிடமுறை மெலியக், குழன்
மேற்கோடி வல
முறை மெலிய என்பது யாழினிடத்து அரும்பாலைமுதலாயின
இடமுறை மெலிய
வும் குழலினிடத்துக் கோடிப்பாலை முதலாயின
வலமுறைமெலியவும் பாடப்படு
மென்றவாறு.
கங - கச. வலிவு மெலிவுஞ் சமனு மெல்லாம், பொலியக்
கோத்த புலமை
ஈக்கோனுடனென்பது இப்படியால் வலிவும் மெலிவும்
சமனுமெனப்படாநின்ற தான
நிலையினையுடைய இசைக்கூறுபாடுகளுக்கெல்லாம் நரப்படைவு
கெடாமலும் பண
ணீர்மை முதலாயின குன்றாமலும் புணர்க்கவல்லனும்
அப்புணர்ப்பிற்கமைந்த

எழுத்துக்களால் இசைசெய்யவல்ல யாழாசிரியனுமென்றவாறு.
கிறுத்தல்வேண்டிப்பொலியக்கோத்த புலமையோனென்க.

## ௩.—அரங்கேற்றுகாதை.

௬௫

[அரங்கின் அமைதி.]

௬௫ - ௧௧௩. எண்ணிய நூலோ ரியல்பின் வழாது
மண்ணக மொருவழி வகுத்தனர் கொண்டு
புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக் கண்ணிடை
யொருசாண் வளர்ந்தது கொண்டு நூனெறி மரபி னரங்க
மளக்குங் ௫ கோலள விருபத்து
நால்விர லாக
வெழுகோ லகலத் தெண்கோ லீளத்
தொருகோ லுயரத் துறுப்பின தாகி
யுத்தரப் பலகையோ டரங்கின் பலகை
வைத்தவிடை நில நாற்கோ லாக ௧௦ வேற்றவாயி
லிரண்டுடன் பொலியத்
தோற்றிய வரங்கிற் றொழுதனரேத்தப்
பூதரை யெழுதி மேனிலை வைத்துத்
தூணிழற் புறப்பட மாண்விளக் கெடுத்தாங் கொருமுக வெழி
னியும் பொருமுக வெழினியுங் ௧௫ கரந்துவர லெழினியும்
புரிந்துடன் வகுத்தாங் கோவிய விதானத் துரைபெறு
கித்திலத்து
மாலைத் தாமம் வளையுட னாற்றி

விருந்துபடக் கிடந்த வருந்தொழி லரங்கத்து கூடு - கூசு.
எண்ணிய நூலோ ரியல்பின் வழாது, மண்ணக மொருவழி உம
வகுத்தனர் கொண்டென்பது எண்ணப்பட்ட சிற்பநூலாசிரியர்
வகுத்த இயல்புகளின் வழுவாதவகை அரங்கு செய்தற்கு
நிலக்குற்றங்கள் நீங்கினவிடத்திலே நிலம்

மண்ணகநிலமாவது : "தந்திரத்து.........அரங் கியற்றுங் காலே, பறனழிந் தியற்று வழகுடைத் தாகி, நிறைகுழிப் பூழி குழிநிறை வாற்றி, காற்றமுஞ் உருசுவையு மதாமு மாய்க்கனந், தோற்றிய வெண்மைச் சுவட திடைத்தா, யென்புமி கூர்ங்கல் களியுவ ரீளை, துன்ப நீறு தகளிவை யின்றி, யூரகத் தாகி யுளோமான் பூண்ட, தோகத் தோடேர் தெருவுமுக நோக்கிக், கோடல் வேண்டு மாடலரங் கதுவே" என்பது தந்திரவழி அரங்கு இவ்வுலகத்துச் செய்யுமிடத்துத்
*தெய்வத்

* "ஆடலும் பாடலுங் கொட்டும் பாணியும், காடிய வரங்கு சமைக்குங் காலைத், தேவர் குழாமுஞ் செபித்த பள்ளியும், புள்ளின் சேக்கையும் புற்று நீங்கிப், போர்க்களி யானைப் புனைகூடஞ் சாராது, மாவின் பந்தியொடு மயங்கல்செய் யாது, செருப்புகு மிடமுஞ் சேரியு நீங்கி, நுண்மை யுணர்ந்த திண்மைத் தாகி, மதுரச் சுவைமிகூஉ மதுர காறித், நீரா மாட்சி நிலத்தொடு பொருந்திய, வித்திற த்த தாகு மரங்கினுக் கிடமே." "அரங்கி னுயரமு மகலமு நீளமும், பொருந்த காடி புனைக்குங் காலைப், பெருந்தண் மால்வரைச் சிறுகழை கண்ணிற், கண்ணி டை யொருசாண் வளர்ந்தது கொண்டே, இருபத்து நால்விரற் கோலன வதனை, கூசு

சிலப்பதிகாரம்.

தானமும் பள்ளியும் அந்தணரிருக்கையும் கூடமுங்குளனும்

காவுமுதலாகவுடை

யன அழியாத இயல்பினையுடைத்தாய் நிறுக்கப்பட்ட குழிப்பூழி குழிக்கொத்துக்

கல்லப்பட்டம ண் காற்றமும் மதுரகாறி இரதமும் மதுரமாகித் தானுந்திண்ணி

தாய் என்பும் உமியும் கல்லும் பரலுஞ் சேர்ந்தநிலம் களித்தனை உவர்த்தன்ா ஈரத் ரு தனை பொல்லாச்சாம்பற்றனை பொடித்தனை என்றுசொல்லப்பட்டனவொழிந்து ஊரின் நடுவணதாகித் தேரோடும்வீதிகளெதிர்முகமாக்கிக்கொள்ளல்வேண்டுமெ

ன்க. நிலந்தான் வன்பால் மென்பால் இடைப்பாலென்று மூன்றுவகைப்படும்.

அவற்றுள், வன்பாலாவது குழியின் மண்மிகுவது. மென்பாலாவது குறைவது.

இடைப்பாலாவது ஒப்பு. ஈண்டு இவை பெரும்பான்மையாற் கொள்ளப்படும். அது ரு.ம் வேயென்ற இலேசினனே துவர்ப்புப் பயமும், புளிப்பு நோயும், காழ்ப்புப் பசிநீடு

தலும் கைப்புக் கேடும், உவர்ப்புக் கலக்கமும்பண்ணுமாதலான் நீக்கப்பட்டன.

என்னை " உவர்ப்பிற் கலக்கமாங் கைப்பின்வருங் கேடு, துவர்ப்பிற் பயமாஞ்

சுவைக-ளவற்றிற், புளிநோய் பசிகாழ்ப்புப் பூங்கொடியே தித்திப்,பளிபெருகு மாவ

தரங்கு" என்றார் பரதசேனபதியார். இதனுள் நாற்றமென்பன கொள்ளினையும் கரு செந்நெல்லும் சண்பகமும் சுரபுன்னையுமெனவிவை. ஒழிந்தன தீமைப்பால.

இங்ஙனம் ஒருவகையான் அரங்கிற்கு நிலம்வகுத்துக்கொண்டென்க.

கஎ - ௧௦௦. புண்ணிய நெடுவரைப் போகிய

நெடுங்கழைக், கண்ணிடை
யொருசாண் வளர்ந்தது கொண்டு, நூனெறி மரபி னரங்க மளக்குங், கோலள
விருபத்து நால்விர லாகவென்பது பொதியின்மலைமுதலாய புண்ணியவரைப்பக் ௨ ௦ கங்களிலே நெடிதாகி
உயரவளர்ந்த மூங்கிலின் கண்ணொடுகண்ணிடை ஒருசாணாக
வளர்ந்ததுகொண்டு நூல்களிற்சொல்லுகின்றபடியே அரங்கஞ்செய்ய அளக்குங்
கோல் உத்தமன்கைப் பெருவிரலில் இருபத்துநாலுகொண்டது ஒருகோலாக அறு
க்கவென்க.
என்னை ? '' ஒத்த வணுமுத லுயர்ந்தசரு கணக்கி, னுத்தமன் பெருவிர லிரு ௨௫ பத்து நாலுள, கோலே கோடல் குறியறிந் தோரே'' என்றாராகலின். இதனுள்
அணுமுதற் பெருவிரலளவு உயர்ந்தவருமாறு : அணு எட்டுக்கொண்டது தேர்த்து
கள் ; தேர்த்துகள் எட்டுக்கொண்டது இம்மி ; இம்மி எட்டுக்கொண்டது எள்ளு ;
எள்ளு எட்டுக்கொண்டது நெல்லு ; நெல்லு எட்டுக்கொண்டது பெருவிரலெனக்
கொள்க. உத்தமராவார் : கழிய நெடுமையும் கழியக் குறுமையுமில்லோர்.
௩ ௦ ௯௯ - ௧௦௨. எழுகோ லகலத் தெண்கோ னீளத், தொருகோ லுயரத் துறுப்
பின தாகியென்பது இக்கோலால் எழுகோலகலமும் எண்கோனீளமும் ஒரு
கோற் குறட்டுயரமுமுடையதாயென்க.
என்னை ? '' அக்கோ லேழுகன் றெட்டு நீண்டு, மொப்பா

லுயர்வு மொருகோ

லாகு, நற்கோல் வேந்த ணயக்குற வாயின், மூக்கோ ரூனு முயரவு முரித்தே"

---

லெழுகோ லகலத் தெண்கோ னீளத், தொருகோ லுயரத் துறுப்பின தாகி, யுத்த ரப் பலகையோ டரங்கின் பலகை, லைத்த விடையில நாற்கோ லாகப், பூதரை

பெழுதி
புறப்பட

மேனிலை வைத்து, சுந்தி யென்னுந் தெய்வமு மமைத்துத்,
மாண்வினக் கெடுத்து,.............கோவும் யானையுங் குரங்கும்

தாணிழற்
பிச்சனும்,

பாவையும் பாக்குடைப் புருடா மிருகமும்,
பாவையிக் கெற்றவ தரங்கெனப் படுமே"

யாவையு மெழுதி யிக்கிலம் விளங்கப்,
என்றார் சுத்தாநந்தப்பிரகாசத்திலும்.

அரங்கேற்றுகாதை. கூஎ

என்றார் சேயிற்றியனர் ; "அக் ...லொருகோ லளவுறக் கல்வி, மிக்க கம்மியர் வடகலை விதிமுறைக், கூறிய வன்றியு ...லைக் கேற்றன, வேற்கச் செய்க வியல்புணர்க் தோரே" எனக் கூறினருமுளர்.

௧௦௫ - ௧௦௬. உத்தரப் பலகையோ டரங்கின் ப[illegible]
நாற்கோ லாக, வேற்ற வாயி லிரண்டுடன் பொலியத், தோ[illegible]லைவைத்த விடைநில
பது தூணத்துக்கு மீதுவைத்த உத்தரப்பலகைக்கும் அரங்கினிட்டவரங்கிலென்
கிட்டபலகைக்கும் இடைநின்றநிலம் நான்குகோலாக உயரங்கொண்டதைத்துக்
மையவாய அளவுக்குப் பொருந்தவகுத்த வாயில் இரண்டினையுடைத்தாகச்செய்
பட்ட அரங்கினிடத்தென்க.

வாயிலிரண்டென்பது அரங்கிற்குட் புகவும்
புறப்படவுஞ்சமைத்த வாயி
லெனக்கொள்க. ஏற்றவென்பதனுல் கரந்துபோக்கிடனும், கண்ணுளர்
குடிலைப்
பள்ளியும், அரங்கமும், அதனெதிர் மன்னர் மாந்தரோடிருக்கும்
அவையரங்கமும்,
இவற்றினைச்சூழ்ந்த புலிநிறைமாந்தர் பொருந்தியகோட்டியும்
முதலாயினகொள்க.
தோற்றியவரங்கு – இப்படியாகச் சமைக்கப்பட்டு
தோற்றியவரங்கென்க.
நூல்சொல்லுகின்றபடியெல்லாம்

௧௦௬ - ௧௦௭. தொழுதன ரேத்தப், பூதரை யெழுதி
மேனிலைவைத்தென்பது. அந்தணர் அரசர் வணிகர் சூத்திரரென்று
சொல்லப்பட்ட *நால்வகைவருணப்
பூதரையும் எழுதி மேனிலத்தே யாவரும்
புகழ்ந்துவணங்கவைத்தென்க.

என்னை? “ கூறிய வரங்கிற் குறியொடு புணர்ந்தாங், காதோர்க்
கியற்று மரங்கி
னெற்றிமிசை, வழுவில் பூத நான்கு முறைப்பட, வெழுதின ரியற்ற
வியல்புணர்ந்
தோரே” என்றாராகலின். இப்பூதநான்கின் உண்டியும் அணியும்
ஆடையும் மாலை

யும் சாந்தமும் பொழுதும் செயலுமுதவியவெல்லாம்
அழற்படகோதைக்கண்ணே
விரித்துக்கூறுதும்.

கOஅ. ஆணிழற் புறப்பட மாண்விளக் கெடுத்தாங்கென்பது
தூண்களின்
நிழல் நாயகப்பத்தியின்கண்ணும் அவையின்கண்ணும் படாதபடி
மாட்சிமைப்பட்ட உரு
நிலைவிளக்குநிறுத்தியென்க.

என்னை? "விளக்கியல் வனப்பும்" என்றாராகலின்.

௬Oகூ - ககO. ஒருமுக வெழினியும் பொருமுக வெழினியுங்,
கரந்துவர லெழி
னியும் புரிந்துடன் வகுத்தாங்கென்பது இடத்தூணிலையிடத்தே
உருவுதிரையாய்
ஒருமுகவெழினியும் இரண்டுவலத்தூணிடத்தும் உருவுதிரையாய்ப்
பொருமுக ௫௦
வெழினியும், கரந்துவரலெழினி மேற்கட்டுத்திரையாகவும்
செயற்பாட்டேனே
வகுத்தென்க.

மேற்கட்டுத்திரையாய்நிற்பது ஆகாயசாரிகளாய்த்
தோன்றுவார்க்கெனக்
கொள்க. என்னை? "முன்னிய வெழினிதான் மூன்று வகைப்படும்" என்றார்
மதிவாணனார்; "அரிதரங்கிற், செய்தெழினி மூன்றமைத்துச் சித்திரத்தாற் பூதரையு, ௫௫
மெய்த வெழுதி யியற்று" என்றார் பாதசேனாபதியாரும்.

கககூ. ஓவிய விதானத்தென்பது
சித்திரவிதானத்தைத்தயுமுடைத்தாயென்க.

---

* நால்வகைவருணப்பூதங்கள் : க. வச்சிரதேகன். உ.
வச்சிரதந்தன். ௩. வரு

கூஅ சிலப்பதிகார

.லைத் தாமம் வளையுட ஞற்றியென்பது
கககூ-கஉ. உளபெற மித்திலத்வெண்ணீர்மை பொன்னீர்மை செந்நீர்மை
சந்திரன் குரு அங்காரகனென்குரிமையாகப்பெற்ற
மூத்துமாலைகளாற் சரியும்
வென்னும் புகழ்மையுய்ங்க.
தூக்கும் தாமமும்துப்படக் கிடந்த வருந்தொழி லரங்கத்து
என்பது புதுமையுடைத்
கஉத்த அரிய தொழிலையுடைய அரங்கின்கண்ணெங்க.
தீ வகுத்தனர்கொண்டு வைத்து எடுத்து வகுத்து நாற்றிக்கிடந்த
அரங்கமெனக.

[தலைக்கோல் அமைதி.]

ககச-கஉஅ. பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் காம்புநனி கொண்டு
கஉ கண்ணிடை நவமணி யொழுக்கி மண்ணிய
நாவலம் பொலந்தக டிடைநிலம் போக்கிக்
காவல் வெண்குடை மன்னவன் கோயி
லிந்திர சிறுவன் சயந்த னாகென
வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்
கஉரு புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணிய பின்னர் மாலை யணிந்து
நலந்தரு நாளாற் பொலம்பூ ணோடை
யரசுவாத் தடக்கையிற் பரசினர் கொண்டு
முரசெழுந் தியம்பப் பல்லிய மார்ப்ப

௨0 வரசொடு பட்ட வைம்பெருங் குழுவுங்
தேர்வலஞ் செய்து கவிகைக் கொடுப்ப
வூர்வலஞ் செய்து புகுந்துமுன்

வைத்தாங்கு

கசசு-கசரு. பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த,
சீரியல் வெண்குடைக்

காம்புனை கொண்டென்பது பெரிய புகழையுடைய
அரசர்பொருதுடைந்து புறங் ௨ரு கொடுத்தவழிப்பெற்ற அழகிய
இயல்பினையுடைய வெண்கொற்றக்குடைக்காம்

பைத் தலைக்கோலாகக்கொண்டென்க.

இனி மாற்றூர் எயிற்புறத்து மிளைக்கண் வெட்டிக்கொ
ண்ட மூங்கிலென்று

மாம். இது கூறிற்று ; வேத்தியலும் பொதுவியலுமாகலான்.
இவற்றுட் பொத

வியற்கு மலையின் மூங்கிலுமாம்.

௺ கசசு-கசஎ. கண்ணிடை நவமணி யொழுக்கி மண்ணிய,
நாவலம் பொலந்தக

டிடைநிலம் போக்கியென்பது கண்டோறும்
நவமணிகளாற்கட்டி இடைநிலங்

கனைச் சாம்பூநதமென்னும் பொற்றகட்டாற்செறிய
மலக்கமாகக்கட்டியென்க.

மலக்கம் - மாறு. என்னை ? "புண்ணியமால் வெற்பிற்
பொருந்துங் கழை

கொண்டு, கண்ணிடைக்கண் சாண்கன கஞ்சாரு - மெண்ணிய,
நீளமெழு சாண் ௩ரு கொண்டு நீராட்டி நன்மைபுனை, நாளிற்
றலைக்கோலை நாட்டு" "ஆவ தகத்தியனார்

சாபத்தா னன்மூங்கில்" என்றார் பாதசேனபதியார்.

## ௩.—அரங்கேற்றுகாதை.

கூரை

கக௮-கஉ௦. காவல் வெண்குடை மன்னவன் கோயி, லிந்திர சிறுவன் சயந்த னாகென், வந்தனை செய்து வழிபடு தலைக்கோலென்பது இத்தலைக்கோலை இந்திரன் மகன் சயந்தனாகநினைத்து மந்திரவிதியாலே பூசித்து வழிபட்டு அரசன்கோயிலிலே காப்பமைத்திருத்தியென்க.

சயந்தனுதல் முன்னர்க் கூறிப்போந்தாம்.

ரு

கஉக - கஉஉ. புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி, மண்ணிய பின்னர் மாலை யணிந்தென்பது நாடகக்கணிகை தலைக்கோல் கொள்ளுநான்று புண்ணிய நதிகளினீரைப் பொற்குடத்திலே முகந்துவந்து இத்தலைக்கோலை நீராட்டியபின்பு மாலைகளுஞ்சூட்டியென்க.

முன்கூறிப்போந்த ஆடலாசிரியன்முதலாயினார் அரங்கத்தின்கண்ணே இத் தூய தலைக்கோலைவைத்துப் பொற்குடத்தானீராட்டி மாலைசூட்டியெனவியைக்க.

கஉ௩. நலந்தருநாளாலென்பது இதற்குப்பொருந்திய நல்லநாளினுனென்க.

அவையாவன : பூராடம் கார்த்திகை பூரம் பரணி இரேவதி திருவாதிரை அவிட்டம் சித்திரை விசாகம் மகம் எனவிவை. நாளென்னுது நலந்தருநாளென்ற இலேசினுல் இராசிமுதலியனவுங்கொள்க. இராசிகளாவன : இடபம் சிங்கம் தூலாம் துலாம் கற்கடகம் விருச்சிகம் மிதுனம் எனவிவை. என்னை? "பூராடங் கார்த் திகை பூரம் பரணிகலஞ், சீராதிரை யவிட்டஞ்

சித்திரையோ - டாருமுற, மாசி யிடப மரிதலை வான்கடகம், பேசிய தேன்மிதுனம் பேசு'' என்றார் மதிவாணனாரும்.

நாளால் நீராட்டியென முன்னுஞ்சேர்க்க.

௨௦

கஉ௩ - கஉ௪. பொலம்பூ ணோடை, யரசுவாத் தடக்கையிற் பரசினர் கொண்டென்பது பொன்னாற்செய்த பூணையும் பட்டத்தினையுமுடைய பட்ட வருத் தனத்தின் கையிலே வாழ்த்துடனேகொண்டெனக.

கஉ௫ - கஉ௮. முரசெழுந் தியம்பப் பல்லிய மார்ப்ப, வரசொடு பட்ட வைம் பெருங் குழுவுந், தேர்வலஞ் செய்து கவிகைக் கொடுப்ப, வூர்வலஞ் செய்து புகுந்து ௨௫ முன் வைத்தாங்கென்பது வீரமுரசுமுதலாய மும்முரசுகளும் எழுந்துமுழங்க அவையேயன்றிப் பலவாச்சியங்களுமுழங்க அரசனும் அமாத்தியர் புரோகிதர் சேனாபதித்தொடக்கத்தாருங்கூட வீதியின்கணின்ற தேரினை இத்தயானையோடும் உடன்கொண்டு வலஞ்செய்து தேர்மிசைநின்ற கவியின்கையிலே இத்தலைக்கோலைக் கொடுப்ப வானை வலமாகவந்து அரங்கத்தின்கட்புகுந்து தலைக்கோலை எதிர்முகமாக ௩௦ வைத்தபினென்றவாறு.

என்னை '' பிணியுங் கோளு நீங்கிய நாளா, லணியுங் கவினு மாசற வியற்றித், தீதிர் மரபிற் றீர்த்த நீரான், மாசறு நீர மண்ணுநீ ராட்டித், தொடலையு மாலையும் படலையுஞ் சூட்டிப், பிண்ட முண்ணும் பெருங்களிற்றுத் தடக்கைமிசைக், கொண்டு சென்றுநீஇக் கொடியெடுத் தார்த்து, முரசு முருடு முன்முன் முழங்க, வரசு முதலா ௩௫ லான் வைம்பெருங் குழுவுந், தேர்வலஞ் செய்து கவிகைக்கொண் டேறி, யூர்வலஞ் செய்து புகுந்த பின்றைத், தலைக்கோல் கைக்கொடுத் தரசன் கவிகைத், தலைக் கோல் கோட றக்க தென்ப'' என்றார் செயிற்றியனார்

கஉகூ-கஎரு. இயல்பினின் வழாஅ விருக்கை
முறைமையிற் குயிலுவ மாக்க ணெறிப்பட நிற்ப
வலக்கான் முன்மிதித தேறி யரங்கதது வலத்தூண்
சேர்தல வழக்கெனப் பொருந்தி யிக்னெறி வகையி
லிடத்தூண் சேர்ந்த தொன்னெறி யியறகைத்
தோரிய மகளிருஞ் சீரியல் பொலிய நீரல நீங்க
வார மிரண்டும் வரிசையிற் பாடப் பாடிய வாரத்
திற்றினின் றிசைக்குங் கூடிய குயிலுவக் கருவிக
ளெல்லாங் குழல்வழி நின்றதி யாழே யாழவழித்
தண்ணுமை நின்றது தகவே தண்ணுமைப் பின்வழி
நின்றது முழவே முழவொடு கூடிநின் றிசைத்த
தாமந் திரிகை
யாமந் திரிகையோ டந்தர மின்றிக் கொட்டிரண்
டுடையதோர் மண்டை யாகக் கட்டிய மண்டலம்
பதினொன்று போக்கி வந்த முறைமையின்
வழிமுறை வழாமலந்தரக் கொட்டொ டடங்கிய
பின்னர் மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப்
பாற்பட நின்ற பாலைப் பண்மே
ளுன்கி ளொரீஇய கன்கண மறிந்து மூன்றளந்
தொன்று கொட்டி யதனை யைதுமண் டலத்தாற
கூடை போக்கி வந்த வாரம்வழி மயஙகிய பின்றை
யாறு நாலு மம்முறை போக்கிக
கூறிய வைந்தின் கொள்கை போலப் பின்னையு

மம்முறை பேரிய பின்றைப் பொன்னியல் பூங்கொடி
புரிந்துடன் வகுத்தென நாட்டிய நன்னூ னன்கு
கடைப்பிடித்துக் காட்டின ளாதலிற் காவல் வேந்த
னிலைப்பூங் கோதை யியல்பினின் வழாமைத்
தலைக்கோ லெய்தித் தலையரங் கேறி விதிமுறை கொ
ள்கையி னாயிரத் தெண்கழஞ் சொருமுறை யாகப்
பெற்றன ளதுவே ரு.—அரங்கேற்றுகாதை.

௧0௧

நூற்றுப்பத் தடுக்கி யெட்டுக் கடைநிறுத்த
வீறுயர் பசும்பொன் பெறுவதிம் மாலை
மாலை வாங்குநர் சாலுநங் கொடிக்கென
மானமர் நோக்கியோர் கூனிகைக் கொடுத்து
நகர நம்பியர் திரிதரு மறுகிற்
பகர்வனர் போல்வதோர் பான்மையினிறுத்த
மாமலர் நெடுங்கண் மாதவி மாலை
கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு
மணமனை புக்கு மாதவி தன்னோ
டணைவுறு வைகலி னயர்ந்தனன் மயங்கி
விடுத லறியா விருப்பின னாயினன்
வடுநீங்கு சிறப்பிற்றன் மனையக மறந்தென

௧உ௧. இயல்பினின் வழாஅ விருக்கை முறைமையினென்பது அரசன்முதலி
யோர்யாவரும் வரிசைக்கேற்ற இருக்கைமுறைமைகளிலே இருந்தபின்னரென்க.

௧௩௦. குயிலுவ மாக்க ணெறிப்பட நிற்பவென்பது குயிலுவக் கருவியாளர்
தாம் நிற்கக்கடவ முறைமைகளிலே நிற்கவென்க.

முறைமையாவது "ஆடிட மூக்கோ லாட்டுவோர்க் கொருகோல், பாடுவோர்க் கொருகோ லந்தர மொருகோல், குயிலுவர் நிலையிட மொருகோல்" என்று நூலிற் கூறின முறைமையென்க. குயிலுவராவார் இடக்கைமுதலாய கருவியாளர்.

கஉக-கஉஉ. வலக்கான் முன்மிதித் தேறி யரங்கத்து, வலத்தூண் சேர்தல் ௨௦ வழக்கெனப் பொருந்தியென்பது நாடகக்கணிகையாகிய அரங்கேறுகின்றமாதவி அரங்கத்திலே வலக்கால் முற்படவிட்டேறிப் பொருமுகவெழினிக்கு நிலையிடனுன வலப்பக்கத்தூணிடத்தே சேர்தல் வழக்கென்னுமிடத்தாலே சேர்ந்தென்றவாறு.

கஉங-கஉச. இந்நெறி வகையி னிடத்தூண் சேர்ந்த, தொன்னெறி யியற்கைத் தோரிய மகளிருமென்பது மாதவி வந்தேறிநின்றபடியே இடத்தூண்நிலையிட ௨௫ மாகிய ஒருமுகவெழினியிடம்பற்றிய பழையநெறியியற்கையையுடைய தோரிய மடந்தையருமென்க.

தோரியமடந்தையராவார் ஆடிமுதிர்ந்தவர்; "இந்நெறி வகையா னிடத்தூண் சேர்வோ, டொன்னெறி மரபிற் றோரிய மகளே" எனவும், "தலைக்கோ லரிவை குணத்தொடு பொருந்தி, நலத்தகு பாடலு மாடலு மிக்கோ, ளியற்படு ௩௦ கோதைத் தோரிய மகளே" எனவும் சொன்னாராகலின்.

கஉரு-கஉசு. சீரியல் பொலிய நீரல நீங்க, வார மிரண்டும் வரிசையிற்பாட வென்பது நன்மையுண்டாகவும் தீமைநீங்கவும்வேண்டித் தெய்வப்பாடல் இரண்டினையும் பாடவென்றவாறு.

இனிச் சீரியல்பொலிய நீரலநீங்கவென்பதற்குத் தானவியல்பு ப்பொலிவுபெற ௩௫ அவதாளநீங்கவென்றுமாம். வாரமிரண்டாவன ஓரொற்றுவாரம், ஈரொற்றுவார மென்னுஞ்செய்யுள். அவை தானத்து

ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையும் பெற்றுவரும்.



௧௩௯-௧௩௮. பாடிய வாரத் தீற்றினின் றிசைக்குங், கூடிய
குயிலுவக் கருவி
களெல்லாமென்பது தெய்வப்பாடலின் இறுதியிலேநின்று கூடி
இசையாநிற்கும்
கருவிகளெல்லாமென்றவாறு.

இக்கருவிகள் எவ்வண்ணங்கூடியிசைத்தனவோவெனின்,—
௧௩௧. குழல்வழி நின்றதி யாழேயென்பது
வங்கியத்தின்வழியேநின்றது
யாழ்ப்பாடலென்றவாறு.

எனவே மிடற்றுவழியது யாழாகலான்
மிடற்றுவழிப்பாடலும் யாழ்வழித்
தெனக்கொள்க.

௧௩௧-௧௪0. யாழ்வழித், தண்ணுமை நின்றது
தகவேயென்பது யாழ்ப்பாட
லின்வழியே தண்ணுமையாகிய மத்தளநின்றதென்க.

௧௪0-௧௪௧. தண்ணுமைப், பின்வழி நின்றது
முழவேயென்பது மத்தளக்
கருவியின் பின்வழியே குடமுழாநின்றதென்க.

௧௪௧-௧௪௨. முழவொடு, கூடிநின் றிசைத்த தாமந்
திரிகையென்பது முழ
வொடுகூடிநின்று வாச்சியக் கூறுகளை அமைத்தது
யென்றவாறு.
ஆமந்திரிகையென்னுங்கருவி

ஆமந்திரிகை - இடக்கை. நின்றிசைத்தது கருவியென்னாது ஓசையென்க.

அஃதேன் மிடற்றுப்பாடல் சொல்லிற்றிலரெனின், வாரப்பாடல் பாடியபின்ன

ரெனவே மிடற்றுப்பாடலுமடங்கும்.

கசுரு. ஆமந் திரிகையோ டந்தா மின்றியென்பது இவ்வாமந்திரிகையோடே

முன்சொன்ன குயிலுவக்கருவிகளனைத்தும் பருந்தும்நிழலும்போல ஒன்றாய்நிற்ப

வென்றவாறு.

கசுச. கொட்டிரண் டுடையதோர் மண்டல மாகவென்பது ஒருதாளத்திற்கு

இரண்டுபெற்றாகவென்க

கசுரு. கட்டிய மண்டலம் பதினொன்று போக்கியென்பது பஞ்சதாளப்பிரபந்த ...... மாகக் கட்டப்பட்ட தேசியொத்தை ஒருதாளத்திற்கு இரண்டுபெற்றாகப் பத்தும்

தீர்வு ஒன்றுமாகப் பதினொருபற்றாலே தேசிக்கூத்தையாடிமுடித்தென்க.

கசுசு. வந்த முறைமையின் வழிமுறை வழாமலென்பது இப்படிச்செய்கை

நாடகநூல்களினமைந்தமுறைமையாகலான் அம்முறைமை வழுவாமலென்க.

கசுஎ. அந்தரக் கொட்டுட னடங்கிய பின்னர்

இதனை அந்தரக்கொட்டென்றும், முகமென்றும் ஒத்தென்றும் பெயர்கூறுப.

இந்தவொத்து ஆடினபின்னரல்லது உருக்காட்டுதல் வழக்கல்லவென்ப; என்னை?

"முகமா டெறிரி யோகப் பொருட்டே" என்றாராகலின்.

கசஅ-கசக. மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப், பாற்படநின்ற பாலைப்

பண்மேலென்பது மங்கலப்பண்ணாய் சரப்படைவுமுடைத்தாயிருக்கின்ற பாலைப்

பண்ணை அளவுகோடாதபடி ஆளத்தியிலேவைத்து அதன்மேலேயென்க.

கஙo. நான்கின் ஒரீஇய நன்கனம் மறிந்தென்பது மங்கலச்சொல்லினையுடைத்

தாய் நாலுறுப்புங் குறைபாடில்லாத உருவுக்குச் சொற்படுத்தியும் இசைப்படுத்திய

மறித்து பாட்டும் கொட்டும் கூத்தும் நிகழ்த்தியென்க.

## ௩.—அரங்கேற்றுகாதை. கoக

நாலுறுப்பாவன: உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலையென்பன. ஈண்டு நாலுறுப்புக்களும் குறைபாடில்லாத உருவெனவேண்டியது, * மூன்றுறுப்பாலே வருவனவுமுளவாதலின். அவை இரண்டாமடியே ஈற்றடியாகப் பாடிமுடிவன. அவை மங்கலத்துக்குப் பொருந்தாவெனக்கொள்க.

கருக. மூன்றளந் தொன்று கொட்டி யதனையென்பது அதனை மூன்றொத் துடைய மட்டத்திலெடுத்து ஒரொத்துடைய ஏகதாளத்திலேமுடித்தென்க.

கருஉ. ஐதுமண் டலத்தாலென்பது அழகிய மண்டலநிலையாலென்க.

தேசிக்கூத்தெல்லாம் மண்டலநிலையாதலின், ஐதுமண்டலத்தாலென்றார். என்னை ? “ கொண்ட தேசிப் பகுதி

யெல்லா, மண்டல நிலையின் வருதகவுடைத்தே" என்றாராகலின்.

கடுஉ. கூடை போக்கியென்பது தேசிக்கு ஒற்றித்தொத்தலும் இரட்டித் தொத்தலுமேயாகலின் அவற்றை ஆடி முடித்தென்க.

இவைகளல்லது இரட்டிக்கிரட்டி வரப்பெறுதென்க.

கடுக. வந்த வாரம்வழி மயங்கிய பின்றையென்பது முதனடையினும் வாரத் தினும் தேசிக்கூத்தெல்லாம் ஆடிமுடித்தென்க.

முடிக்கை - பண்மாறு.

இனி மார்க்கம் கூறுகின்றது.

கடுச. ஆறு நாலு மம்முறை போக்கியென்பது பஞ்சதாளப்பிரபந்தமாகக்கட் டப்பட்ட வடுகிலொத்தையும் தேசியிலொத்தைக்காட்டினாற்போல இரட்டிக்கிர ட்டியாகவாடியென்க.

கடுரு-கடுசு. கூறிய வைந்தின் கொள்கை போலப், பின்னையு மம்முறை பேரிய பின்றையென்பது சொல்லிப்போந்த தேசியைப்போல வடுகும்மட்ட தாளமுதலாக ஏகதாளமீறாக வைசாகநிலையிலே ஆடிமுடித்தபின்னரென்க.

என்னை ? "வைசாக நிலையே வடுகிற்கும் வனாயார்" என்றாராகலின்.

கடுஎ. பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தெனவென்பது பொன்னா னியன்றதோர் பூங்கொடி கூத்துநடித்தாற்போலவென்க.

கடுஅ-கடுகூ. நாட்டிய நன்னூ னன்குகடைப் பிடித்துக், காட்டின ளாதலி னென்பது தாண்டவம் நிருத்தம் நாட்டியமென் னும் மூன்றுகூறுபாட்டினும் நாட் டியமென்பது புறநடத்தையாகலின், அதனை நூல்களிற்சொன்ன முறைமை வழு வாமல் அவிநயித்துப் பாவகந்தோ ன்ற

விலக்குறப்புப்பதினுவின் செறிவழுவாமல் ஆடிக்காட்டினாதலாமெலன்க.

அன்றி காட்டியகன்னுல் ......... ளாதலினென்பதற்கு இக்கதையிற்கூறிய முத்தமிழ்வகையும் காட்டினாதலினென்றுமாம்.

---

* தேவடி வுகள் மூன்றென்பர் சுந்தாநந்தப்பிரகாசமுடையார். மூன்ருவன: உக்கிரம், துருவை, ஆபோகமென்பன. துருவையென்பது துருமையெனவும், ஆபோகமென்பது ஆயோகமெனவும் பிரதிகளில் வேறுபட்டிருக்கின்றன.



௧௫௯-௧௬௦. காவல் வேந்த, னிலைப்பூங் கோதையியல்பினின் வழாமையென் பது அரசன், இம்மாதவியுடைய கூத்துக்கும் பாட்டுக்கும் அழகுக்குமேற்றமுறைமையினுல் ஒன்றும் வழுவாமலென்க.

அன்றி, இலைப்பூங்கோதை - அரசனுடையமாலை. அதனுல் தன்கூத்தும் பாட்டு மென்னும் இவைமுதலியவற்றினியல்பின் ஒன்றுநீங்காமலென்றுமாம். என்சொல் லிய வாருமோவெனின்,—நாடகமகள் அரங்கேறக்கண்ட அரசன் அவண்மேற் காமக்குறிப்புடையனுதலியல்பு . அங்ஙனம் மாதவியாடல் பாடல் அழகென்னு மிவைமுதலிய கண்களிப்பக்கண்டும் கேட்டும் நெஞ்சமழிந்து காமக்குறிப்புமீதூரவும் நாமிவளை யொாயின் கவைபிறக்குமென்பதுகருதி வளாயானுயினுனென்ப தாம்.

இலைப்பூங்கோதையைத் தலைக்கோற்கு அடையாக்கினுமமையும்.

இயல்பி னின் - இயல்பினால்.

கசுக தலைக்கோ லெய்தியென்பது தன்வரிசைக்குத்தக்கபடியே தலைக்கோற் பெயர்பெற்றென்றவாறு.

கசுக. தலையரங்கேறியென்பது முன்னரங்குமுதலிய எல்லாமுதன்மையும் பெறுவதற்குக்காரணமாகிய தலையரங்கேறியென்க.

கசுஉ - கசுங. விதிமுறை கொள்கையி னாயிரத் தெண்கழஞ், சொருமுறை யா கப் பெற்றனளென்பது இந்நாடகக்கணிகையர்க்குத் தலைவரிசை ஆயிரத்தெண் கழஞ்சுபொன் பரிசம்பெறுகை நூல்வழக்காதலின் இவளும் அவ்வாயிரத்தெண் கழஞ்சுபொன் பரிசம்பெற்றாளென்க.

என்னை ? " முட்டில் பாணரு மாடிய மகளிரு, மெட்டொடு புணர்ந்தவா யிரம்பொன் பெறுப" என்றாராகலின். ஒருமுறையாகப் பெற்றனள் - ஒருநாளைக்குப் பரிசமாகவென்றரசனாற் பெற்றனளென்க. பெறுகை - நினைப்பிடுகையுமாம். ஆயிரம்பரிசமும் எண்கழஞ்சு மெய்ப்போகத்துக்குமாக நிச்சயித்தென்க.

கசுங. அதுவேயென்பது அன்றுதொடங்கி அதுவேபரிசமானதென்க.

கசுச. நூற்றுப்பத் தடுக்கி யெட்டுக் கடைநிறுத்தவென்பது நூற்றைப் பதின் மடங்காக அடுக்கி அதன்கடைக்கண்ணே எட்டைநிறுத்தினவென்க.

கசுரு - கசுசு. வீறுயர் பசும்பொன் பெறுவதிம் மாலை, மாலை வாங்குநர் சாலு நங் கொடிக்கென, மான்மர் நோக்கியோர் கூனிகைக் கொடுத்து, நகர நம்பியர் திரிதரு மறுகிற், பகர்வனர் போல்வதோர் பான்மையி

னிறத்தவென்பது வீறுபெற்
றுயர்ந்த பசும்பொன்னை விலையாகப்பெறுவது இம்மாலை ;
இம்மாலைபெற்ற பொன்
தந்து இதனை வாங்கிச்சூடுகர் மாதவிக்கு
மணமகனாதலமையுமென்றுசொல்லி
மான் போன்ற நோக்கினையுடையாளோர்கூனிகைக்கொடுத்து
நகரியிற் பெருந்
தெருவிலே விலைக்குவிற்பாளைப் போல்வதோர் பண்பினால்
நிறுத்தவென்க.

இவளுக்குப்பரிசமென்னாது மாலைக்குப்பரிசமென்று
மிகுத்துக்கூறினார், வீ
றுயர்பசும்பொன் - மாற்றான் உயர்ச்சிபெற்ற பசியபொன் ;
ஆவது கிளிச்சிறை. மாலை - அரசன்பாற்பெற்ற பசும்பொன்மாலை.
மாலை - படிக்கட்டளை.

கஎ0 - கஎஉ. மாமலர் நெடுங்கண் மாதவி மாலை,
கோவலன் வாங்கிக் கூனி
தன்னொடு - மணமனை புக்கென்பது
திருமலரென்றுசொல்லப்பட்ட தாமரைமலர்



போன்ற கண்ணையுடைய மாதவியுடைய பரிசமாலையைக்
கோவலனெனப்படும் வாணிகன்வாங்கிக் கூனியுடனே
அவன்மனையிற்சென்றுபுக்கென்க.

வாங்கிப் புக்கென இயைக்க.

கஎஉ - கஎ௪. மாதவி தன்னொடு, டணைவுற வைகலி

னயர்ந்தனன் மயங்கி, விடுத லறியா விருப்பின னாயினனென்பது இங்ஙனம்புக்க கோவலன் மாதவிதன் னுடன் மணந்த அப்பொழுதே அயர்ந்தனனாய் மயங்கி அவளை நீங்குதல்கூடாத விருப்பினையுடையனாயினனென்க.

வைகல் - ஈண்டு ஒருபொழுது. விடுதலறியா - விடாத ; ஒருசொல்.

கவடு. வடுநீங்கு சிறப்பிற்றன் மனையக மறந்தெனவென்பது குற்றமற்ற கற்புச்சிறப்பினையுடைய மனைவியையும், மனையையுமறந்தென்க.

ஆடன் முதலியன காட்டல்வேண்டி ஆடலோனும் இசையோனும் இயற் புலவனும் தண்ணுமையோனும் குழலோனும் யாழோனுங்கூடி வகுத்தனர் கொண்டு தொழுதனரேத்த எழுதி வைத்து எடுத்து வகுத்து நாற்றிக் கிடந்த அரங் கத்துக் கொண்டு ஒழுக்கிப் போக்கி ஆகெனச் செய்து ஏந்தி அணிந்து கொணடு இயம்ப ஆர்ப்பச் செய்து கொடுப்ப வைத்தபின் நிற்ப ஏறிப் பொருந்திச் சேர்ந்த மகளிரும் பொலிய நீங்கப் பாட இசைக்கும் ; கருவிகளெல்லாம். நின்றது ; நின்றது ; நின்றது ; நின்றிசைத்தது ; பதினொன்றுபோகி அம்முறைபோக்கி வகுத்தெனக் கடைப்பிடித்துக் காட்டினளாதலின், எய்தி ஏறிப் பெற்றனள் ; பெற்று நிறுத்தக் கோவலன்வாங்கி மனைபுக்கு அயர்ந்து மயங்கி மறந்து விருப்பின னாயினனென்க.

பருந்து நிழலுமென ...

...அடியார்க்குநல்லானென்பான். ஒருந்தமிழ்.... ... ...

...நிரம்பையர்காவலனே. காற்றை .. ... ... ...

...சொல்வித்ததே.

அரங்கேற்றுகாதை முற்றிற்று.

---

## நான்காவது
# அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

விரிகதிர் பரப்பி யுலகமுழு தாண்ட
வொருதனித் திகிரி யுரவோற் காணே
னங்கண் வானத் தணிநிலா விரிக்குந்
திங்களஞ் செல்வன் *யாண்டுளன் கொல்லெனத்
திசைமுகம் †பசந்து செம்மலர்க் கண்கண்
முழுநீர் வார முழுமெயும் பனித்துத்
திரைநீ ராடை யிருநில மடந்தை
யரசுகெடுத் தலம்வரு மல்லற் காலைக்
கறைகெழு குடிகள் கைதலை வைப்ப
வறைபோகு குடிகளொ டொருதிறம் பற்றி
வலம்படு தானை மன்ன ரில்வழிப்
புலம்பட விறுத்த விருந்தின் மன்னரிற்
றாழ்துணை ‡துறந்தோர் தனித்துய ரெய்தக்
காதலர்ப் புணர்ந்தோர் களிமகி ழெய்தக்

குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு
மழலைத் தும்பி வாய்வைத் தூத
வறுகாற் குறும்பெறிந் தரும்புபொதி வாசஞ்
சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற
வெல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப
மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென
விளைய ராயினும் பகையர சுகடியுஞ்
செருமாண் டென்னர் குலமுத லாகலி
னந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்
புன்கண் மாலை குறும்பெறிந் தோட்டிப்
பான்மையிற் றிரியாது பாற்கதிர் பரப்பி
மீனர சாண்ட வெள்ளி விளக்கத்
தில்வளர் முல்லையொடு மல்லிகை யவிழ்ந்த
பல்பூஞ் சேக்கைப் பள்ளியுட் பொலிந்து
செந்துகிர்க் கோவை சென்றேந் தல்கு

---

*யாக்குளன்கொலென்றும் பாடம், ‡துணையிழந்தோரென்றும் பாடம்.
†பயர்[illegible]றும் பாடம்.

## ச.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

கலை,

லர்துகின் மேகலை யசைந்தன வருந்த
நிலவுப்பயன் கொள்ளு நெடுநிலா முற்றத்துக்

கலவியும் புலவியுங் காதலற் களித்தாங்
கார்வ நெஞ்சமொடு கோவலற் கெதிரிக்
கோலங் கொண்ட மாதவி யன்றியுங்
குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குணதிசை மருங்கிற் காரகி றுறந்து
வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்
தென்மலைப் பிறந்த சந்தன மறுகத்
தாமரைக் கொழுமுறி தாதுபடு செழுமலர்
காமரு குவளை கழுநீர் மாமலர்
பைந்தளிர்ப் படலை பருஉக்கா ழாரஞ்
சுந்தரச் சுண்ணத் துகளொடு மளைஇச்
சிந்துபு பரிந்த செழும்பூஞ் சேக்கை
மந்த மாருதத்து மயங்கினர் மலிந்தாங்
காவியங் கொழுந ரகலத் தொடுங்கிக்
காவியங் கண்ணாற் களித்துயி லெய்த
வஞ்செஞ் சீறடி யணிசிலம் பொழிய
மென்றுகி லல்குன் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்கும மெழுதாள்
மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதின
டிங்கள் வாண்முகஞ் சிறுவியர்ப் பிரியச்
செங்கய னெடுங்க ணஞ்சன மறப்பப்
பவள வாணுத றிலக மிழப்பத்
தவள வாணகை கோவல னிழப்ப
மையிருங் கூந்த னெய்யணி மறப்பக்

கையறு நெஞ்சத்துக் கண்ணகி யன்றியுங்
காதலர்ப் பிரிந்த மாதர் நோதக
வூதுலைக் குருகி னுயிர்த்தன ரொடுங்கி
வேனிற் பள்ளி மேவாது கழிந்து
கூதிர்ப் பள்ளிக் குறுங்க ணடைத்து
மலயத் தாரமு மணிமுத் தாரமு
மலர்முலை யாகத் தடையாது வருந்தத்
தாழிக் குவளையொடு தண்செங் கழுநீர்
வீழ்பூஞ் சேக்கை மேவாது கழியத்
துணைபுண ரன்னத் தூவியிற் செறிந்த



இணையணை மேம்படத் திருந்துதுயில் பெறாஅ
துடைப்பெருங் கொழுநரொ டூடற் காலத்
திடைக்குமி ழெறிந்து கடைக்குழை யோட்டிக்
கலங்கா வுள்ளங் கலங்கக் கடைசிவந்து
விலங்கிநிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப
வன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை
யாம்ப லாறுந் தேம்பொதி நறுவிரைத்
தாமரைச் செவ்வாய்த் தண்ணறற் கூந்தற்
பாண்வாய் வண்டு நோதிறம் பாடக்
காண்வரு குவளைக் கண்மலர் விழிப்பப்

புள்வாய் முரசமொடு பொறிமயிர வாரணத்து
முள்வாய்ச் சங்க முறைமுறை யார்ப்ப
வுரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி
யிரவுத் தலைப்பெயரும் வைகறை காறு
மனாயிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார்
விரைமலர் வாளியொடு கருப்புவில் லேந்தி
மகர வெல்கொடி மைந்தன் றிரிதர
நகரங் காவ லனிசிறந் ததுவென.

---

க – உ. விரிகதிர் பரப்பி யுலகமுழு தாண்ட
வொருதனித் திகிரி யுரவோற் காணேன்

இ - ள். விரிந்த கதிர்களைப்பரப்பித் தொக்க உலகமனைத்தையும் ஒருதிகிரி யானாண்ட வீளிவில்லாதோனை ாண்டுக்காண்கின்றிலேனென்க.

கதிர் - ஆரும், கிரணமும். முழுதுமென்னுமுற்றும்மை தொக்கது. ஒருதனித் திகிரி - ஒப்பற்ற ஒற்றைத்தேராழி , சக்கரமுமாயிற்று, சிலேடை. இவன் ஓராழி 2டு யான் ஏழுலகையுமாண்டானென்பதுதோன்றத் தேராழியைத் திகிரியென்றார்.

ஆண்ட ஆழியையுடைய உரவோனெனினுமமையும்.

ங – ச. அங்கண் வானத் தணிநிலா விரிக்குந்
திங்களஞ் செலவன் யாண்டுளன் கொல்லென

இ - ள். அழகிய இடத்தையுடைய வானின்கண்

கல்லநிலாவை விரிக்கும் ரு௦ திங்களாகிய செல்வன் எவ்விடத்துள்ளானோதானென்றெங்க.

அத்து - எழனுருபின்கண்வந்த சாரியை. நிலா - ஒளி. அம் - *புறனடை

யாற்கொள்க. இது பண்புத்தொகைக்கண்வந்தது. திங்களஞ்செல்வன் †“கால

மூலகம்” என்னுஞ்சூத்திரத்தன், ஞாயிறுதிங்களென்பன உயர்திணைமேலனவாய்ப்

---

*தொல்காப்பியம், எழுத்ததிகாரம், புள்ளிமயங்கியல், கக௦.

சொல்லதிகாரம், கிளவியாக்கம், ருஎ.

## ச.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

கO௫

பால்பிரிந்திசையாவெனவும், *“நின்றாங் கிசைத்த லிவணியல் பின்று” எனவே நின்றமுறைமையானே ஈறுபெற்றுநின்று உயர்திணையாயிசைத்தல் இவணியல் பின்றெனவுங்கூறிய ஆசிரியர், †“இசைத்தலு முரிய வேறிடத் தான” எனக் கால முதலாகியசொல் உயர்திணையாயிசைத்தலு முரிய; ஈறுதிரிந்து வாய்பாடுவேறுபட்ட வழியென்றாராகலின், ஈறுதிரிந்து திங்களஞ்செல்வனென்றாயிற்றெங்க. மேலும் ஏ இவ்வாறுவருவனவற்றிற்கும் இதுவே விதியெங்க. கொல் - ஐயம்.

௫ - ௮. திசைமுகம் பசந்து செம்மலர்க் கண்கண்
முழுநீர் வார முழுமெயும் பனித்துத்
திரைநீ ராடை யிருநில மடந்தை
யரசுகெடுத் தலம்வரு மல்லற் காலை

இ - ள். கடலை ஆடையாகவுடைய பெரிய நிலமடந்தை தன்கொழுநனைக் காணாது திசையாகிய தன்முகநான்கும் பசப்பூரப்பட்டு மலர்க்கண்கள்நீர்வார. மெய்ம்முழுதும்பனித்து நெஞ்சஞ்சுழல்கின்ற இடைக்கட்பொழுதிலென்க.

திசைமுகம் - திக்காகியமுகம். பசந்து - பொன்னிறங்கொண்டு. மலர்க் கண்கணீர்வார - கள்ளென்றும், கண்களென்றுமாயிற்று. முழுமெயும் - மெய்ம்முழுது மென்றுமாறுக. பனித்து - பனிகொண்டு ; பனியென்பதொருநோயுமுண்டு ; அது குடநாட்டுவழக்கு ; பனிப் பெய்யப்பட்டு என்றபடி. அரசு - தன்கொழுநனாகிய பகலோன். அரசென்பதனை, ‡"குடிமையாண்மை" என்னுஞ்சூத்திரத்து 'நிலை யின வாயினும்' என்பதனான்முடிக்க. கெடுத்து - காணப்பெறாது ; §"எற்கெடுத் திரங்கி" என்றாற்போல, அலம்வரும் - சுழலும். அல்லற்காலை - இடைக்கட் பொழுதில். பசந்தென்றார், மாலைக்காலத்துப்பரந்த பச்சைவெயிலை ; ||"செல் சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன" என்றார் மதுரைக்காஞ்சியினும். இக்காலத்து இதனைக் காடுகிழான்வெயிலென்ப.

செம்மலர்க்கண்கண்முழுநீர்வாரவென்பதற்குச் செம்மலரிடமெல்லாம் கள்ளாகியநீர் முழுதும்வாரவெனவும, சிவந்த மலர்போலும் கண்களிரண்டும் நீர்வாரவெனவும் சிலேடைப்பொருண்மைகாண்க. பனித்தென்பது பனியென்னுநோய்கொண்டென்றும், நடுங்கியென்றுமாயிற்று ; அக்காலத்துப் பனிப் பெய்யுமாகலின்.

கூ - கஉ. கறைகெழு குடிகள் கைதலை வைப்ப
வறைபோகு குடிகளொ டொருதிறம் பற்றி

*தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம், ருஅ.
† " " " ருகூ.
‡ " " " ருசு.
§மணிமேகலை, ஐந்தாவது
மணிமேகலாதெய்வந்தோன்றியகாதை : " வார் கழல் வேந்தே வாழ்கநின் கண்ணி, தீநெறிப் படரா நெஞ்சினை யாகுமதி, யீங்கிவ டன்னை டெய்திய காரணம், வீங்குநீர் ஞால மாள்வோய் கேட்டருள், யாப்புடை யுள்ளத் தெம்மனை யிழந்தோன், பார்ப்பன முதுமகன் படிம வுண்டியன், மழை வளந் தரூஉ மழலோம் பாளன், பழவினைப் கெடுத்திரங்கி."
பவத்தாற் பிழைமண மெய்தி, யேற்
||பத்துப்பாட்டு, கூ. மதுரைக்காஞ்சி, சகக.



வலம்படு தானை மன்ன ரில்வழிப்
புலம்பட இறுத்த விறுத்தின் மன்னரின்

இ - ள். தம் பெயருக்குவருமிறையையறிந்து பொருந்தியிறுக்கும் இறைக்குடி

கள் துயரமுற அவ்வனமிருந்து குறும்புசெய்யும் வில்லேருழவரை ஒருதலையாகப்பற்றி ருரு வெற்றிபொருந்திய தானைமன்னரில்லாத இடமறிந்து அவர்நிலமெல்லாங்கெடும்படி

புதிதாக வந்துவிட்ட குறுநிலமன்னரைப்போலவென்க.

கறை - கடமை ; *" கறைபன் னீராண் டுடன்விடுமின் " என்றார் சிந்தாமணி

யினும். கெழு - †" முடிகெழுவேந்தர் " என்பதனுள்

முடித்தாம். துயருற,

லென்றும் பொருணிகழ்ச்சியைத் தலைமேற் கைவைக்கவென்னும் தொழினிகழ்ச் சீ௦ யாற் கூறினார் ; ‡"கையால் வயிறதுக்குவார்" என்றாற்போல. அறைபோதல்

கீழறுத்தல். ஓடு - ஐ. வலம் - வெற்றி. இவ்வழி - இல்லாதகாலத்தே ; இடட

பொருள் காலத்தோடு மயங்கிற்று. புலம் - அவர்நிலம். இறுத்த - வந்துவிட்ட

§"சேனை யிறுத்தவாய் போல" என்றாராகலின். விருந்து - புதுமை.

கஅ - உ௦. தாழ்துணை துறந்தோர் தனித்துய ரெய்தக்
கரு காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்தக்
குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு
மழலைத் தும்பி வாய்வைத் தூத
வறுகாற் குறும்பெறிந் தரும்பொதி வாசனு
சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற
2௦ வெல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப
மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தெண

இ - ள். தம்மனத்திற்றங்கிய கொழுநர்தம்மைப் பிரிந்திருக்கின்றமகளிர்

கறைகெழுகுடிகளைப்போல ஒடுங்கித் துயரமுறத் தங்காதலரைப் புணர்ந்திரு

நின்றமகளிர் அறைபோகு குடிகளைப்போலத் தருக்கி மகிழ்ந்து இன்பமுறக் குழ 2௫ லிலேவளர்கின்ற முல்லையென்னும்பண்ணிலே கோவலரும் குழலிலே வளர்கின்

முல்லைமலரிலே தும்பியும் வாய்வைத்தூத அரும்புகள் உள்ளடக்கிய வாசத்தை

---

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம் உஎஎ : "கறைபன் னீராண் டுடன்விடு
மின் காமர் சாலை தளிநிறுமின், சிறைசெய் சிங்கம் போன்மடங்கிச் சேரா மன்னர்
சினமழுங்க, வுறையுங் கோட்ட முடன்சீமி னெண்பொற் குன்றந் தலைதிறந்திட்
டிறைவன் சிறுவன் பிறந்தானென் றேற்பார்க் கூர்தோ ராய்த்தீமின்."

† பதிகம், சுக. [உ௫ - ம் பக்கம்.]

‡ சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், உசுசு : "கையார் வளைகள் புடைத்
திரங்குவார் கதிர்முலை மேலாரம் பரிந்தலறுவார், செய்யார் கருங்குழன்மேன் மாலை
சிந்தி நிலத்திவோர் நின்று திருவில்வீச, மையார் கடிப்பிணையும் வார்குழையுங்
களைந்திவோர் கையால் வயிறதுக்குவா, ரையாவோவென் றழுவார் வேந்தன்செய்த
தொன்மை கொடிதென்பார் கோல்வளையினார்"

§ கலித்தொகை, முல்லைக்கலி, அ : "இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல."

கு - கா ;
தொல். எச்ச. சூ. ௬௪-௬௫. பக்
௨அ௪ ; இ - கொ. சூ. ௪௨௬ - மே
பக். ௬௨.

## ௬.—அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

[illegible]

இடைவிடையேபுக்கு வண்கேளுண்ணுதபடி. கடிக்தோட்டித் தென்றலஞ்செல்வனி அதனை மறுகெல்லாந்தூற்ற ஒளிவளையையுடைய மகளிர் இருவகைவிளக்குமெடுப்ப வளமிக்க மூதூர்க்கண்ணே விருந்தின்மன்னனைப்போல மாலையென்னுங்குறும்பு வந்துவிட்டதாகவென்க.

தாழ்தல் - தங்குதல். துணை - தோட்டுணையென்றுமாம்.
களிமகிழ் - வினைத் ரு தொகை. குழல் - ஊதுங்குழலும், மயிரும்.
முல்லை - மலரும், பண்ணும். முல்லையில், சாரியையிற்ப
உருபுதொக்கது. தும்பி - வண்டில் ஒருசாதி. ஊதுங்குழலினும்
முல்லையினும் கோவலரோடு தும்பி
வாய்வைத்துதவெனினுமமையும். இது நிரனிறை. ஊதுதலும்,
கோவலர்க்கும் தும்பிக்கும்பொது. எல் - ஒளி. மல் லல் - வளன்.
அறுகாலைக் குறும்பென்றார், தென்றல் தளிர்ப்பித்தும், பூப்பித்துஞ் கோ
செய்ய அவற்றைத் தான்புகுந்துண்டலான்.
சிறுகாற்செல்வனென்பதை முற் கூறியவாற்றான்முடிக்க.

அல்லற்காலை விருந்தின்மன்னரில் தனித்துயரெய்தக்
களிமகிழ்வெய்த வாய் வைத்தூத மறுகிற்றூற்ற மணிவிளக்கெடுப்ப மாலை
வந்திறுத்தெனவென்க.

௨௧ - ௨௬. இளைய ராயினும் பகையரசு கடியுஞ்
செருமாண் டென்னர் குலமுத லாகலி
னந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்
புன்கண் மாலைக் குறும்பெறிந் தோட்டிப்
பான்மையிற் றிரியாது பாற்கதிர் பரப்பி
மீனர சாண்ட வெள்ளி விளக்கத்து

இ - ள். தாம் பிராயத்தான் இளையராயினும் பகைவேந்தரை முற்றக்கடிய வல்ல செருவின்மேம்பட்ட தென்னர்குலத்திலே முதற்றோன்றதலாலே அந்திப் பொழுதே செவ்வானினிடத்தே வெண்பிறை தான்றோன்றி வருத்தத்தைத்தரும் மாலையாகிய குறும்பையெறிந்து ஓட்டி அரசியலிற்றப்பாது தனது வெள்ளிய கதிராகிய புகழைப்பரப்பிச் சந்திரன் காட்டையாண்ட வெண்மையையுடைய விளக்கத்திலேயென்க.

தென்னர் குலமுதலாதலினென்பதற்குத் தென்னர்குலத்திற்கு முதலாகையாலேயெனினுமமையும். சோமகுலத்தென்னனென்னாது தென்னர்குலச்சோமனென்றார்; அவன், அளியினொத்து வலியினும் தெறலினும் ஒவ்வாமையானும் குறைவும் நிறைவும் மறுவுமுடைமையானும் இவர்க்கு அவை இன்மையானும் உயர்ச்சிநோக்கி. பிறை தென்னர்குலமாதலின், வளவர் குலத்து இரவியாண்ட நிலமழிய வந்துவிட்ட மாலைக்குறும்பை எறிந்து ஓட்டி ஆண்டதென்க. அன்றி ஓட்டித் தான் மீனிராச்சியத்தை ஆண்டதெனினுமமையும். அந்தி - மாலைப்பின் பொழுது. வானாது வானத்துப்பிறையென்னாது வெண்பிறையெனப் பண்படுத்தமையான், *எடுத்தமொழி இனஞ்செப்பிச் செவ்வானத்து வெண்பிறைதோன்றிய தென்பதாயிற்று. புன்கண் - வருத்தம். மாலையைக் குறும்பென்றார்; இடை நின்றகாலத்துப் புகுந்து வருத்துதலின். குறும்பெறிந்தோட்டி - குறும்பை அறத் தோட்டி. பான்மையிற்றிரியாது - அரசியலின்வழாது. பாற்கதிர் - பால்

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம். ௬௦.

போலுங்கிர். அதற்குப் புகழெனவும்
ஒருபொருடோன்றும். மீனராச - சந்
திரன் ; உடபெதியென்பவாதலின்.
அன்றிமீனிராச்சியமெனினுமமையும்.

உஎ-௩௨ இல்வளர் முல்லையொடு மல்லிகை யவிழ்ந்த
பல்பூஞ் சேக்கைப் பள்ளியுட் பொலிந்து
௫ செந்துகிர்க் கோவை சென்றேந் தல்கு
லந்துகின் மேகலை யசைந்தன வருந்த
நிலவுப்பயன் கொள்ளு நெடுநிலா
முற்றத்துக்
கலவியும் புலவியுங் காதலற் களித்தாங்
கார்வ நெஞ்சமொடு கோவலற் கெதிரிக்
௩௦ கோலங் கொண்ட மாதவி யன்றியும்

இ - ள். முல்லையொடு மல்லிகையும் ஒழிந்த
தாழிக்குவளைமுதலிய பலபூவும்
அவிழ்ந்த பள்ளியிடத்தே பொலிவுபெற்று அழகேந்திய
அல்குறன்னிடத்தில் துகில்
செல்லப்பட்டுச் செந்துகிர்க்கோவையாகிய மேகலை
அசைந்தனவாய் இரங்காநிற்க
நிலாவினது பயனைக் கொள்ளுதற்குக்காரணமாகிய உயர்ந்த
நிலாமுற்றத்தின்கண் கருணை தன்காதலனுக்கு ஒருகாற்
கலவியையும் மறுகாற் புலவியையும் மாறியளித்து
அவ்விடத்து ஆர்வமிக்க நெஞ்சத்தோடு கோவலனை
எதிரேற்றுமுயங்கி அம்முயக்கத்
தால் முன்குலைந்த ஒப்பனையைப் பின்னும்
வேட்கைவிளைக்குங்கோலமாக அக்

கோலத்தினைத் திருத்திய மாதவியும் அவளன்றியுமெனக.

இல்வளர் - மனைவளர். ஒடு - எண்ணொடு. சேக்கைப்பள்ளி - சேருஞ்சயனம். ௨௦ துகிர்க்கோவை - பவளக்கோவை. துகின்மேகலை - துகின்மேற்சூழ்ந்தமேகலையென்

பாருமுளர். அசைந்தனவருந்த நிலவுப்பயன் கொள்ளுமென இடக்கரடக்கிக்

கூறினர். எதிரியெனவே முயக்கங்கூறினர். இனிச் சென்று, அஃன்றெனச்

செல்லுதல் அகறலாக்கி, அகன்றேந்தல்குவிடத்துத் துகின்மேற் சூழ்ந்தமேகலை

அசைந்தனவாய் இரங்கவெனினுமமையும். மேகலை - பவளக்கோவை எட்டினாற் ௨௫ செய்தது. *" எண்கோவை மேகலை காஞ்சி யெழுகோவை" என்றாராகலின்.

†" தவழும் புதல்வனை யொருகையாற் றழீஇப், பவழஞ் சேர்ந்த பல்கா ழல்குலர்"

என்றார் கதையினும்.

விளக்கத்திலேபொலிந்து அளித்து எதிரிக் கோலங்கொண்ட மாதவியெனக.

அவிழ்ந்த பூஞ்சேக்கையெனவே செவ்வியும், பொலிந்தெனவே அழகும் ௩௦ இளமையுங்கூறிற்று.

---

* " எண்கோவை மேகலை காஞ்சி யெழுகோவை, பண்கொள் கலாபம் பதி

னாறு - கண்கொள், பருமம் பதினெட்டு முப்பத் திரண்டு, பார்த்து."

'விரிசிகை யென்றுணரற்

† பெருங்கதை, உஞ்சைக்காண்டம், ௪௩ - ௨௬ வரி தீயிட்டது : "தவழும்
புதல்வனை யொருகையாற் றழீஇப், பவழஞ்சேர்ந்த பல்காழல்குல, ரவிழ்ந்த பூந்
துகி லங்கையி னசைஇ, ககைப்பூங் கோதையொடு காந்த கூர்தற்கு, மிகைக்கை
காணுது புகைத்தீ யெறிப்பப், படைத்தோன் குற்ற மெடுத்துரையிதற்கென,வங்கித்
தேவ னருளென வயன்மனைப், பொங்குநீர்ப் பொய்கைப் புக்கன ரொருசார்."

## அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

௧௧௩

௩௫-௩௬. குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குணதிசை மருங்கிற் காரகி லுறந்து

இ - ள். மேற்றிசையிடத்துண்டான அயிர் முதலியோடே கீழ்த்திசையிடத்துண்டான அகின்முதலியவற்றுற் புகைக்கும்புகையைத்துறந்தென்க.

குடதிசையயிர் - யவனதேசத்து அயிர். அயிர் - கண்சருக்கரை. குணதிசை மேவகில் ; காரகில். குடதிசை, குணதிசை ; வெள்ளயிர், காரகிலென்பனவற்றுட் செய்யுளின்பமும் அலங்காரமுமுணர்க. அகிலென்றது ஆகுபெயராற் புகையை. *" இருங்கா ழகிலொடு வெள்ளயிர் புகைப்ப" என்றார் நெடுநல்வாடையினும். புகையுறப்பு ஆறுளவாகவும் தலைமைபற்றி இவ்விரண்டினையுங் கூறினர்.

௩௭-௩௮. வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்

தென்மலைப் பிறந்த சந்தன மறுக

இ - ள். வடதிசைக்கண்ணதாகிய இமயமலைக்கட்பிறந்த சிலாவட்டத்திலே தென்றிசைக்கண்ணதாகிய பொதியமலையிற்பிறந்த சந்தனஞ்சுழலவென்க.

வான்கேழ்வட்டம் - மிக்க ஒளியையுடைய சிலாவட்டம். †"வடவரை தந்த வான்கேழ் வட்டம்" என்றார் பெருங்குறிஞ்சியினும். மறுக - சுழல; அரைக்கவென்ற கு படி. அகிறறந்த சந்தனமறுகவென்க. இவற்றின் விரோதமுமுணர்க.

௩௯-௪௬. தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க்
காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்
பைந்தளிர்ப் படலைப் பரூஉக்கா ழாரஞ்
சுந்தரச் சுண்ணத் துகளொடு மளைஇச்

௨௦

சிந்துபு பரிந்த செழும்பூஞ் சேக்கை
மந்த மாருதத்து மயங்கினர் மலிந்தாங்
காவியங் கொழுந ரகலத் தொடுங்கிக்
காவியங் கண்ணுற் களித்துயி லெய்த

இ - ள். தாமரைக்கொழுமுறியினையும், அதன் மலரினையும், குவளையையும், உரு கழுநீர்மலரினையும், பச்சிலையுடனே கலந்துதொடுத்த படலைமாலையுடனே கோவை யுற்ற பருமுத்தமும் நிறத்த சுண்ணத்தோடு சிந்திக் கலந்துகிடந்த வளவிய பூஞ் சேக்கையிடத்து அங்ஙனம்புணர்ந்த உபகரணப்புணர்ச்சியிறுதியில் மயங்கியமகளிர் தென்றலான்மயக்கந்தீர்ந்து தங்காதன்மிகுதியான் மயங்கித் தமதாவிபோலுங் கொழுநர்மார்பிடத்தே காவிபோலும் கண்மலர்களைப் பொருந்தவைத்து இன்பக் ௩௦ ளியான அனந்தல்கூடவென்க.

கொழுமுறி - இளந்தளிர். காமம்வருமென்பது விகாரத்தாற்

காமருவெண கின்று கண்டார்க்கு விருப்பம்வருமென்பதாயிற்று.
காண்வரு பாடமாயிற் காட்சி

---

* பத்துப்பாட்டு, நெடுநல்வாடை, ருரு - ருசு. "தண்ணறுஞ் செருப்பமைத், திருங்கா ழகிலொடு வெள்ளயிர் புகைப்ப."

தகர முளரி

† "வடவர் தந்த வான்கேழ் வட்டம்" என்றார் நெடுநல்வாடையிலும். [ருக.]



வருமென்க. குவளை - நீலோற்பலம். மா - நிறம். பைந்தளிர் - பச்சிலை. படலை -

இலைத்தொடை. பருஉக்காழாரம் - பருமுத்துவடம். சுந்தரம் - நிறம். அணிஇ -

கலந்து. சித்தபு அணிஇயென மாறுக. மயங்கினர்மலிந்து - மயங்கினராய்க்காதன்

மிக்கெனினுமமையும். ஆங்கு - அங்ஙனம். களித்துயில் - இன்பத்துயில்,

ரு சஎ-நஎ. அஞ்செஞ் சீறடி யணிசிலம் பொழிய
மென்றுகி லல்குன் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்கும மெழுதாண்
மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதின

க0 டிங்கள் வாண்முகஞ் சிறுவியர்ப் பிரியச்

செங்கய னெடுங்க ணஞ்சன மறப்பப்
பவள வாணுத றிலக மிழப்பத்
தவள வாணகை கோவல னிழப்ப
மையிருங் கூந்த னெய்யணி மறப்பக்
௫௫ கையறு நெஞ்சத்துக் கண்ணகி யன்றியும்

இ - ள். சீறடி தன்னையணியுஞ்சிறப்பைச் சிலம்பு பெருதொழிய, அல்குல் தன்னையணியுஞ்சிறப்பை மேகலை பெருதுநீங்க, முகம் தன்னையணியுஞ்சிறப்பைச் சிறுவியர் பெருதுபிரிய, சிவந்து நெடிதான கயல்போலுங்கண் தன்னையணியுஞ் சிறப்பை அஞ்சனம் பெருதுமறப்ப, நுதல் தன்னையணியுஞ்சிறப்பை பத் திலகம் ௨௦ பெருமலிழப்ப, தன்னைக்கூடிஞற்பெறுந் தவளவாணகையைக் கோவலன்பெருது இழப்ப, தன்னை அணிந்தாற்பெறுங் கூந்தலின்மணத்தைப் புழுகுநெய் பெருதுமறப்ப, இவை இங்ஙனமாம்படி தான் எழுதாளாய் மகிழாளாய்க் காதினளாய்க் கையற்ற நெஞ்சத்தையுடையளாகிய கண்ணகியும், அவளன்றியுமென்க.

துகில் - அல்குற்கு அடை ; *"துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" போல ௨௫ நின்றது. மேகலை - எண்கோவை. கொங்கைமுன்றில் - முலைமுற்றம். மங்கலவணியிற்பிறிதணி - மங்கலவணியின்வேருணவணி. கொடுமை - வளைவு. வடிந்து வீழ்காதினளென்பது அணியாமையினும் பிறந்த அழகுகூறிற்று. வியர்பிரிய -

விகாரம். அன்றி வியர்ப்பு இரியவெனினுமமையும். இரிதல் - நீங்குதல். செய் -
புழுகுசெய். ஒழிய நீங்கப் பிரிய மறப்ப இழப்பவெனப் பரியாய வாய்பாட்டான் ௵ வந்து இழப்பவென்னும் பொருளவாயின. இவ்வினையெச்சங்களை எழுதாள் மகி
ழான் காதினனென்னும் குறிப்புவினைப்பெயரான்முடித்து இப்பெயர்கட்குப் பண்
பொட்டுவிரித்து இவற்றைக் கையற்றவென்னும் பெயரெச்சத்தோடுமுடித்து இப்
பெயரெச்சத்தை நெஞ்சென்னும் பெயரோடுமுடித்து இதனையுடைய கண்ணகி
யெ ன்க. இனித் தவளவாணகை கோவலனிழப்பவென்பதனுன் அவன்பிரிய

---

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், எஅ, " துப்புறழ் தோண்டைச் சேவ்
வாய்த் தோழியர் காமத் தூதி, ஞெப்பவொன் றூதி யாக வாயிரத் தோரெட் டீரூச்,
செப்பித்தஞ் செம்பொ னல்கு னலம்வளா வின்றி விற்கு, மூப்பமை காமத் துப்பி
னவரிட முளைத்து மன்றே."

'அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

கக௫

வென்பதாம்; ஆகவே இவ்வுறுப்புக்கள் அவன்பிரிவுக்கு உடம்பட்டனவென்று முனிந்து ஒழிய நீங்க இரிய மறப்ப இழப்ப

இவற்றோடே குழையையுந் துறந்தகாதினள் எழுதான் மகிழாளாதலான் இவையும் பயனிழப்பத் தானும் அழகும் இன்பமு மிழத்தலாற் கையற்றநெஞ்சினையுடைய கண்ணகியெனவுரைப்பினுமமையும்; *"அருங்கல.........அதுக்கினள்" எனவும், †"மஞ்சசூழ்.........சேறினள்" என ௩ வும் சிந்தாமணியினுங்கூறினாராகலின்.

௫௮-௭௧. காதலர்ப் பிரிந்த மாதர் நோதக
ஊதுலைக் குருகி னுயிர்த்தன ரொடுங்கி
வேனிற் பள்ளி மேவாது கழிந்து
கூதிர்ப் பள்ளிக் குறுங்க ணடைத்து
மலயத் தாரமு மணிமுத் தாரமு
மலர்முலை யாகத் தடையாது வருந்தத்
தாழிக் குவளையொடு தண்செங் கழுநீர்
வீழ்பூஞ் சேக்கை மேவாது கழியத்
துணைபுண ரன்னத் தூவியிற் செறிந்த
இணையணை மேம்படத் திருந்துதுயில் பெறாஅ
துடைப்பெருங் கொழுநரொ டூடற் காலத்
திடைக்குமி ழெறிந்து கடைக்குழை யோட்டிக்
கலங்கா வுள்ளங் கலங்கக் கடைசிவந்து
விலங்குநிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப

இ-ள். அங்ஙனம் கையற்ற கண்ணகியேயன்றியும், தங்காதலரைப்பிரிந்த மாதர் பிரிவால் துன்பமுறுதலானே ஊதுகின்ற துருத்தியின் உலைமூக்குப்போல அழலெழவுயிர்த்தனராய்ச்

செருக்கடங்கி இவ்விளவேனிற்காலத்திற்கமைந்த நிலா முற்றத்தின்மேவாதொழிந்து கூதிர்க்காலத்திற்கமைந்த இடைநிலத்து ஒடுங்கி ஆண்டுத் தென்றலுநிலவும்புகாமற் சாளரக்கண்களையடைத்துச் சந்தனமுமுத்தும் உரு ஆகத்துமுலையில் அடையப்பெறாது வருந்தக் குவளை செங்கழுநீர்முதலிய குளிர்ந்த மலர்கள் தாம்விரும்பிய பூஞ்சேக்கையிற் பள்ளித்தாமமாய் மேவப்பெறாமல் வருந்தத் தன்சேவலோடுபுணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச்சியான் உருகி யுதிர்த்த வயிற்றின்மயிர் எஃகிப்பெய்த பல்வகையணைமீதே மேன்மைபெறத் தங்கொழுநரகலத்தே துயிலும் களித்துயிலைப்பெறாமல் அவரோடு முன்பு ஊடிய ருo காலத்து இடைநின்ற குமிலைழயெறிந்து கடைநின்றகுழையைத்தூரந்து பெருமை

---

* சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், உoஎ. "அருங்கலக்கொடி யன்னவ னேகின, னிருந்திவ் வாகத் தெவன்செய்விர் நீரெ ன, மருங்கு ஞேவ வளர்ந்த வனமுலைக், கருங்கண் சேந்து கலங்க வதுக்கினன்."

† சீவகசிந்தாமணி, பதுமையாரிலம்பகம், உoஅ. "மஞ்சு சூழ்வரை மார்பனைக் காணிய, துஞ்ச லோம்புமி னென்னவுந் துஞ்சினீ, ரஞ்ச னத்தொடு மை யணி மின்னென, நெஞ்சி னீணெடுங் கண்மலர் சீறினன்."



யும் உரனுமுடைமையாற் கலங்காதநெஞ்சமும் கலங்கும்படி

கடைசிவந்து குறக் கிட்டுப்பிறழும் நெடியகண்கள் அக்கணம்பிறழ்ந்து உவகைமுத்தைச் சிந்தாது புலம்புமுத்தைச்சிந்தவென்க.

நோதக - கண்டார்க்கு நோவுதக. ஊதுலைக்குருகு - துருத்தி; வெளிப்படை. ரு அலர்தல் - பரத்தல். ஆகத்துமுலையென்க ; முலையாகமுமாம். கழியவென்பது ஈண்டு வருந்தவென்பதாயிற்று. துணை - சேவல். தூவி - மயிர். இணையணை - பலவான அணை ; *" ஐந்துமூன்றடுத்த" என்றாராகலின். திருந்துதுயில் - முற் கூறிய களித்துயில். உடைப்பெருங்கொழுநர் - தங்களையுடைய பெரியகொழுநர். ஊடற்காலத்து - முன்னூடேங்காலங்களில். கலங்காவுள்ளம் - பெருமையும் உரனும் இம் முடையவுள்ளம். விலங்கிகிமிர் - குறக்கிட்டுப்பிறழும் . கிமிர்நெடுங்கண் - வினைத் தொகை. புலம்புமுத்து - துன்பக்கண்ணீர் ; உவகைக்கண்ணீருமுண்டாகலின். புலம்பு - தனிமையுமாம். உறைப்ப - உகுப்ப.

கண்ணகியன்றியும் மாதர் ஒடுங்கிக் கழிந்து அடைந்து வருந்தக் கழியப் பெறாது முத்துறைப்பவென்க.

௬௫ எ௨-எ௬. அன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை
யாம்ப லூறுந் தேம்பொதி நறுவிரைத்
தாமரைச் செவ்வாய்த் தண்ணறற் கூந்தற்
பாண்வாய் வண்டு நோதிறம் பாடக்
காண்வரு குவளைக் கண்மலர் விழிப்ப

௨௦ இ - ள். அன்னமாகிய மென்னடையினையும் தேம்பொதிநறுவிரை ஆம்ப

லூறும் தாமரையாகிய வாயினையும் தண்ணறலாகிய கூந்தலினையுமுடைய பொய்கை

யென்பான், பாண்டன்மைய யத் தம்மிடத்தேயுடைய வண்கொகிய பள்ளியுணர்

த்துவார் புறநீர்மையென்னும் திறத்தாற் பள்ளியெழுச்சிபாட, அழகுவரும் குவளை

யாகிய கண்மலர்விழிப்பவென்க.

உரு ஆம்பல் - வாய்க்கு அடை : †" துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" போல ;

பண்ணுமாம். காறும் - தோன்றும் ; ‡" அருமணி மாகதத் தங்க ணூறிய" எனச்

சிந்தாமணியினும், §" மாகத மணிக்கயத் தங்க ணூறிய, வழனிறப் பொன்னித

ழாயிரம் விரித்து" எனக் கதையினுள்ளுங்கூறினாராகலின். தேம் - இனிமையும்,

---

* சீவகசிந்தாமணி, கா ந்தருவதத்தையா ரிலம்பகம், கூசகூ. " ஐஙதுமூன் றடு

த்த செல்வத் தமளிமூன் றியற்றிப் பூம்பட், டெக்கிர வெழினி வாங்கி யின்முக

வாசச் செப்புஞ், சந்தனச் சாந்தச் செப்புந் தண்மலர் மாலை பெய்த, விக்கிர நீலச்

செப்பு மிளையவ ரேந்தி னாரே."

† சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், எஅ.

‡ " " கடுச. அருமணி மரகதத் தங்க ணூறிய,

வெரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத், திருமக ளிவளெனத் திலக வெண

குடைப், பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே."

§ உதயணன்கதை.

எங-கு; மாறன், பக்.

கருகூ.

## அந்திமாலைச்சிறப்புச்செய்காதை.

ககஎ

தேனும். நறவிளை - நல்லமணம். பாண் - பாண்சாதி. நேர்திறம் - நேர்ந்ததிறம்; ஆவது புறநீர்மை. அது, பாலைப்பண்ணின்திறமைந்தன் ஒன்றென்க; என்னை? "தக்கராக நேர்திறங் காந்தார பஞ்சமமே, தக்கங் கழிசோம ராகமே - மிக்கதிறற் காந்தார மென்றைந்தும் பாலைத் திறமென்றார், பூந்தா ரகத்தியனார் போந்து" என்ப வாகலின். குவளைக்கண்மலர் - குவளையாகிய கள்ளையுடையமலர்; குவளைக் கண்ணே மலருமாயிற்று. விழித்தல் - மலர்தலும், கண்விழித்தலுமாயிற்று. இனித் தேம் பொதி நறவிளைத்தாமரையாகிய ஆம்பலொடும் செவ்வாயெனினுமமையும். இனிப் பெண்பாலாதலிற் பண்டோற்றும்வாயென வாய்க்கடையாக்கலுமொன்று. பாணைப் பாட்டாக்கி வண்டின்வாய்க்கு அடையாக்கினுமமையும். பாட விழிப்பவென இயையும். அன்னமென்பதுமுதல் விழிப்பவென்னுந்துணையுங்கூறியவிவை உருவகமென்னுமலங்காரமென்றுணர்க.

எஎ-அச. புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து
முள்வாய்ச் சங்க முறைமுறை யார்ப்ப
வுரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி
யிரவுத் தலைப்பெயரும் வைகறை காறு

கஉ மனாயிருள் யாமத்தும் பகலுந் துஞ்சார்
வினைமலர் வாளியொடு கருப்புவில் லேந்தி
மகர வெல்கொடி மைந்தன் றிரிதர
நகரங் காவ னனிசிறந் ததுவென

இ - ள். பொய்கை கண்மலர்விழிப்பப் புள்ளொலியாகிய முரசுடனே கோழி உ௦ யும் சங்கமும் முறைமுறையார்ப்பக் கடல்போலும் பரப்பையும் ஒலியையுமுடைய வூரைத்துயிலெழுப்பி அல்லற்காலை வந்துபுக்க இருள் இவ்விடத்துநின்றுநீங்கும் வைகறையாமமளவும் முன்சென்ற அரையிருளினும் ஓர்யாமத்தினும் அரையாமத் தினும் ஒருகணப்பொழுதுந்துஞ்சாராம்படி காமன் ஏந்தித் திரிதருதலானே இக் நகரம் மிகவும் காவல்சிறந்ததென்க.
உகூ

*"நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்" என்றார் புறத்தினும். †"கைச் சிலை கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப்பான்" என்றார் சிந்தாமணி யினும். முன்வாய் - கூர்த்தவாய். முறைமுறையார்ப்ப - தத்தம் இனமரபினார்ப்ப.

---

* புறநானூறு, கஅஅ: "தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி, வெண் குடை நிழற்றிய வொருமை யோற்கு, நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான், கடு மாப் பார்க்குங் கல்லா வொருவற்கு, முண்பன நாழி யுடுப்பன விரண்டே, பிறவு மெல்லா மோரொக் கும்மே, செல்வத்துப் பயனே யீத, றுய்ப்பே மெனினே தப் புந பலவே." மதுரைக் கணக்காயனார்மகனார் நக்கீரனார் பாடியது.

† சீவகசிந்தாமணி, சுரமஞ்சரியாரிலம்பகம், கூக. "பச்சிலைப்

பட்டுமுத்தும் பவளமு மிமைக்கு மல்கு, னச்சிலே வேற்கண் மாதர் நகைமுக முறவன் மாக்தி, பிச்சையுங் குறிப்பு நோக்கி யெய்வதே கரும மாகக், கைச்சிலே கணையோ டேந்திக் காமனிக் கடையைக் காப்பான்."



இன் - உவமவுருபு. *" துயிலெடை" என்பவாகலின், எடேப்பியென்ருர் ; பிரிக்
தார்க்கும் புணர்ந்தார்க்குந்துயிலின்மை காமனல் வருதலின். இரவு தலைப்பெயரு
மென்பதனை இரவுத்தலைபெயன்ருர் ; † '' ' கிளர்தவல்ல" என்னுமதிகாரப்புறனடை
யால் ; " தடவுத்திரை" போல வல்லெழுத்துப்பெற்றது. தலை - இடம். 'பெயரு ரும் - நீங்கும். காறும் - அளவும். அரையிருள் - இரண்டாம் யாமம். யாமம் - ஓர்
யாமம். அரையிருள்யாமம் - உம்மைத்தொகை ; இருபெயர்க்கண் வந்தது. பகல் -
அரையாமம். ‡" மற்றை யாமம் பகலுறக் கழிப்பி" என்ருர் மதுரைக்காஞ்சி
யுள்ளும் ; பகுத்தலிற் பகலாயிற்று. கனி - மிகுதி. இனித் துஞ்சானென்றுபாட
மோதிக் காமன் துஞ்சானுய்த்திரிதருதலின், நகரம் காவல்சிறந்ததெனினுமமையும். ௬௦ ஆர்ப்ப எடுப்பித் தலைப்பெயரும் வைகறைகாறும் துஞ்சாராம்படி காமன்
ஏந்தித் திரிதருதலான் நகரம் காவல் மிகச்சிறந்ததென்க,

என் - அசை. இது முதல் நடு இறுதியாக அளவடியான்முடிதலின், நிலை
மண்டில ஆசிரியப்பா.

கூடினார் பானிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க்
கசு காவலன் வெண்குடைபோற் காட்டிற்றே - கூடி
ய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்குங் கங்குற் பொழுது.

பருந்து நிழலுமென... ..
.அடியார்க்குநல்லானென்பான்.
ஒருந்தமிழ் ... ...
...நிரம்பையர்காவலனே. உ௦ காற்றை ... ... ...
...சொல்வித்ததே.

அந்திமாலைச்சிறப்புச்செய்காதை முற்றிற்று.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், ௩௬.
"ஞாத ரேத் திய துயிலெடை நிலையும்." "பயில்பூம் பள்ளித் துயிலேடை மாக்கள்" என்றார் பெருங்கதையிலும், வத்தவகாண்டம், கனவிறுத்தது.

† தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகரப்புணரியல், எ அ.

‡ பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, ௬௫௬.

க-௩ : சிலப்பதி. க -

# ஐந்தாவது
# இந்திரவிழவூரெடுத்தகாதை.

அலைநீ ராடை மலைமுலை யாகத்
தாரப்பே ரியாற்று மாரிக் கூந்தற்
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை
புதையிருட் படாஅம் போக நீக்கி
யுதய மால்வரை யுச்சித் தோன்றி
யுலகுவிளங் கவிரொளி மலர்கதிர் பரப்பி
வேயா மாடமும் வியன்கல விருக்கையு
மான்கட் காலதர் மாளிகை யிடங்களுங்
கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவன ரிருக்கையுங்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும்

வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையு மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்
பட்டினு மயிரினும் பருத்தி நூலினுங்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையு
*மாரமு மகிலுந் தூசுந் துகிரு
மாசறு முத்து மணியும் பொன்னு
மருங்கல வெறுக்கையோ டளந்து கடையறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும்
காழியர் கூவியர் கண்ணொடை யாட்டியர்
மீன்விலைப் பரதவர் வெள்ளுப்புப் பகருநர்
பாசவர் வாசவர் †பன்னிண விலைஞரோ
டோசுநர் செறிந்த வூன்மலி யிருக்கையுங்
கஞ்ச காரருஞ் செம்புசெய் குநரு
மரங்கொ றச்சருங் கருங்கைக் கொல்லரும்

* தூசுந் துகிரு மாரமு மகிலு மெனமாற்றி வழங்குவாருமுளர்.

† மைந்நிண விலைஞரெனவும் பைந்நிண விலைஞரெனவும் பாடம்.



கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்
*பொன்செய் கொல்லரு நன்கலந் தருநருந்

துன்ன காரருந் தோலின் றுன்னருங்
கிழியினுங் கிடையினுந் †தொழில்பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களுங்
குழலினும் யாழினுங் குரல்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டு
மரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையுஞ்
சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு
மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமுங்
கோவியன் வீதியுங் கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும் பெருங்குடி வாணிகர்
மாட மறுகு மறையோ ரிருக்கையும்
வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை
யாயுள் வேதருங் காலக் கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையுந்
திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையொ
டணிவளை போழுந ரகல்பெரு வீதியுஞ்
சூதர் மாகதர் ‡வேதா ளிகரொடு
நாழிகைக் கணக்கர் நலம்பெறு கண்ணுளர்
காவற் கணிகைய ராடற் கூத்தியர்
பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்
பயிற்றொழிற் குயிலுவர் பன்முறைக் கருவியர்
நகைவே ழம்பரொடு வகைதெரி யிருக்கையுங்
கடும்பரி கடவுநர் களிற்றின் பாகர்
நெடுந்தே ரூருநர் கடுங்கண் மறவ
ரிருந்து புறஞ்சுற்றிய பெரும்பா யிருக்கையும்
பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமு

மிருபெரு வேந்தர் முனையிடம் போல
விருபாற் பகுதியி னிடைநில மாகிய
கடைகால் யாத்த மிடைமரச் §சோலைக்
கொடுப்போ ரோதையுங் கொள்வோ ரோதையு
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியிற்

---

* பொன்செய்புலவரெனவும் பாடம். ‡ வேதாளியரென்றும்பாடம்.
† கழிபலபெருக்கியெனவும் பாடம். § சோலையென்றும் பாடம்.

## ௫.—இந்திரவிழவூரெடுத்தகாதை.



சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென,
அந்நாள்
வெற்றிவேன் மன்னற் குற்றதை
யொழிக்கெனத்
தேவர் கோமா னேவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்
புழுக்கலு நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து
துணங்கையர் குரவைய ரணங்கெழுந் தாடிப்
பெருநில மன்ன னிருநில மடங்கலும்
பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கு
மூதிற் பெண்டி ரோதையிற் பெயர
மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்

பட்டின மருங்கிற் படைகெழு மாக்களு
முந்தச் சென்று முழுப்பலி பீடிகை
வெந்திறன் மன்னற் குற்றதை யொழிக்கெனப்
பலிக்கொடை புரிந்தோர் வலிக்குவரம் பாகெனக்
கல்லுமிழ் கவணினர் கழிப்பிணிக் கறைத்தோற்
பல்வேற் பரப்பினர் மெய்யுறத் தீண்டி
யார்த்துக் களங்கொண்டோ ராரம ரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை
வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்
குயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி
யிருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலிற் றிருமா வளவன்
வாளுங் குடையு மயிர்க்கண் முரசு
நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப்
புண்ணியத் திசைமுகம் போகிய வந்நா
ளசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகை*விலக் கியதிப் பயங்கெழு மலையென
விமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி †யேற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு

* விலங்கியதெனவும் பாடம். † எழுதியெனவும் பாடம்.

௬௬ கஉஉ சிலப்பதிகாரம்.

மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
௯௦௦ கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரு
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமு
மவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும் ௯௦௫
பொன்னினு மணியினும் புனைந்தன வாயினு
நுண்வினைக் கம்மியர் காணா மரபின துயர்நீங்கு
சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு மயன்விதித்து
க் கொடுத்த மரபின வவைதா மொருங்குடன்
புணர்ந்தாங் குயர்ந்தோ ரேத்து ௧௧௦
மரும்பெறன் மரபின் மண்டப மன்றியும் வம்ப
மாக்க டம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பலபொதி
கடைமுக வாயிலுங் கருந்தாழ்க் காவலு
முடையோர் காவலு மொரீஇய வாகிக் ௧௧௫
கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது கொடுத்த லீயா
துள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமுங்
கூனுங் குறளு மூமுஞ் செவிடு

மழுகுமெய் யாளரு முழூகின ராடிப் .கஉ0
பழூதில் காட்சி நன்னிமம் பெற்று
வலஞ்செயாக் கழியு மிலஞ்சி மன்றமும் வஞ்ச
மூண்டு மயற்பகை யுற்ருேர் நஞ்ச முண்டு நடுங்கு
துயருற்ருே
ரழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர் கஉரு
கழல்கட் கூளிக் கடுநவைப் பட்டோர் சுழல வந்து
தொழுத்துயர் நீங்கு
கிழல்கா னெடுங்க னின்ற மன்றமுந் தவமறைந்
தொழுகுந் தன்மை யிலாள ரவமறைந் தொழுகு
மலவைப் பெண்டி கரு0 ரறைபோ கமைச்சர்
பிறர்மனை நயப்போர்பொய்க்கரி யாளர் புறங்கூற்
ருளரென் கைக்கொள் பாசத்துக் கைப்படு
வோரெனக் காத நான்குங் கடுங்குர லெடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமு

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கஉரு

கருரு மரகதோல் கோடினு மறங்கூ றவையத்
துலா நூல் கோடி யொருதிறம் பற்றினு
நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமு
மெய்வகை யுணர்ந்த விழுமியோ ரேத்து கச0
மைவகை மன்றத்து மரும்பலி யுறீஇ
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி

வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றித்
தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து
மரகத மணியொடு வயிரங் குயிற்றிய
பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை
நெடுநிலை மாளிகைக் கடைமுகத் தியாங்கணுங்
கிம்புரிப் பகுவாய்க் கிளர்முத் தொழுக்கத்து
மங்கலம் பொறித்த மகர வாசிகைத்
தோரண நிலைஇய தோமறு பசும்பொற்
பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை
பாவை விளக்குப் பசும்பொற் படாகை
தூமயிர்க் கவரி சுந்தரச் சுண்ணத்து
மேவிய கொள்கை வீதியிற் செறிந்தாங்
கைம்பெருங் குழுவு மெண்பே ராயமு
மரச குமரரும் பரத குமரருங்
கவர்பரிப் புரவியர் களிற்றின் றொகுதிய
ரிவர்பரித் தேரின ரியைந்தொருங் கீண்டி
யரசு மேம்படீஇய வகனிலை மருங்கி
லுரைசான் மன்னன் கொற்றங் கொள்கென
மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கு
மாயிரத் தோரெட் டரசு தலைக்கொண்ட
தண்ணறுங் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணக மருள வானகம் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டிப்

பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு
மறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும் 



வால்வளை மேனி வாலியோன் கோயிலு
நீல மேனி நெடியோன் கோயிலு
மாலை வெண்குடை மன்னவன் கோயிலு
மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை யொருபா
னூல்வகைத் தேவரு மூவா று கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபா
லறவோர் பள்ளியு மறனோம் படையும்
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத்
தானமுந்
*துறவோ ருறைக்குஞ் செயல்சிறந்
தொருபாற்
கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்ன
ரடித்தளை நீக்க வருள்சிறந் தொருபாற்
கண்ணு ளாளர் கருவிக் குயிலுவர்
பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணரொ
டெண்ணருஞ் சிறப்பி னிசைசிறந்
தொருபான்
முழவுக்கண் டுயிலாது முடுக்கரும் வீதியும்
விழவுக்களி சிறந்த வியலு ளாங்கட்

காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா
மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னொ
டில்வளர் முல்லை மல்லிகை மயிலை
தாழிக் குவளை சூழ்செங் கழுநீர்
பயில்பூங் கோதைப் பிணையலிற்
பொலிந்து
காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட்
டமர்ந்து
நாண்மகி ழிருக்கை நாளங் காடியிற்
பூமலி கானத்துப் புதுமணம் புக்குப்
புகையுஞ் சாந்தும் புலராது சிறந்து
நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரதரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
விளிவாய் வண்டினொ டின்னிள
வேனிலொடு மலய மாருதந் திரிதரு மறுகிற்
கருமுகில் சுமந்து குறுமுய லொழித்தாங்
கிருகருங் கயலோ டிடைக்குமி ழெழுதி

* இறவோருணாக்குமெனவும் பாடம்.

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

யங்கண் வானத் தரவுப்பகை யஞ்சித் திங்களு மீண்டுத்
திரிதலு முண்டுகொ னீர்வாய் திங்க ணீணிலத் தமுதின்
சீர்வாய் துவலைத் திருநீர் மாந்தி
மீனேற்றுக் கொடியோன் மெய்பெற வளர்த்த
வான வல்லி வருதலு முண்டுகொ
விருநில மன்னற்குப் பெருவளங் காட்டத் திருமகள்
புகுந்ததிச் செழும்பதி யாமென வெரிநிறத் திலவமு
முல்லையு மன்றியுங் கருநெடுங் குவளையுங் குமிழும்
பூத்தாங் குள்வரிக் கோலத் துறுதுணை தேடிக் கள்ளக்
கமலந் திரிதலு முண்டுகொன் மன்னவன் செங்கோன்
மறுத்த லஞ்சிப் பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்ற
மாண்மையிற் றிரிந்துத னருந்தொழி றிரியாது
நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப் பண்மொழி
நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப் பெண்மையிற் றிரியும்
பெற்றியு முண்டெண வுருவி லாள னொருபெருஞ் சேனை
யிகலம ராட்டி யெதிர்நின்று விலக்கியவ
ரெழுதுவரி கோல முழுமெயு முறீஇ விருந்தொடு புக்க
பெருந்தோட கணவரொ டுனுறைவு மரீஇ
யொழுக்கொடு புணர்ந்தவடமீன் கற்பின் மனையுறை
மகளிர்
மாதர்வாண் முகத்து மணித்தோட்டுக் குவளைப்
போது புறங்கொடுத்துப் போகிய செங்கடை விருந்திற்
றீர்ந்தில தாயின் யாவது

மருந்துந் தருங்கொலிம் மாநில வரைப்பெனக் கையற்று
நடுங்கு நல்வினை நடுநா
ளுள்ளக நறுந்தா துறைப்பமீ தழிந்து கள்ளுக
நடுங்குங் கழுநீர் போலக்
கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு முண்ணிறை
கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன வெண்ணுமுறை
யிடத்தினும் வலத்தினுந் துடித்தன விண்ணவர்
கோமான் விழவுநா ளகத்தென.





## சிலப்பதிகாரம்.

க - சு. அலைநீ ராடை மலைமுலை யாகத்
தாரப்பே ரியாற்று மாரிக் கூந்தற்
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை
புதையிருட் படாஅம் போக நீக்கி
யுதய மால்வரை யுச்சித் தோன்றி
யுலகுவிளங் கவிரொளி மலர்கதிர் பாப்பி

இ - ள். கடலாகிய ஆடையினையும் மலையாகியமுலையினையும் அம்முலையாகத்துப் பெரிய யாறாகிய ஆரத்தினையும் மாரியாகிய கூந்தலினையுமுடைய இடமகன்ற பரப்பினையுடைய *அரசுகெடுத்தலம்வரும் நிலமடந்தை அல்லற்காலைப் பசந்து கூ0 வாரப் பனித்துப் போர்த்த இருளாகிய படாத்தைத் தன் கதிர்க்கைகளானீக்கி அவி ரொளி உதயமால்வரையுச்சிக்கட்டோன்றி

விரிந்தகதிர்களைப்பரப்பவென்க.

மலை - பொதியிலும், இமயமும். இவற்றைச் சாதியொருமையாற்கூறினர்.

"பொதியிலு மிமயமும் புணர்மலை யாக" என்றார்கதையினும். ஆரப்பேர்யாற்று -

பேர்யாற்றாரத்தெனப் பாடமாற்றுக. ஆரம் - முத்துவடம். மாரி - முகில். அகன் ரூ பரப்பு - வினைத்தொகை.
புதைத்தல் - போர்த்தல் ; மலைநாட்டுவழக்கு. போக -

அகல. உலகுவிளங்கவிரொளி - உலகுவிளங்குதற்குக்காரணமாகத் தான்விளங்கு

மொளி ; ஆவது ஞாயிறு. மலர்தல் - விரிதல். பரப்பி - பரப்பவெனத்திரிக்க.

வாளாது மண்மடந்தையென்னாது கண்ணகன்பரப்பின் மண்ணகமடந்தையென்று

மிகுத்துக்கூறினர், அத்தன்மையாளைப் போர்த்த நீலப்படாத்தைத் தன்றேசினால்

௨௦ நீக்கிய ஒளியெனற்கு. எனவே செம்பியன்மரபுயர்ச்சி கூறியவாறாயிற்று

படாத்தைநீக்கித் தோன்றிப் பரப்பவென்க.

எ. வேயாமாடமும—இ - ள். நிலாமுற்றமும்,

எ. வியன்கல.கிருக்கையும் — இ - ள். வேற்றுமைப்பட்ட அணிகலம்

பெய்த சாக்கறையும்,

௨௫ வியன் - மிகுதியுமாம்.

அ. மான்கட் காலதர் மாளிகை யிடங்களும்

இ - ள். மானின்கண்போலக் கோணஞ்செய்த சாளரங்களையுடைய மாளி

கையிடங்களும்,

காலதர் - சாளரம்.

௩௦ க௯ - ௬௦. கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவன ரிருக்கையும்

இ - ள். புகார்முகப்பக்கங்களில்
தம்மைக்காண்போர்கண்களை மேற் போக
விடாமற்றடுக்கும் பயன் தொலைதலையறியாத
மிலேச்சரிருக்குமிடங்களும்,

௬௧ - ௬௨. கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
௩௫ கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும்

---

* இங்கே தந்துரைத்தவற்றை
அடிகளிற்காண்க.
அக்கிமாலைச்சிறப்புச்செய்காதை [அ-டு-௯-ம்]

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

௧௨ள

இ - ள். மரக்கலந்தரும் செல்வப்பொருட்டால் தாம்பிறந்த
நிலத்தைவிட்டுப் போந்த பரதேசிகள்பலரும்
ஒருநிலத்தாரைப்போலக் கலந்து செறிந்திருக்கும் அலைவாய்க்கரை
யயிருப்பும்,

௧௩. வண்ணமும்—இ - ள். தொய்யிற்குழம்பு முதலியவும்,
எழுதுவண்ணமுமாம்.

கங. சுண்ணமும்—இ - ள். பூசுசுண்ணமும்,

கங. தண்ணறுஞ் சாந்தமும—இ - ள். குளிர்ந்த நறிய பசுங்கூட்டும்,

கச. பூவும்—இ - ள். விடுபூத் தொடைப்பூக் கட்டுப்பூவென்னும் மூவகைப் பூவகையும்,

கச. புகையும்—இ - ள். புகையுறப்பும்,

கዐ

ஆவன : *"நேர்கட்டி செந்தேனிரியாசம் பச்சிலை, யார மகிலுறப்போடாறு" எனவிவை.

கச. மேவிய விரையும்—இ - ள். தம்மிற்பொருந்திய விரையும்,

ஆவன : †"கோட்டந் திருக்கந் தகர மகிலார, மோட்டிய வைந்தும் விரை" எனவிவை.

கூ

கரு. பகர்வனர் திரிதரு நகர வீதியும்

இ - ள். இவற்றை விற்பவராய்த் திரிதருதலைச்செய்யும் நகரத்தெருவுமென்க.

மாடமும், இருக்கையும், இடங்களும், இருக்கையும், வளைப்பும், வண்ணமுதல் விரையீறாயுள்ளனவற்றை விற்பவராய்த் திரிதருதலைச்செய்யும் நகரத்தெருவு மென்க.

* உ௦

கசு - கஎ. பட்டினு மயிரினும் பருத்தி நூலினுங்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையும்

இ - ள். பட்டுநூலானும் எலிமயிரானும் பருத்திநூலானும் நுண்ணியதொழில்களை ஊசியாற் பிணிக்கும் பட்டுச்சாலியரிருக்குமிடங்களும்,

‡அச்சுக்கட்டிக ளென்பாருமுளர். காருகத்தொழில் இருவகைத்து ; §"பரு உடு த்திநூல் பட்டுநூ லமைத்தாடை யாக்கலுஞ், சுமத்தலு மகழ்தலுங் காருகவினைத் தொழில்" என்றாராகவின். இவற்றுள் ஈண்டுக் கூறியோர் முன்னையோர்.

கஅ - உக. ஆரமு மகிலுந் தூசுந் துகிரு
மாசறு முத்து மணியும் பொன்னு
மருங்கல வெறுக்கையோ டளந்து கடையறியா

௨௦ வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்

---

* "கோட்டி சேக்தே ணிரியாசக் கர்ப்பூர, மார மகிலுறுப்போ ரைந்து" வெனக்காட்டுவர் நச்சினார்க்கினியரும், இந்நூல் அரும்பதவுரையாசிரியரும்.

† கொட்டமெனவும் ஒட்டியவெனவும் பாடங்கூறுவதுமுண்டு.

‡ அச்சுக்கொட்டிகளெனவும் பிரதிபேதமுண்டு.

§ திவாகரம் கஉ-வது.



இ - ள். சந்தனமும் அகிலும் பட்டும் பவளமும் குற்றமற்ற முத்தும் ஒழிந்த

மணிகளும் பொன்னுமாகிய இவற்றைப் பொற்பணியோ டே இலக்கங்காண்போர

ஒரெண்ணினும் எண்ணிக் கடைகாணவரிய வளம் தம்மிடத்தோறும் மயங்கப்பட்

டவைவற்றையுடைய இடமகன்ற மறுகும்,

௫ உஉ - உரு. பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியும

இ - ள். பகுதிவேறுபடப் பிரித்த முதிரைமுதலிய பண்டத்தோடு எண்வகைக்

கூலமும் குவித்துவிற்கும் கூலக்கடைத்தெருவும்,

எண்வகைக்கூலமாவன : " நெல்லுப் புல்லு வரகுதினை சாமை, யிறுங்கு கூ ௦ *தோரையொடு கழைவிளை நெல்லே" எனவிவை. இனிக் கூலம் பதினெண

வகைத்தென்பர் கூத்தநூலாசிரியர் ; என்னை ? †" பதினெண் கூலமு முழவர்க்கு

மிகுக" என்றாராகலின் ; பலசரக்கென்பாருமுளர்.

உச. காழியர்—இ - ள். பிட்டுவாணிகரும்,

வண்ணருமாம் ; ‡" காழியர்,'கௌவைப் பரப்பின் வெவ்வுவர்ப் பொழிப்ப" கூ௬ என்றார் அகப்பாட்டினும்.

உச. கூவியர்—இ - ள். அப்பவாணிகரும்,

§" காரகற் கூ வியன் பாகொடு பிடித்த" என்றார் பெரும்பாணாற்றினும்.

உச. கண்ணொடை யாட்டியர்—இ - ள். கள்ளைவிற்கும் வலைச்சியரும்,

நொடை - விலை , ||"மீனொடுத்து நெற்குவை" என்றார் புறப்பாட்டினும்.

---

* தோரையிராகியெண்கூலமெனவும் பாடம்.

† மதிவாணர்நாடகத்தமிழ்நூல்.

‡ அகநானூறு, களிற்றியானைநிரை, அகூ. " தெறுகதிர் ஞாயிறு நடுநின்று காய்

தலி, னுறுபெயல் வறந்த வோடுதேர் நனந்தலை, யுருத்தெழு குரல குடுமிச் சேவல,

புல்சாய் விடாகம் புலம்ப வாய, கல்லெறி யிசையி னிரட்டு மாங்கட், சிள்வீடு

கறங்குஞ் சிறியிலை வேலத், தூழுறு விளைநெற் றுதிரக் காழியர், கௌவைப் பரப்

பின் வெவ்வுவர்ப் பொழிப்பக், களரி பரந்த கன்னெடு மருங்கின், விளரூன் றினற

வீங்குசிலை மறவர், மைபடு திண்டோண் மவிர வாட்டிப், பொறைமலி கழுதை

நெடுநிரை தழீஇய, திருந்துவாள் வயவ ரருந்தலை துமித்த, படுபுலாக் கமழு ஞாட்

பிற் றுடியிகுத், தருங்கலந் தெறுத்த பெரும்புகல் வலத்தர், விலங்கெழு குறும்பிற்

கோண்முறை பகுக்குங், கொல்லை யிரும்புன நெடியவென் றூது, மெல்லென்

சேவடி மெலிய வேக, வல்லுநள் கொல்லோ தானே தேம்பெய், தளவுறு தீம்பா

லலைப்பவு முண்ணு, ளிடுமணற் பந்தரு ளியலு, நெடுமென் பணைத்தோண் மாஅ

யோளே'' எ - து. மகட்போக்கிய செவிலிசொல்லியது. இப்பாட்டினுட் காழிய

ரென்றது வண்ணார. மதுரைக் காஞ்சிப்பல்லவனார் பாடியது.

§ பத்துப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, ௯௭௭.

|| புறநானூறு, ௯௪௯.

## ௫.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

உரு. மீன்விலைப் பரதவர்—இ - ள். மீன்விலையையுடைய பரதவரும்,

பரதவர் - பட்டினவர்.

உரு. வெள்ளுப்புப் பகருநர்—இ - ள். உமணரும்,

உமட்டியருமாம்; அளவருமாம்.

உசு. பாசவர்—இ - ள். *இலையமுதிடுவோரும்,

அன்றிக் கயிறுதிரித்து விற்பாருமாம்; பச்சிறைச்சி சூட்டிறைச்சி விற்பாருமாம்.

உசு. வாசவர்—இ - ள். பஞ்சவாசம்விற்பாரும்,

அவை "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங், கற்பூரஞ் சாதியோ டைந்து" எனவிவை.

கo

உசு - உஎ. பன்னிண விலைஞரோ
டோசுநா செறிந்த வூன்மலி யிருக்கையும்

இ - ள். ஆட்டுவாணிகருடனே பரவருஞ் செறிந்த வூன்மிக்க களும்,

இருப்பிடங் ஓசுநர் எண்ணெய்வாணிகருமென்ப.

உஅ. கஞ்சகாரரும்—இ - ள். வெண்கலக் கன்னரும்,

உஅ. செம்புசெய குநரும்—இ - ள். செம்புகொட்டிகளும்,

உகூ. மரங்கொ றச்சரும்—இ - ள்.

மரத்தைவெட்டுந்தச்சரும்,

கொல்லல் - வெட்டல்.

உகூ. கருமகைக் கொல்லரும்—இ - ள். வலிய

கையையுடைய கொல் உ௦ லரும்,

கருங்கை இருவகைத்து ; என்னை? "கொன்றுவாழ் தொழிலினும் வன் பணித் தொழிலினுங், கன்றிய தொழிற்கை கருங்கை யெனப்படும்" என்றாராகலின். ஈண்டு வலிய கையையுடைய கொல்லருமென்பதாயிற்று.

௩௦. கண்ணுள் வினைஞரும—இ - ள். சித்திரகாரிகளும், உ௫

௩௦. மண்ணீட் டாளரும்—இ - ள். சிற்பாசாரிகளும், அன்றிச் சுதையாற் பாவையுள்ளிட்டன பண்ணுவாரென்றுமாம் ; குயவரு மென்ப. மண் - ஈண்டுச் சுதை ; ‡"மண்ணோ டியைந்த மரத்தனையா" என்றாராகலின்.

௩க. பொன்செய் கொல்லரும்—இ - ள். உருக்குத்தட்டாரும்,

௩௨. நன்கலந் தருநரும்—இ - ள். இரத்தினப்பணித்தட்டாரும்,

---

* இலையமுது - வெற்றிலை.

† கண்ணுள்வினைஞரென்பதற்கு நோக்கினார் கண்ணிடத்தே தந்தொழிலை நிறுத்துவோரென்பர் நச்சினார்க்கினியர். [பத்துப்பாட்டு ; உகஎ-ம் பக்கம்.]

‡ திருக்குறள், கண்ணோட்டம், ௬.





௩௩. துன்ன காரரும்—இ - ள். *சிப்பியரும்,

௩௪. தோலின் றுன்னரும்—இ - ள். உறைகாரரும், பறம்பர்முதலாயினரும்,

௩௫ - ௩௬. கிழியினுங் கிடையினுந் தொழில்பல

பெருக்கிப் ரு பழுதில்செய்வினைப் பால்கெழு மாக்களும்

இ - ள். கிழி கிடையென்பவற்றாற் புட்பம் வாடாமாலை பொய்க்கொண்டை

முதலியஉருப்பிறக்குந்தொழில்களை மிகுத்துக்காட்டிக் குற்றமற்ற கைத்தொழிலால்

வேறுபட்ட இயல்பையுடையோரும்,

கிழி - சீலை. கிடை - கிடேச்சு. இனி, கிழியாற் படிமை படமுதலியவும், ௯0 கிடையால் விலங்கு பறவை பூ பூங்கொத்துமுதலியவும் அமைப்போருமாம்.

௩௫ - ௩௭. குழலினும் யாழினுங் குரன்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டு
மரும்பெறன் மரபிற்

பெரும்பா ணிருக்கையும்

இ - ள். துளைக்கருவியானும் நரப்புக்கருவியானும் குரன்முதலாயுள்ள எழிசை ௧௫ யினையும் ச ரி க ம ப த நி யென்னும் எழெழுத்தினையும் மூவகைவங்கியத்தினும்

நால்வகையாழினும்பிறக்கும் பண்களுக்கு இன்றியமையாத மூவேழுதிறத்தையுங்

குற்றமின்றாக இசைத்துக்காட்டவல்ல பெறுதற்கரிய இசைமரபையறிந்த குழலர்

பாணர்முதலாய பெரிய இசைக்காரரிருக்குமிடங்களுமென்க.

உம்மையால் எழுத்துக்களுங்கொள்ளப்பட்டன.

20 ௩௮ - ௩௯. சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு

மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமும்

இ - ள். ஒழுக்கத்திற்சிறியராய்ச் சிறுதொழிலைப் பிறர்க்குச்செய்து அதனன்
வரும் பொருளையுண்ணும் கைவினையாளரோடே முற்கூறிய யவனர்முதல் பெரும்
பாணீருயுள்ளாரோடு குற்றமின்றிவிளங்கும் மருவூர்ப்பாக்கமுமென்க.

உரு சO. கோவியன் வீதியும்—இ - ள். இராசப்பெருந்தெருவும்,
செண்டுவெளியென்பாருமுளர்.

சO. கொடித்தேர் வீதியும்—இ - ள். கொடியணிந்த தேரோடும் விழா
வீதியும்,

சக. பீடிகைத் தெருவும்—இ - ள். கடைத்தெருவும்,

௩0 சக-சஉ. பெருங்குடி வாணிகர், மாட மறுகும்
இ - ள். †பெரிய குடிப்பிறப்பையுடைய வாணிகரது மாடமாளிகைத்
தெருவும்,

சஉ. மறையோ ரிருக்கையும்—இ - ள். பஞ்சக்கிராமிகளிருக்குமிடமும்,

---

* சிப்பியர் - தையற்காரர்.

† பெருங்குடிவாணிகர்-மூவகைவாணிகருள் ஒருபாலார்.

"பெருங்குடி வாணி
கன் பெருமடமகளே" என்றார் முன்னும்.

# ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கடுக

சரு - சடு. வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை
யாயுள் வேதருங் காலக் கணிதரும்
பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையும்

இ - ள். உழவின்மேல்விரும்புங் குடிகளோடும் உழவரோடும் மருத்துவ நூலோரும் சோதிடநூலோரும் வேறுவேறு வகைப்படத்தெரிந்த பலமுறைமை ே யோடிருக்கும் இருப்பிடங்களும்,

வீழ்குடி - காணியாளர், *"பகடு புறந்தருநர் பார மோம்பிக், குடிபுறந் தருகுவை யாயின்" என்றார் பிறரும். யாவரும் விரும்புங்குடியென்றுமாம்; †"உழுதுண்டு......செல்பவர்" என்பதனாற்கொள்க. குடியொடும் உழவரொடுமென்க. அன்றி உழவில்விரும்புங்குடியெனவுமாம்; "உழவினிற் காமுற்று வாழ்தல்" என்று ஆ ஓ ராகலின். வேளாண்‡சாமந்த ரென்பாருமுளர்.

ே

சசு. திருமணி குயிற்றுநர்—இ - ள். முத்துக்கோப்பாரும், வரிசையானவேகடிகளுமாம்.

சசு - சஎ. சிறந்த கொள்கையோ
டணிவளை போழுந ரகன்பெரு வீதியும்

கே

---

* புறநானூறு, ௩௫: "ளரியிரு முந்நீ ரேணி யாக, வளியிடை வழங்கா வானஞ் சூடிய, மண்டிணி கிடக்கைத் தண்டமிழ்க் கிழவர், முரசுமுழங்கு தானை மூவ ருள்ளு, மரசெனப் படுவது நினதே பெரும,

வலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினு, மிலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினு, மந்தண் காவிரி வந்துகவர் பூட்டத், தோடுகொள் வேலின் றோற்றம் போல, வாடுகழைக் கரும்பின் வெண்பூ நுடங்கு, நாடெனப் படுவது நினதே யத்தை, யாங்க, நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே, நினவ கூறுவ லெனவ கேண்மதி, யறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து, முறைவேண்டு பொழுது பதனெளி யோரீண், டுறைவேண்டு பொழு திற் பெயல்பெற் றோரே, ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ, மாக விசும்பி னடுவுநின் றாங்குக், கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை, வெயின் மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ, வெளிற்றுப் பனந்துணியின் வீற்றுவீற்றுக் கிடப்பக், களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை, வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப், பொருபடை தரூஉங் கொற்றமு முழுபடை, யூன்றுசான் மருங்கி னீன்றதன் பயனே, மாரி பொய்ப் பினும் வாரி குன்றினு, மியற்கை யல்லது செயற்கையிற் றோன்றினுங், காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞால, மதுநற் கறிந்தனை யாயி னீயு, நொதும லாளர் பொது மொழி கொள்ளாது, பகடு புறந்தருநர் பார மோம்பிக், குடிபுறந் தருகுவை யாயி னின், னடிபுறந் தருகுவ ரடங்கா தோரே.'' திணை - பாடாண்டிணை. துறை - செவி யறிவுறூஉ. சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை வெள்ளைக்குடிநாக னார் பாடிப் பழஞ்செய்க்கடன் வீடுகொண்டது.

† திருக்குறள், உழவு, ௩. "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றொழுதுண்டு பின்செல் பவர்.''

றெல்லாச்,

‡ சாமந்தர் - சிற்றரசர்.

இ - ள். தமக்குச்சிறந்த கோட்பாட்டால் அழகிய
கின்ற அகன்ற பெரிய வீதியும்,
வளைகளையறுப்பாரும் வாழ்
பொழுகரென்றது சங்கறுப்பாரை. அணிவளை -
வினைத்தொகையுமாம்:
வீழ்குடிமுதல் பொழுகரீருயுள்ளவர் மிக்கசெருக்கோடி
ருக்கும் வீதியுமெனி ஒ ளுமமையும்.
சஅ - ௫. சூதர் மாகதர்......வகைதெரியிருக்கையும்
சஅ. சூதர்—இ - ள். நின்றேத்துவார்,
சஅ. மாகதர்—இ - ள். இருந்தேத்துவார்,
சஅ. வேதாளிகரொடு—இ - ள். வைதாளியாடுவார்
என்று சொல்லப் ௬௦ பட்ட இவரோடே,
மிட்டைய கண்டருமென்ப.
சகூ. நாழிகைக் கணக்கர்—இ - ள். கடிகையார்,

௯௫
அவர் அரசனுக்குச் சென்றநாழிகைக்குக் கவிசொல்லுவார் ; "பூமென் கணை
யும் பொருசிலையுங் கைக்கொண்டு,காமன் றிரியுங் கருவூரா - யாமங்க, ளொன்றுபோ
யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையு, மொன்றுபோ யொன்றுபோ யொன்று"
என. நாழிகைவட்டிவிடுவாருமென்ப. *"சூத ரேத்த மாகதர்
துவல, வேதா ளிக
ரொடு நாழிகை யிசைப்ப" என்றார் பிறரும்.

சகூ. நலம்பெறு கண்ணுளர்—இ - ள். தாம்
கொண்ட கோலத்தானும்
கூத்தானும் நலம்பெறுஞ் சாந்திக்கூத்தர்,

௨௮ என்னை? "வாசிகை வைத்து மணித்தோ டணியணிந்து, மூசிய சுண்ண முகத் தெழுதித் - தேசுடனே, யேந்துசுடர் வாள்பிடித்திட் டீசனுக்குங் காளிக்குஞ், சாந் திக்கூத் தாடத் தரும்." என்பதனுனறிக. மதங்கரென்பாருமுளர்.

ருo. காவற் கணிகையர்—இ - ள். களத்தாடுங் கூத்திகள்,

இராக்கிடைப் பெண்டுகளென்பாருமுளர்.

௨ரு ருo. ஆடற்கூத்தியர்—இ - ள். அகக்கூத்தாடும் பதியிலார்,

ருக. பூவிலை மடந்தையர்—இ - ள். அற்றைப்பரிசங்கொள்வார்,

ருக. ஏவற் சிலதியர்—இ - ள். மடைப்பள்ளியாரடியார்,

ருஉ. பயிற்றொழிற் குயிலுவர்—இ - ள். தோற்கருவி யிசைப்பார்,

ருஉ. பன்முறைக் கருவியர்—இ - ள். *ட்டுவார், படைக்கும் உற்சவத்துக்குங் கொ யாழ்முதலாகிய கரப்புக்கருவிகளையுடையாருமென்ப.

ருங. நகைவே ழம்பரொடு—இ - ள். சாரமாணிகளோடே, சிரிக்கும்பரியாசகருடனுமென்ப.

---

* பத்துப்பாட்டு, மதுராக்காஞ்சி, சுஎo - சுஎக.

# ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

௫௩. வகைதெரி யிருக்கையும்—இ - ள். சூதர்முதல் வேதாளிகரோடும் நாழிகைக்கணக்கர்முதல் வேழம்பரோடும் எண்ணப்பட்ட இவர்கள் தத்தம் இனத் தின்வகைதெரிந்த இருப்பிடங்களுமென்க.

௫௪ - ௫௬. கடும்பரி கடவுநர் ........ பெரும்பா யிருக்கையும்

௫௪. கடும்பரி கடவுநர்—இ - ள். கடிய பரிகளைக் கடவுவாராகிய அச்சுவ ரூ வாதியர்,

௫௪. களிற்றின் பாகர்—இ - ள். யானைப்பாகர், இன் - சாரியை.

௫௫. நெடுந்தே ரூருநர்—இ - ள். தேர்ப்பாகர்,

௫௫. கடுங்கண் மறவர்—இ - ள். சினக்கண்ணையுடைய காலாட்படைத் த ம தலைவர்,

கடுமை - சினம். இனி முன்னர்க்கூறிய முப்படைக்கும் தறுகண்மையை யுடைய வீரரென்றுமாம்.

௫௬. இருந்துபுறஞ் சுற்றிய பெரும்பா யிருக்கையும் இ - ள். என்று கூறப்பட்ட வீரர்கள் அரசன்கோயிலைச் சூழவிருக்கும் பெரிய க ஒ பரந்த இருப்புக்களுமென்க. *

---

* "பன்மீன் விலைஞர் வெள்ளுப்புப் பகருநர், கண்ணெடை யாட்டியர் காழியர் கூவியர், பைந்நிண விலைஞர் பாசவர் வாசவ, ரென்னுகர் மறுகு மிருங்கோ வேட்களுஞ், செம்பு செய்நருங் கஞ்ச காரரும், பைம்பொன் செய்நரும் பொன் செய் கொல்லரு, மரங்கொ றச்சரு மண்ணீட் டாளரும், வரந்தா வெழுதிய வோ விய மாக்களுந்,

தோலின் றுன்னருந் துன்ன வினைஞரு, மாலைக் காரருங் காலக் கணிதரு, நலந்தரு பண்ணுத் திறனும் வாய்ப்ப, நிலங்கலங் கண்ட நிகழக் காட்டும், பாண ரென்றிவர் பல்வகை மறுகும், விலங்காம் பொரூஉம் வெள்வளை போழ்நரோ, டிலங்குமணி வினைஞ ரிரீஇய மறுகும், வேத்தியல் பொதுவியல் பென்றிவ் விரண்டின், கூத்தியல் பறிந்த கூத்தியர் மறுகும், பால்வே றாக வெண்வகைப் பட்ட, கூலங் குவைஇய கூல மறுகு, மாகதர் சூதர்வே தாளிகர் மறுகும், போகம் புரக்கும் பொதுவர்பொலி மறுகுங், கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை, வண்ண வறுவையர் வளந்திகழ் மறுகும், பொன்னுரை காண்போர் நன்மனை மறுகும், பன்மணி பகர்வோர் மன்னிய மறுகு, மறையோ ரருந்தொழில் குறையா மறுகு, மரசியன் மறுகு மமைச்சியன் மறுகு, மேனைப் பெருந்தொழில்செ யேனோர் மறுகு, மன்றமுங் கவலையுஞ் சந்தியுஞ் சதுக்கமும், புதுக்கோ ளியானையும் பொற்றேர்ப் புரவியுங், கதிக்குற வடிப்போர் கவின்பெரு வீதியுஞ், சேணோங் கருவி தாழ்ந்தசெய் குன்றமும், வேணவா மிகுக்கும் விரைமரக் காவும், விண்ணவர் தங்கள் விசும்பிட மறந்து, நண்ணுதற் கொத்த நன்னீ ரிடங்களுஞ், சாலையுங் கூடமுந் தமனியப் பொதியிலுங், கோலங் குயின்ற கொள்கை யிடங்களுங், கண்டு மகிழ்வுற்றுக் கொண்ட வேடமொ, டந்தர சாரிக ளமர்ந்தினி துறையு, மிந்திர விகார மெனவெழில் பெற்று, நவையறு நாத னல்லறம் பகர்வோ, ருறையும் பள்ளி புக் கிறைவனை நல்லான்'' என்றார் மணிமேகலையிலும்; உஅ வது புக்ககாதை.

கச்சிமாநகர்

ருள - ருஅ. பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்
இ - ள். கோவியல்வீதி முதலாக இருக்கையிறுதியாகிய இருப்பிடங்களை
யுடைய பெருமையமைந்த சிறப்பினையுடைய
பெரியோர்திரண்ட பாடலமைந்த சிறப்பினையுடைய
பட்டினப்பாக்கமுமென்க.

ருகூ - கூஎ. இருபெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியி னிடைநில மாகிய
கடைகா லியாத்த மிடைமரச் சோலைக்
கொடுப்போ ரோதையுங் கொள்வோ ரோதையு
கூ० நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியிற்
சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென, அந்நாள்
வெற்றிவேன் மன்னற் குற்றதை யொழிக்கெனத்
தேவர் கோமா னேவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகை

சரு இதில் "சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென, அந்நாள்" என்பதனைப்
புழுக்கன்முதலிய சொரிந்தென்பதனோடு முடிக்க.
இ - ள். பெரியவேந்தரிருவர் போர்குறித்து வந்துவிட்ட பாசறையிருப்புக்கு
நடுப்பட்டநிலம் போர்க்களமானாற்போல முற்கூறிய

மருவூர்ப்பாக்கமும் பட்டினப்
பாக்கமுமென இரண்டுகூறுபட்ட ஊர்க்குநடுப்பட்ட
பொதுநிலமாகிய நாளங் ௬௦ காடி ; அஃது எத்தன்மையதாகிய
நாளங்காடியெனின், நிரைபடச்செறிந்த சோலை
யின்மரங்களிற் கால்களே தூணாகக்கட்டப்பட்ட
கடைகளையுடைய கொடுப்போர்
கொள்வோரோதை இடையறாது நிலைபெற்ற
நாளங்காடியென்க. அந்நாளங்
காடித்தெருவின்கண்ணே பூதத்து வாயிற் பீடிகையென்க.
அஃது எத்தன்மைய
தாகிய பூதமெனின், வெற்றிபொருந்திய வேலையுடைய
முசுகுந்தனென்னும் மன்னவனுக்குவரும் இடையூற்றை
ஒழிப்பாயெனத் தேவர்கோன் ஏவுதலானே அத்தேவ
ருலகினின்றும் போந்து அங்காண்முதலாகப் பலிகொ
ண்டுபோதும் *பூதமென்க.
அப்பூதத்து நாளங்காடிக்கட் பலிபீடிகையிடத்தேயென்க.
அல்லங்காடியுமுண்டாதலின், இதனை
நாளங்காடியென்றார்.

சூஅ – எரு. புழுக்கலு நோலையும் விழுக்குடை மடையும்
௬௦ பூவும் புகையும் பொங்கலுஞ் சொரிந்து
துணங்கையர் குரவைய ரணங்கெழுந்
தாடிப்

---

* இந்தப்பூதம் முசுகுந்தன்பொருட்டுத்
தேவருலகினின்றும் இந்திரனேவ

லான் இக்ககரில்வந்து பலியுண்டிருத்தலே, [கடலாடுகாதை எ - கரு.] "கடுவிசை

அவுணர் கணங்கொண் டண்டிக், கொடுவரி யூக்கத்துக்
கோனகர் காத்த, தொடு
கழன் மன்னற்குத் தொலைந்தன ராகி, நெஞ்சிருள் கூர
நிகர்த்துமேல் விட்ட, வஞ்
சம் பெயர்த்த மாபெரும் பூதந், திருந்துவே லண்ணற்குத் தேவ
னேவ, விருந்தி
பலி யுண்ணு மிடனும்" என்பதனானும், இதன் உரையானும் உணர்க.

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கரு.ரு

பெருநில மன்ன னிருநில மடங்கலும்
பசியும் பிணியும் பகையு நீங்கி
வசியும் வளனுஞ் சுரக்கென வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கு
மூதிற் பெண்டி ரோதையிற் பெயர

ெ

இ - ள். சித்திரைமாதத்துச் சித்திரைநாளிலே நிறைமதிசேர்ந்ததாக அக்கா
ளிலே காணிலிகளைப்போல வாய்சோர்ந்துரைக்கும் மாதர்க்கோலத்து பெண்டிர் அப்பீடிகைக்கண்ணே புழுக்கல்முதலியவற்றையுகுத்து

மறக்குடிப்

எம்மன்ன
னுடைய நிலமுழுதும் பசிமுதலியனநீங்கி
வசிமுதலியனசுரக்கவெனவாழ்த்தித் துணங்கையராய்க் குரவையராய்
அணங்கெழுந்தாடிக் கொக்கரிப்போடே பெயர கூ௬ வென்க.

புழுக்கல் - முதிரைப்பண்டம் ; அவரை துவரை முதலியன.
"புழுக்குவ புழுக்கல்" என்றாராகலின். நோலை - *எட்கசி.
விழுக்குடைமடை - நிணச் சோறு. பொங்கல் - கள்ளு ;
பொங்கற்சோறுமென்ப. துணங்கை - துணங்கைக் கூத்து ; என்னை ?
†"முடக்கிய விருகை பழுப்புடை யொற்றித் - துடக்கிய நடை கூடு
யது துணங்கை யாகும்" என்றாராகலின். இதனைச்
சிங்கியென்பாருமுளர். குரவை- கைகோத்தாடுங் கூத்து.
அணங்கெழுந்தாடி - தேவரேறியாடி. பகை - உட்பகை. வசி - மழை ;
‡"வசிதொழி லுதவ மாதிரங் கொழுவ" என்றா பிறரும் ; வசியும்
மாம். மாதர்க் கோலம் - கண்டு எவருங்காதலிக்கப்படும் ஒப்பனை.
வலவையின் - நாணிலிகளைப்போல ; §"வலவைக ளல்லாதார்"
என்றார் பிறரும் ; வல்லபத்தர உ௦ லென்பாருமுளர்.
மூதிற்பெண்டிர் - மறக்குடிமகளிர்.

சேர்த்ததாக அந்நாள் ஒளி கதிர்பரப்பாநிற்பப் புழுக்கல்
முதலியன பீடிகை யிலே சொரிந்து பெண்டிர் வாழ்த்தி ஆடிப்
பெயரவென்க.

இவர் அரசன்கோயில் அகப்பரிசாரராயமகளிர்.

எசு - அஅ. மருவூர் மருங்கின் மறங்கொள் வீரும்
உ௬
பட்டின மருங்கிற் படைகெழு மாக்களு
முந்தச சென்று முழுப்பலி பீடிகை
வெந்திறன் மன்னற குற்றதை யொழிக்கெனப்

பலிக்கொடை புரிந்தோர் வலிக்குவரம்
பாகெனக்
கல்லுமிழ கவணினர் கழிப்பிணிக் கறைத்தோற்
௩௦
பலவேற் பரப்பினர் மெய்யுறத் தீண்டி

---

* நோலை - எள்ளுருண்டையென்பர் அரும்பதவுரையாசிரியர்.

† திவாகரம், ஒன்பதாவது.

‡ மணிமேகலை, ௧௪ - வது பாத்திரமரபுகூறியகாதை.

§ நாலடியார், நன்றியில்செல்வம், ௮. "வலவைக ளல்லாதார் காலாறு சென்று, கலவைக ளுண்டு கழிப்பர் - வலவைகள், காலாறுஞ் செல்லார் கருனையாற் றுய்ப்பவே, மேலாறு பாய விருந்து."



யார்த்துக் களங்கொண்டோ ராமம ரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை
வெற்றி வேந்தன் கொற்றங் கொள்கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங
குயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன்
முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி

இ - ள். அந்தமுசுகுந்தன் இருவகைப் பாக்கத்தோரும் அக்காலத்துப் பூதத் திற்குப் பலிகொடுப்பதற்கு முன் பினென்று தந்தமில் முந்துகூற வலியவுரவோர் நெருங்கிச்சென்று தம்மைத் தாமேயிடும்பலியை உண்ணும்பீடிகையிலே மன்ன ற்கு உற்றதை ஒழிப்பாயாகெனப் பூதத்திற்குச்சொல்லிப் பலிகொடுத்தலைப் புரிக்

தோர் அப்பலிக்கும் வலிக்கும் வரம்பாகக்கடவரென அவ்வரசன்குழுவும் ஆயமும் அக்காலத்தே நிருமித்தலாலே இக்காலத்து வீரரும் மாக்களும் கவணினராய்த் தோலோடு வேற்பரப்பினராய் அமர்க்களப்பரப்பிலே உடற்கரித்து ஆர்த்துக் களங் கொண்டவீரர் பார்த்தோரை அச்சமுறுத்துக் கடைசிவந்த சுடுங்கொள்ளிபோலும் பார்வையையுடைய தமது பசுந்தலை வேந்தன் கொற்றங்கொள்கெனப் பேசும்படி அரிந்து ஒப்பித்துப் பீடிகையிலேவைத்த அப்பொழுதே அக்குறையுடல்கள் தமக்கு வாயின்மையின் தத்தந்தோளிற்பூண்ட மயிர்க்கண்முரசின்வாயால் உயிர்க்கடன் தந்தோம் ; கொண்மினென்று நின்று பலியூட்டியென்க.

கழி - ஊன். பிணி - பிணித்தல். கறை - கறுப்பு. தோல் - பரிசை ; *" மழை யென மருளும் பஃ றோல்" என்றாராகலின் ; கருங்கடகென்பாருமுளர். மெய்யுறத் தீண்டி - உடற்கரித்து. அழுவம் - பரப்பு. சூர்த்து - அச்சமுறுத்து. என்றது †" நீண்டபலி பீடத்தி லறுத்து வைத்த நெறிக்குஞ்சித் தலையைத்தன் னினமென் றெண்ணி, யா ண்டலைப்புள் ளருகணைந்து பார்க்கு மாலோ வணைதலுமச் சிரமச்ச முறுத்து மாலோ" என்றாற்போல்வரும். (விருத்திச்செய்யுள்.) சுழன்றென்பாருமுளர். சுடுநோக்கு - சுடுவதுபோலுநோக்கு. என்றது கொள்ளிக்கண். ‡"கண்ணுட் டியாற் சுட்டுநீ றாக்கி" என்றாற் பிறரும். கருந்தலை - பசுந்தலை. கலங்கொளவைத்தென்றது தமது அரிந்த தலையிற குலைந்தமயிரையுங் கோதிமுடித்துக் குருதித்திலகத்தையும் நுதலிலே அணிந்துவைத்தென்றவாறு; என்னை? §" மோடி முன்றலையை வைப்ப ரேமுடி குலைந்த குஞ்சியை முடிப்பரோ, யாடி நின்றுகுரு திப்பு துத்திலத மம்மு கத்தினி லமைப்பரே" என்பது. (கலிச் சக்கரவிருத்தி.) உருமு - இடி. மயிர்க்கண்முரசம் - புலியைப்பொருது கொன்றுநின்று சிலைத்துக் கோட்டுமண்

கொண்ட ஏறு இறந்தழி அதன் உரிவையை மயிர்சீவாமற் போர்த்தமுரசு; என்னை ? ||" புனைமருப் பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கனைகுர லுருமுச் சீற்றக் கதழ்விடை யுரிவை போர்த்த, துனைகுரன் முரசத் தானைத் தோன்

* புறநானூறு, கஎ.
† கலிங்கத்துப்பரணி.
‡ சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௧௫.
§ கலிங்கத்துப்பரணி.
|| சீவகசிந்தாமணி, முத்தியிலம்பகம், ௬௦௧.

## ரு.—இந்திரவிழ வூரெடுத்தகாதை.

[illegible] நிலத் தம்பி னென்று, னனைமல ரலங்கற் கண்ணி நந்தனுந் தொழுது சேர்ந்தான்" எனவும், "கொல்லேற்றுப் பசுந்தோல் சீவாது போர்த்த, மயிர்க்கண் முரச மோவல விரங்க" எனவும் சொன்னார்பிறரும். முரசொடுவான்பலியூட்டி - முரசத்தால் உயிர்ப்பலியூட்டி ; என்றது *" அடிக்கழுத்தி னுடன்சிரத்தை யரிவ ராலோ வரிந்தசிர மணங்கின்கைக் கொடுப்ப ராலோ, கொடுத்தசிரங் கொற்றவையைத் துதிக்கு மாலோ குறையுடலங் கும்பிட்டு நிற்குமாலோ" எனவும், †" மண்ணி னுளற வறுத்த தங்கடலை வைத்த பீடிகை வலங்கொள, விண்ணி னுயிதன் யாக சாலைதொறு மீள வுஞ்சிலர் மிறைப்பரே" எனவும்வரும் ; இவற்றாற்சொல்லியவை, ‡அவிப்பலியென்னும் புறப்பொருட்பகுதியும், காப்பியத்துக்கு அங்கமான நவச்சுவையுள்ளும் வீரச்சுவையவிரயமுமென்க.

வரம்பாகெனக் கவணினர் பரப்பினராய்த் தீண்டிக்

கொண்டோர் கருத்தலை கொள்கென வைத்து ஊட்டவென வினைமுடிக்க.

ஊட்டவெனத்திரிக்க.

இனி மூன்றாட் கரிகாலன் செய்தசெயல் கூறுவார்.

அ௯ - ௯௪. இருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச
செருவெங் காதலிற் றிருமா வளவன்
வாளுங் குடையு மயிர்க்கண் முரசு
நாளொடு பெயர்த்து நண்ணார்ப் பெறுகவிம்
மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப்
புண்ணியத் திசைமுகம் போகிய வந்நாள்

இ - ள். தமிழ்நாட்டெல்லையுள் தன்னோடு எதிர்த்துப்பொருமரசரை இரண்டு திசையினும்பெறாத கரிகாலன் போரிலே பேராசையுடையனாதலின், வடதிசை பெருந்திசையாதலிற் பகைபெறலாமெனக்கருதி ஆண்டுச்சேறற்குவிரும்பி வாளும் குடையும் முரசும் நாளொடுபெயர்த்து என்வலிகெழுதோள் இத்திசையினுமினும் நண்ணாரைப் பெறுவதாகவேண்டுமென்று தான் வழிபடுதெய்வத்தை மனத்தான் வணங்கி அவ்வடதிசையைநோக்கிப் போகிய அந்நாளிலென்க.

பொருநரை இருநிலமருங்கிற் பெறா வளவன் பெயர்த்துப் பெறுக என்றோ- ளெனப் போகிய அந்நாளென்க.

இருநிலமருங்கினென்பது இவன் ஆளும் நிலவெல்லைப் புறத்தென்பதாயிற்று ; ஆகவே மேற்கும் தெற்குமெனக்கொள்க ; என்றது சேர பாண்டியரை. இனி

---

* கலிங்கத்துப்பரணி.

† ,,

‡ புறப்பொருள் வெண்பாமாலை, வாகைப்படலம், ௩௦.
அவிப்பலியென்பது "வெள்வா ளமருட் செஞ்சோ றல்ல, துள்ளா மைந்த ருயிர்ப்பலி கொடுத்தன்று. வரலாறு : "சிறந்த திதுவெனச் செஞ்சோறு வாய்ப்ப, மறந்தரு வாள்ம றொன் னும் - பிறங்கழலு, ளாருயி ரென்னு மவிவேட்டா ராங்கஃதால், வீரியரெய் தற் பால வீடு."



இருநிலமருங்கினென்பதற்குத் தமிழ்ப்பூமி இருகூற்றிலெனினுமமையும். வாளும் குடையும் முரசும்பெயர்த்தல் - வாணாட்கோள், குடைநாட்கோள், முரசநாட்கோ ளென்பன. இவை நாட்கொண்டுபெயர்த்தல். இவற்றுள், வாணாட்கோடல் : *"செற்றார்மேற் செலவமர்ந்து, கொற்றவாணாட் கொண்டன்று." வரலாறு : "அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்ன, னெறிந்திலங் கொள்வா ளியக்க - மறிந் திகலிப், பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு, நன்பகலுங் கூகை நகும்." குடை நாட்கோடலென்பது, †"பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக், கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று." வரலாறு : "முன்னர் முர சிரங்க மூரிக் கடற்றானை, துன்னருந் துப்பிற் றொழுதெழா - மன்னர், குடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக், குடைநா ளிறைவன் கொள." முரசநாட்கோட லென்பது : "......... மாசற விதித்த வீங்கிது செயலே ." பிறவும் வந்தவழிக் காண்க.

மண்ணகமருங்கின் - இந்நிலவெல்லையுள். புண்ணியத்திசை - வடதிசை. முகம் - இடம்.

௬௫ - ௬௮. அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகைவிலக் கியதிப் பயங்கெழு மலையென
விமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்

கொடுவரி யேற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு

இ - ள். அங்ஙனம் பொருவாரைப்பெறவேண்டி வடதிசை சநோக்கிப் போ இன்றநாளி லே இமையவருறையும் இமயமலே பகையாகக் குறுக்கிட்டு விலக்கிற்றுக வின், ம னஞ்சலித்து மீள்கின்றவ ன் மடி தலின்றி மேலுஞ்செல்லமுயலும் என் னுசை மின்னிட்டொழிய இம்மலே எனக்குப் பகையாகக் குறுக்கிட்டு விலக்கிற் றென முனிந்து அதன்பிடரிடத்தே தனதுபுலியைப்பொறித்துத் தான்வேட்டது பெருத கோட்பாட்டால் மீள்கின்ற கரிகாலற்கென்க.

அசைவு - மடிதல். ஊக்கம் - மனவெழுச்சி ; முயற்சியுமாம். பிறக்கு - பிருதக்கென்னும் வடமொழிச்சிதைவென்க ; வேருகவென்றபடி. பிடர் - புறக்கழுத்து. தலே - இடம். ஏற்றி - பொறித்து. பிடர்த்தலேயேற்றியென்றது தன ேேடு எதிர்த்துவிலக்குதலின் அதனைப் புறங்காண்டற்கும் அதன்வடபாலும் தனது ஆணைசேறற்கும் சாத்தனருளால் தான்பெற்ற செண்டினுலே அதனை அடித்துத் திரித்துப் பொறித்து மறித்து நிறுத்தானெனவுணாக; என்னை ? ‡"செண்டு கொணடு கரி காலனொரு காலி விமயச் சிமைய மால்வரை திரித்தருளி மீள வதனைப், பண்டு நின்றபடி நிற்கவிது வென்று முதுகிற் பாய்பு லிப்பொறி குறித்தது மறித்த பொழுதே" எனவும், " கச்சி வளைக்கைச்சி காமக்கோட் டங்காவன், மெச்சி யினி திருக்கு மெய்ச்சாத்தன் - கைச்செண்டு, கம்பக் களிற்றுக் கரிகாற் பெருவளத்தான், செம்பொற் கிரிதிரித்த செண்டு" எனவுங்கூறினராகலின்.

---

* புறப்பொருள் வெண்பாமாலே, வஞ்சிப்படலம், ௬.

† " " ரு.

‡ கலிங்கத்துப்பரணி. "இலக்கு வேற்கரி காற்பெரு வளத்தோன், வுன்றி றற்புலி யிமையமால் வரைமேல் வைக்க வேகுவோன்" என்றார் பெரியபுராணத் திலும்.

## (ரு).—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கங.ரு

ரு.ரு - கoo. மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும்

இ - ள். கடலே அரணாகவுடைய வச்சிரநாட்டுக்கோன் தானிடக்கடவமுறை
மையில் திறையாகவிட்ட அவனது முத்தின்பந்தரும்,

" வேலி - அரண். வச்சிரநாடு - *சோணைக்கரை. இறை - திறை. கொற்றப்
பந்தர் - அவன்றனக்குக் கொற்றத்தான்வந்த பந்தர், அது மேற்கூறுப; அன்றி
அக் கொற்றவன்முன்னர் நிற்கும்பந்தரெனினுமமையும். இவன் †உதாசீனன்.

கoக - கoஉ. மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத் துக் கொடுத்த பட்டிமண்
டபமும்

இ - ள். வாட்போர் வாய்ப்புடையனாகிய மகதவேந்தன் பகையாற் பொருது
தாங்கமாட்டாது அப்பகையிடத்துத் தரப்பட்ட பட்டிமண்டபமும்,

பட்டிமண்டபம் - வித்தியாமண்டபம்;
‡ஓலக்கமண்டபமுமென்ப. புறம் -
இடம். இவன் சத்துரு.

௧0௩ - ௧0௪. அவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்

இ - ள். அவந்திநாட்டுவேந்தன் உவந்தனனுய்க்கொடுத்த மிகவுயர்ந்த தொழின்
மரபையுடைய வாயிற்றோரணமும்,

அவந்தி - உஞ்சை. தொழின்மரபு - "குலப்புடைவை" என்றாற்போலநின்றது.

இவன் மித்திரன்.

௧0௫ - ௧௧0. பொன்னினு மணியினும் புனைந்தன வாயினு
நுண்வினைக் கம்மியர் காணா மரபின
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு
மயன்விதித்துக் கொடுத்த மரபின வவைதா
மொருங்குடன் புணர்ந்தாங் குயர்ந்தோ ரேத்து
மரும்பெறன் மரபின் மண்டபம

இ - ள். இப்பந்தரும் மண்டபமும் தோரணமுமென்னுமிவை பொன்னாலும்
மணியாலுஞ்செய்யப்பட்டனவாயினும் நுண்ணிய தொழிலைவல்ல கம்மியராற்பண்
ணப்படாதன; ஆயின் இவை யாராற் பண்ணப்பட்டனவெனின், இவற்றை அக்
காலத்துக் கொடுத்த அம்மூவருடைய தொல்லோர் ஒரோர்காலத்து ஒரோவிடத்
துச்செய்த உதவிக்குக் கைம்மாறாக மயன்

நிருமித்துக்கொடுக்கப்பட்டன. இவை
ஒன்றற்கொன்று சேய்நாட்டனவாய்க் கூடப்படாதன ;
இவனுணையான் ஒருநாட்டு

* சோணை - ஓர் யாறு. சோணைக்கரையென்றும் பிரதிபேதமுண்டு.

† உதாசீனன் - பலகைட்பில்லாதான்=அயலான்.

‡ "ஒட்டிய சமயத் துறுபொருள் வாதிகள், பட்டிமண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்" என்றார் மணிமேகலையிலும். "பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்"
எனக் கம்பருங்கூறினர்.



ஒருரின்கண்ணே கூடுதலானும் மயன் நிருமித்தலானும் பெரியோரான் ஏத்தப் படும் இத்த *மண்டபத்தும்,
காண்டல் - பண்ணுதல் ; "கோயில் குனங்காண" என்றாற்போல நின்றது.

கக0. அன்றியும்—இ - ள். அதுவொழிந்தும்,
கக௧ - கக௭. வம்பு மாக்க டம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பலபொதி

கடைமுக வாயிலுங் கருந்தாழ்க காவலு
முடையோர் காவலு மொரீஇய வாகிக்
கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது கொடுத்த லீயா
துளவுநர்ப் பணிக்கும் வெள்ளிடை

இ - ள். அளவும் நிறையும் எண்ணுமாகிய இலக்கங்கள்தம்மிடத்திடப்பட்ட பெயர்பொறித்த பொதிகள் பண்டசாலைவாயிலையும் பற்றுயத்துக் கருந்தாழாகிய காவலையும் உடையோர் காத்திருக்குங்காவலையும் விடப்பட்டவாகலான் இந்நகர்க் குப் புதியமாக்கள்சிலர் கட்போருளராயின் அவர்கழுத்துக்கடுக்கப் பொதியை வைத்து ஊரைச்சூழ்விப்பினல்லாது அவர்க்கே அவற்றைக் கொடுத்துவிடாதத லாற் களவென்பதனை மனத்தாற் கனவில்நினைப்பினும் நினைப்போரை நடுக்குவிக் கும் வெளியான இடத்தையுடைய மன்றமுமென்க.

எண்ணெழுத்துப்படுத்தவென்க. எண்ணெழுத்து - இலக்கம். பலபண்டங் களையும்பொதிந்தனவற்றைப் பொதியென்பது ஆகுபெயர். வம்பமாக்கள் கட்போருளராயினென்றூர், இந்நாட்டு இவ்வூரில்வாழ்வோரெல்லாம் செல்வராதலாற் செய் யாரெனவும் புறநாட்டிற்சிலர் இம்மன்றின்றன்மையறியாது களவுசெய்யக்கருதுவ ரெனவும் புலப்படுத்தற்கு. தலையேற்றியென்பதற்குத் தாந்தாம் தலைமேலேற்றிக் கொண்டெனினுமமையும். பொதிகள் ஓரிடத்திலே கிடத்தலான் உளரெனில் அவரைக் கொட்பினல்லது ஈயாது பனிக்குமன்றமென்க. பனிக்குமன்றமென இடத்துநிகழ் பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது வம்பமாக்களாகிய உடையோரெனினுமமையும்.

கக௭ - கஉக. கூனுங் குறளு மூமுஞ் செவிடு
மழுகுமெய் யாளரு முழுகின ராடிப்
பழுதில் காட்சி நன்னிறம் பெற்று
வலஞ்செயாக் கழியு மிலஞ்சி மன்றமும

இ - ள். கூனர்முதலாயுள்ளோரும் தொழுநோயால் அழுகுமெய்யையுடை யோரும் புக்குமூழ்கினவளவிலே பழுதில்லாத தோற்றத்தையுடைய நல்ல நிறம் பெறுகையினாலே தன்னைவலஞ்செய்து தொழுது ஆடி நீங்கும் பொய்கையை யுடைய மன்றமுமென்க.

---

* இவற்றை உட்கொண்டே "வச்சிர மவந்தி மகதமொடு குழீஇய, சித்திர மண்டபம்" என்பர் மேல் நடுகற்காதையிலும்.

## ரு.—இந்திரவிழ வூரெ டுத்தகாதை.

கஉசு

பெற்று வலஞ்செய்து ஆடிக் கழியுமென்க. மூழ்கினராடி யென இருபெய ரொட்டுப் பண்புத்தொகையாக்கினுமமையும். இலஞ்சியை மகிழென்பார்க்குக் காவிரியில் நீராடிவந்து மகிழைச் சூழ்ந்தென்னவேண்டுதலின், மகிழினும் மன்றி னும் பயமின்றுமாதலின், அங்ஙனங்கூ றல் பொருத்தமின்றென்றொழிக்க.

கஉஉ - கஉஎ. வஞ்ச முண்டு மயற்பகை யுற்றோர்
நஞ்ச முண்டு நடுங்குதுய ருற்றோ
ரழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்
கழல்கட் கூளிக் கடுநவைப் பட்டோர்
சுழல வந்து தொழத்துயர் நீங்கு
நிழல்கா னெடுங்க னின்ற மன்றமும்

இ - ள். வஞ்சனையாற் சிலர் மருந்தூட்டவுண்டு பித்தேறினரும், நஞ்சையுண்டு நடுங்குதுயாமுற்றோரும், அழலும்

விடத்தையுடைய அரவின்வாயிற் கூர்த்த எயி றழுந்தக் கடியுண்டாரும், பிதங்கின கண்ணையுடைய பேய்பிடிக்கப்பட்டாரு மென்னுமிவர்கள் ஒருகாற் சூழவந்துதொழ அதனுடனே அத்துயர்கள் நீங்குதற்குக் காரணமாகிய ஒளியைக்கால்வதோர் நெடியகல் நாட்டிநிற்குமன்றமுமென்க.

மயற்பகை - மயலாகிய பகை. ஆர் - கூர்மை. கழல்கட்கூளி - விகாரமாக் கிப் பச்சைக்கழல்போலும் கண்ணையுடைய கூளியெனினுமமையும். கூளி - பூதமு மென்ப. நிழல் - ஒளி ; *" நிழன்மணி" என்றாற்போல.

கஉஅ - கஙச. தவமறைந் தொழுகுந் தன்மை யிலாள
ரவமறைந் தொழுகு மலவைப் பெண்டி
ரறைபோ கமைச்சர் பிறர்மனை
நயப்போர்
பொய்க்கரி யாளர் புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு
வோரெனக்
காத நான்குங் கடுங்குர லெடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமும்

இ - ள். தம்மைப் பிறர்நம்புவதற்குத் தவவேடத்தின்மறைந்துநின்று அத்தவத் திற்கு இழுக்கானவற்றின்கணொழுகும் பொய்வேடத்தாரும், தம்மைத் தங்கணவர் நம்புதற்குப் பொய்யொழுக்கத்தின்மறைந்துநின்று வசீகரிப்பினொழுகும் அலவற் பெண்டிரும், தம்படைகுடி முதலியவைந்தினொடு உயிருறுப்புரிமைக்குத் தம்மைத் தேறியளித்த அரசனைக் கீழ்மையெண்ணுமமைச்சரும், தமதுமனைவியர் தனிப்பத் தனித்த பிறர்மனைவியரை விரும்பும்

துச்சாரிகளும், தமதுநெஞ்சறிபொருளை வஞ் சித்துப் பொய்ச்சான்றேறுவாரும், சிறப்புச்செய்துழி உழை நின்றுபுகழ்ந்து அவர் புறக்கொடையிற் பழிதூற்றுவாருமாகிய இவர்களே என்கையிற்கொண்ட இப்பா சத்திடத்து அகப்படும்பெயரென அவ்வூர் நாற்காதவெல்லையுங்கேட்கும்படி தனது கடியகுரலாலுணர்த்திப் பின் அங்ஙனஞ்செய்வாரைப் பாசங்கட்டிவர நிலத்திற் புடைத்துண்ணும் பூதநிற்றலான் அப்பெயர்பெற்ற பூதசதுக்கமும்,

---

*சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், உகஉ.



*சதுக்கம் - நாற்சந்தி. தன்மை - தவத்தோடொற்றுமைப்படுத்தன்மை; அதனையில்லாமையாவது கூடாவொழுக்கம்: *அலவல்; விகாரம். அறைபோதல் - கீழறுத்தல். பொய்க்கரி - பொய்ச்சான்று. கை - இடம். காதநான்குமென முற்றும்மைகொடுத்தலானே ஊர் நாற்காதவட்டிகையென்பதுணர்க. குரலெடுப்பி - குரலாலுணர்த்தி. †"துயிலெடுப்பி" என்றாற்போலநின்றது.*

கஉரு-கஉஅ. அரசுகோல் கோடினு மறங்கூ றவையத்
துரைநூல் கோடி யொருதிறம் பற்றினு
நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப்
பாவைநின் றழூஉம் பாவை மன்றமும்

இ - ள். அரசனுடைய செங்கோன்மையிற் சிறிதுகோடிற்றாயினும் தரும நூன்முறைமையின் அறங்கூறும் தருமாசனத்தார் உரைக்கும் நடுவுநிலைமைகோடி ஒருமருங்குபற்றினும் நாவாற்கூறாது நீருகுத்துக் கண்ணாற்கூறும் பாவைநிற்றலான் அப்பெயர்பெற்ற பாவைமன்றமும்,

அறங்கூறவையம் - தருமாசனத்தார் வழக்குரைக்குமிடம்.
நாவொடு - நாவால்.

கஙக - கசO. மெய்வகை யுணர்ந்த விழுமியோ ரேத்து
மைவகை மன்றத்து மரும்பலி யுறீஇ

இ - ள். முற்கூறப்பட்டனவாகிய வெள்ளிடைமன்றமுதற் பாவைமன்றமீறா யுள்ள உண்மைத்திறத்தையுணர்ந்த சீரியோராலேத்தப்படும் ஐவகைப்பட்ட மன்றத்தும் அரும்பலியுறீஇயென்க.

ஒளி உச்சித்தோன்றிப் பரப்பச் சொரிந்து ஆடிப் பெயரவைத்து ஊட்ட மண்டபமன்றியும் மன்றத்தும் பலியிட்டென்க.

அன்றியுமென்றவும்மையும், மன்றத்துமென்றவும்மையும் இறந்தது தழீஇய வெச்சவும்மையாகலானும் அரும்பலியென்றமையானும் இவையும் அப்பலியானமையுணர்க.

கசக - கசச. வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
வால்வெண் களிற்றரசு வயங்கிய
கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றி

இ - ள். ‡வச்சிரக்கோட்டத்திலிருக்கும் முரசையெடுத்துக் கச்சையணிந்த யானையினது பிடரிடத்தேயேற்றி என்றும் இளைய வெள்ளிய அயிராவதநிற்குங் கோயிலிலேசென்று விழவின் முதலும் முடிவுஞ் சாற்றியென்க.

மணமுரசு - விழாமுரசு; மண்ணென்றோதி மார்ச்சனையென்பாருமுளர். கச்சை - கீழ்வயிற்றிற்கச்சை. தலை - இடம். வயங்குதல் - விளங்குதல். கால்

---

* அல்லவையெனவும் பிரதிபேதமுண்டு.

† அக்கிமாலைச்சிறப்புச்செய்காதை, ஏக.

‡ "வச்சிரக் கோட்டத்து மணமுழா வாங்கிக், கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி" என்றார் மணிமேகலையிலும்; முதலாவது விழாவறைகாதை.

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கசரு.

கோள் விழவின் கடைநிலை சாற்றி - விழவின் தொடக்கமும் முடிவுமறிவித்து. களிற்றரசிற்குச்சாற்றி, அஃது இந்திரனைக்கொணர்தற்கு.

வாங்கி ஏற்றிச் சாற்றியென்க.

கசகு - கசசு. தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து

இ - ள். பூமியிற்றங்கிய முறைமையையுடைய தருக்கோட்டத்தின்முன்னர் அட்ட மங்கலத்தோடு அயிராவதமெழுதியகொடியைத் துறக்கத்தேசெல்லவெடுத்தென்க.

இந்திரன்றங்கிய செருக்கையுடைய தருவெனினுமமையும்.

கசஎ - கருசு. மாகத மணியொடு வயிரங் குயிற்றிப்
பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை
நெடுநிலை மாளிகைக் கடைமுகத்

தியாங்கணும்

கிம்புரிப் பகுவாய்க் கிளர்முத்

தொழுக்கத்து

மங்கலம் பொறித்த மகர வாசிகைத்

தோரண நிலைஇய தோமறு பசும்பொற்
பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை
பாவை விளக்குப் பசும்பொற் *படாகை
தூமயிர்க் கவரி சுந்தர சுண்ணத்து
மேவிய கொள்கை வீதியின்

இ - ள். மரகதம் வயிரமென்னுமிவற்றைப் புருவம்பிறக்க ஆயுப்பலகையாகப் படுத்து அதன்மீதே செம்பவளத்தூண்களைநிரைத்த பைம்பொற்றிண்ணைகளையுடைய மாளிகைவாயிலிடந்தோறும் கிம்புரிசெறித்த கொம்பினையும் அங்காந்தவாயாற் கான்ற முத்தொழுங்கையும் அட்டமங்கலங்களையும்பொறித்த வாசிகைவடிவாக வளையச்செய்த மகரதோரணங்கள் நிலைபெறநிறுத்தின வீதி; அது பசிய பொன்னாற் செய்த நிறைகுடமும் பாலிகையும் விளக்கும் கொடியும் கவரியும் ஒழிந்தனவும் சுண்ணத்தோடேமேவிய வீதியிலென்க.

குயிற்றுதல் - அழுத்துதல். முகம் - இடம். கிம்புரி - கொம்பிலணியும்பணி. கிளர்முத்து - பருமுத்து. ஒளிகிளருமுத்தெனினுமமையும். கிளைபாடமாயிற் கொத்தாகத்தோன்றுமுத்தென்க. வாசிகைத்தோரணம் - உவமத்தொகை. தோம் - குற்றம். குயிற்றிய பாடமாயின், வயிரங்குயிற்றியகாலையுடைய வேதிகை யென்க,

அவ்வேதிகையையுடைய மாளிகைக் கடைமுகத்தியாங்கணும் தோரணநிலை பெற்ற மேவியகொள்கைவீதியென்க.

கருசு. செறிந்து—இ - ள். அவ்வீதியிலேநிறைந்து,

கருசு. ஆங்கு—இ - ள். அங்ஙனம் பலியிட்டவப்பொழுதே,

* இப்படியே "படாகையும் விதானமும் பாற்கடல் கடுப்ப" எனவும், "தண்பெரும் படாகை" எனவும் கொடியைப் படாகையென்று கூறுவர் பெருங் கதையிலும்.



கருஎ - ககூ0. ஐம்பெருங் குழுவு மெண்பே ராயமு
மரச குமரரும் பரத குமரருங்
கவர்பரிப் புரவியர் களிற்றின் றொகுதிய
ரிவர்பரித் தேரின ரியைந்தொருங் கீண்டி.

இ - ள். ஐம்பெருங்குழுவும் ஆயமுஞ்செறிந்து வீதிக்கண்ணே புரவியர் களிற் றினர் தேரினரான அரசகுமரரும் பரதகுமரரும் தம்மிற்பொருந்தி ஒன்றுபட்டு

ஐம்பெருங்குழு, *" அமைச்சர் புரோகிதர் சேனா பதியர், தவாத்தொழிற் றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திபர்க் கைம்பெருங் குழுவெனப் படுமே" எனு மிவர். எண்பேராயம், †" கரணத் தியலவர் கரும விதிகள், கனகச் சுற்றங் கடை காப் பாளர், நகர மாந்தர் நளிபடைத் தலைவர், யானை வீர ரிவுளி மறவ, ரினைய ரெண்பே ராய மென்ப" எனுமிவர். இனி " சாந்துபூக் கச்சாடை பாக்கிலை கஞ் சுகநெ, யாய்ந்த விவரெண்ம ராயத்தோர் - வேந்தர்க்கு, மாசனம்பார்ப் பார்மருத்தர வாழ்நிமித்த ரோடமைச்ச, ராசி லவைக்களத்தா ரைந்து" எனக்காட்டுவர் ‡அரும்பதவுரையாசிரியர். பரதர் - வணிகர். கவர்பரி - பகுத்துவிரையும் செலவு. இவர் தல் - தேரைக்கொண்டெழுதல்.

கசுக - கசுஅ. அரசுமேம் படூஇய வகநிலை மருங்கி
ஞரைச ான் மன் ன ன் கொற்றங் கொள்கென
மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கு
மாயிரத் தோரெட் டரசுதலைக் கொண்ட
தண்ணறுங் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணக மருள வானகம் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி

இ - ள். மிகப்பெரிய ஞாலத்தின் கண்ணே தமதான அரசியல் மேம்படுவான் வேண்டி மன்னுயிர்காக்கும் ஆயிரத்தோரெட்டரசு தலையிற் சுமப்பித்துக்கொண்ட காவிரியிற் பூவின்றாதுமலிந்த பெரிய சங்கமத்துறையிற் குளிர்ந்த நறியதீர்த்த நீரை, மண்ணகமும்வானகமுமருள வியப்ப எம்மன்னன் கொற்றங்கொள்வானாக வெனச்சொல்லிப் பொற்குடத்தேந்தி விண்ணவர்தலைவனை இந்நகரிடத்தே சிறப் புடைத்தாம்படி முற்கூறிய அரசகுமாரரும் பரதகுமாரரும் மஞ்சனமாட்டவென்க.

ஆட்டாநிற்பவெனத்திரிக்க. அகநிலை - ஊர். உரை - புகழ். சால் - அமைதி. மன் - ஆக்கத்தின்வந்தது. பொற்குடம் - அபிடேககலசம். மண்ணகமருள - மண

---

* திவாகரம், கசுக. † திவாகரம், கசுக.

‡ சிலப்பதிகாரத்திற்கு அரும்பதவுரையென்று ஒரு பழையவுரையுண்டு ; அவ் வுரையாசிரியர்பெயர் ஒருவாற்றானும் புலப்படவில்லை. அவ்வுரையின் கருத்தைப் பெரும்பான்மை தழுவியும் சிறுபான்மை மறுத்தும் இவ்வடியார்க்குநல்லாருரை

அலமர்துள்ளது.

கருளா: தொல்.

சொல். சூ. ருளா-ங; யச

ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கசரு

ணகம் விண்ணகமாய் மாருட. அன்றி மண்ணிலுள்ளோர் இப்படியே அவ்விண் ணகமிருப்பதென ஒப்புக்காணவென்க. வானகம்வியப்ப - வானகத்துள்ளோர் தம் துறக்கத்திலும் ஈது சிறப்புடைத்தென்று வியக்க. இனி மருள மருளுதலா லெனக்கூறி இருதிறத்தோரும் ஐயுற்றுத் தெளிந்து வியப்பவென்றலுமொன்று, விண்ணவர்தலைவன் - ஈண்டு அவன்வச்சிரம். மானதத்தால் நீராட்டியென்னவுமாம். அரசு மேம்படீஇய வகைநிலை யென நின்றவாறே ஏனைநகர்கட்கு அரசாய் மேம்பட்ட நகரென உரைப்பினுமமையும்.

ஏற்றிச் சாற்றி எடுத்துச் செறிந்து ஈண்டி ஏந்தி ஆட்டவென்க.

கசுசு. *பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்

இ - ள். என்றும் பிறவாத யாக்கையையுடைய இறைவன்கோயிலும்,

இனி யாக்கையிற்பிறவாப் பெரியோனெனினுமமையும்; என்றது அருபி யெனறபடி.

கஎ0. அறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்

இ - ள். ஆறுமுகத்தையும் செய்யநிறத்தையுமுடைய

முருகவேள்கோயிலும்,

† "மூன்று மாறு நெடுமுதல் குறுகும்" என்பதனால் அறுமுகமாயிற்று.

கஎக. வால்வளை மேனி வாலியோன் கோயிலும்

இ - ள். வெள்ளிய வளைபோலுநிறத்தையுடைய வெள்ளைமூர்த்திகோயிலும்,

என்றது பலதேவனை ; ‡ "வலியொத்தீ வாலியோனை" என்றார் பிறரும்.

கஎஉ. நீல மேனி நெடியோன் கோயிலும்

---

* "நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப், பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறா, வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை, யாறறி மரபி னறிந்தோர் செய்மின்" என்றார் மணிமேகலையிலும் ; க. விழாவறைகாதை.

† தொல்காப்பியம், எழுத்ததிகாரம், குற்றியலுகாப்புணரியல், ௬௫.

‡ புறநானூறு, ௫௬. "ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை, மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும், கடல்வளர் புரிவளை புரையுமேனி, யடல்வெந் நாஞ் சிற் பனைக்கொடி யோனு, ம ண்ணுறு திருமணி புரையு மேனி, விண்ணுயர் புட் கொடி விறல்வெய் யோனு, மணிமயி லுயரிய மாறா வென்றிப், பிணிமுக வூர்தி யொண்செய் யோனுமென, ஞாலங் காக்குங் கால முன்பிற், றோலா நல்லிசை நால்வ ருள்ளுங், கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம், வலியொத் தீயே வாலி யோனைப், புகழொத் தீயே யிகழுந ரடுநனை, முருகொத் தீயே முன்னியது முடித்தலி, னாங்காங் கவரவ ரொத்தலின் யாங்கு, மரியவு முளவோ நினக்கே யதனா, லிரவலர்க் கருங்கல மருகா தீயா, யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல், பொன்செய் புனைகலத் தேந்தி நாளு, மொண்டொடி

மகளிர் மடுப்ப மகிழ்சிறந், தாங்கினி
தொழுதுமதி யோங்குவாண் மாற, வங்கண் விசும்பி னிரு ளகற்றும், வெங்கதிர்ச் செல்வன் போலவுங் குடதிசைத், தண்கதிர் மதியம் போலவு, நின்று நிலைஇய ருலக மோ டுடனே." இணை - பாடாண்டிணை. துறை - பூவைநிலை. பாண்டியன் இல வந்திப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது.



இ - ள். நீலமணிபோலும் நிறத்தையுடைய நெடியமால்கோயிலும்,

மேனியென்றார், ஆகுபெயரால் நிறத்தை.

கஎங. மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்

இ - ள். முத்தமாலையணிந்த வெண்கொற்றக் குடையையுடைய வாசவன் கோயிலும்,

செவ்வேள், வாலியோன், நீலமேனியோனென்பவற்றான் தொடர்நிலையும் இன்பமும் அலங்காரச்சுவையுமுணர்க.

கஎச - கஎரு. மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மரபிற் றீமுறை யொருபால்

இ - ள். மிக்க முதுமையையுடைய முதல்வனாகிய வேதாவினுடைய வாய்மையிற்றப்பாத நாலாகிய வேதங்கள்சொன்னநெறி ஓமங்கள் நடந்தன ஒருபக்கமென்க.

கஎசு - கஎஅ. நால்வகைத் தேவரு மூவா றுகணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந்
தொருபால்

இ - ள். நால்வகைப்பட்டதேவரும் பதினெண்வகைப்பட்ட கணங்களுமென வேற்றுமைப்படத் தெரிந்துவகுக்கப்பட்ட தோற்றத்தையுடைய கடவுளரது விழவு சிறக்க ஒருபக்கமென்க.

நால்வகைத்தேவராவார்: முப்பத்துமூவர். அவர் வசுக்களெண்மரும், திவாகரர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், மருத்துவர் இருவருமெனவிவர்.
மூவாறுகணங்களாவார்: "கின்னரர் கிம்புருடர் விச்சாதரர்கருடர், பொன்னமர் பூதர் புகழியக்கர் - மன்னு, முரகர் சுரர்சா ரணர்முனிவர் மேலாம், பரகதியோர் சித்தர் பலர்" "காந்தருவர் தாரகைகள் காணுப் பசாசகண, மேந்துபுகழ் மேய விராக்கதரோ - டாய்ந்ததிறற், போகா வியல்புடைய போகபூமியோருடனே, யாகாச வாசிகளா வார்" எனவிவர். ஆகாசர் நாகர் சித்தர் காந்தருவர் விஞ்சையர் பூசகர் தாரகை போகபூமியோர் கிம்புருடர் சுரர் அசுரர் பூதம் முனி தேவர் கருடர் இராக்கதர் இயக்கர் சாரணர் எனவுங்கொள்க.

களகூ-கஅக. அறவோர் பள்ளியு மறனோம் படையும்
புறநிலைக் கோட் டத்துப் புண்ணியத்
தானமும்
துறவோ ருரைக்குஞ் செயல்சிறந்
தொருபால்

இ - ள். அறவோர்பள்ளிமுதலியவெல்லாவற்றிலும் தருமம்போதித்தலும் புராணம்படித்தலும் பிறவுமாகிய செய்கைகண்மிக ஒருபக்கமென்க.

அறவோர்பள்ளி - அருகர்பள்ளி, புத்தர்பள்ளி. அறனோம்படை - தருமம் போதிக்குமிடம். புறநிலைக்கோட்டத்து - புறம்புள்ள ஸ்ரீகோயிலுடனே. புண்ணியத் தானமும் - மற்றுமுள்ள புண்ணியத்தானங்களும். துறவோருரைக்குஞ் செயல் - புராணம்.

கஅஉ - கஅந. கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்ன
ரடித்தளை நீக்க வருள்சிறந் தொருபால்

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

இ - ள். கூடாமன்னரோடு ஏனையோரும்
அடித்தளைநீக்குதற்குக் கொடித்தேர் வேந்தன் அருள் சிறக்க
ஒருபக்கம்;

ஓடுவை அசையாக்கினுமமையும்.

கஅசு - கஅகூ. கண்ணு ளாளர் கருவிக் குயிலுவர்
பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணரொ
டெண்ணருஞ் சிறப்பி னிசைசிறந்
தொருபால்

கண்ணுளாளர் — மதங்கர்; ஆவார் பெரும்பாணர்; குழலருமென்ப. கருவிக்குயிலுவர் - தோற்கருவிவாசிப்பார். பண்ணியாழ்ப்புலவர் - கட்டப்பட்ட யாழ் வாசிக்கவல்ல அறிஞர்.

இ - ள். குழலுந் தோலு நரம்பும் கண்டமுமென்னுமிவற்றை இசைக்கவல்ல இவர்களாலே அளந்தறிதலரிய சிறப்பையுடைய இசைகள் மிக ஒருபக்கமென்க.

இவற்றையெல்லாம் சிறக்கவெனத் திரித்துக்கொள்க.

கஅஎ - கஅஅ. முழவுக்கண் டுயிலாது முடுக்கரும்
வீதியும்
விழவுக்களி சிறந்த வியலு ளாங்கட்

இ - ள். கங்குலும் பகலும் இங்ஙனநடக்கலான், முழவின்கண்கள் அடங்குத லின்றிக் குறுந்தெருக்களும் நெடுந்தேர்வீதிகளும் விழவாற்களிப்புமிக்க அகன்ற ஊரிடத்தென்க.

சிறக்க நீராட்டக் களிசிறந்த வியலுளென்க.

"காதற்கொழுநனை" என்பதுமுதல் "மறுகில்" (உ0கூ) என்னுந் துணையும் சிலேடை.

௧௮௯ - ௧௯௦. காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா
மாதர்க கொடுங்குழை மாதவி தன்னோடு

இ - ள். மாதவிமேற் சொல்லுமிடத்துத் தான காதலிக்கப்பட்ட கொழுநனைப் பிரிந்து வேறுபாட்டால் அலருறாத அழகிய வளைந்த மகரக்குழையையுடைய மாதவி யென்றும், குருக்கத்திமேற் சொல்லுமிடத்து எல்லாரும் காதலிக்குங்கொழுவிய நனையாந்தன்மையைவிட்டு முதிர்ந்து அலராகாத வளைந்த அழகிய தளிரையுடைய மாதவியென்றும்பிரிக்க.

நனை - அரும்பு. கண்ணகிபிரிந்து அலரையெய்துதலால் அலரெய்தாத மாதவி யென்றார். குருக்கத்தியை அலரெய்தாவென்றார், செவ்வியழியாமைபற்றி. ௧௯௧ - ௧௯௫.

இல்வளர் முல்லை மல்லிகை மயிலை
*தாழிக் குவளை சூழ்செங் கழுநீர்
பயிலபூங் கோதைப் பிணையலிற் பொலிந்து
காமக் களிமகிழ வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து

* "தாழியுண் மலர்ந்த தண்செங் குவளை, பூழுறு நறும்போ தொருகையிற் பிடித்து" எனப் பெருங்கதையிலும், "தாழிவாய்க் குவளை" எனச் சிந்தாமணி யிலுங்கூறினர்.



இ - ள். முற்கூறியமாதவியுடனே முல்லைமுதல் கழுநீரூயுள்ள பூப்பயின்ற பிணையலாலே பொலிவுபெற்றுக் காமத்தாற்களித்து மகிழ்ச்சியெய்தி அழகிய நறிய விரைபடுபூம்பொழிலில் விளையாட்டை விரும்பியென்க.

இல்வளர்தலை முல்லைமுதன் மூன்றுக்குமேற்றுக. மயிலை -

இருவாட்சி; சூழ் தல் - வண்டின்றொழில். இதனை விரித்து எங்கும் ஒட்டுக. கோதையாகிய பிணையலெனப் பண்பொட்டுவிரிக்க; ஒழுங்குமாம்; *"கோதையருவி" போல. பூம் பொதி நறவிரைப் பொழில் - நறியவிரையைப் பொதிந்த பூவையுடையபொழில்; விகாரம். ஆட்டு - விளையாட்டு; ஆவது புணர்ச்சி.

கக்கு-கக்எ நாண்மகி ழிருக்கை நாளங் காடியிற்
பூமலி கானத்துப் புதுமணம் புக்கு

இ - ள். நாடோறும் மகிழ்ந்திருக்கும் இருப்பையுடைய நாளங்காடியிற் பூவிற்குமிடங்களிற் பலபூமணமாகிய புதியமணத்தின் உள்புக்கு,

பூவிற்குமிடங்களைப் பூவின்மிகுதியாற் கானமென்றார்.

கக்அ-கக்க. புகையுஞ் சாந்தும் புலராது சிறந்து
நகையா டாய்த்து நன்மொழி திளைத்து

இ - ள். அகிற்புகை சாந்தென்னுமிவற்றின் செவ்விவாய்ப்புமிக்கு நகைத்து விளையாடும் திரளோடே காமக்குறிப்பாகிய மகிழ்ச்சிமொழியிலே இடைவிடாது பயின்றென்க.

புலராது - புலராமல்; செவ்விமாறுமலென்றபடி. திளைத்தல் - ஒருதொழிலை இடைவிடாதுபயிறல்; †"திளைத்தவர் பருகிய" என்றார் பிறரும்.

உ00-உ0ரு. குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரதரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
விளிவாய் வண்டினொ டின்னிள
வேனிலொடு
மலய மாருதந் திரிதரு மறுகில்

இ - ள். குரலென்னுமிசையைப்பாடும் வாயையுடைய

பாணரோடும் பாதரோடுந்திரிகின்ற ஒழுக்கத்தையுடைய கோவலனைப்போல இளியென்னுமிசை யைப்பாடும் வாயையுடைய வண்டினோடும் இளவேனிலோடும் இந்நகரிடத்து மந்த மாருதம் உலாவுதலைச்செய்யும் மறுகிடத்தென்க.

குரலுக்கிளிகூறினர் ; இளையாதனேக்கி. பாதர் - பழிகாமுகர். திரிதருதல் - உலாத்துதல்.

மாதவிதன்னெடும் பயில்பூம்பிணையலாற் பொலிந்து எய்தி அமர்ந்து புக்குச் சிறந்து திளைத்துப் பாணரொடும் பாதரொடுந்திரிகின்ற ஒழுக்கத்தையுடைய கோவலனைப்போல வண்டினெடும் இளவேனிலொடும் மாருதந்திரிதருமறுகிலென்க.

இச்செய்தென்னும் வினையெச்சங்களைத் திரிதருமென்னும் வினையொடுமுடித்து அச் செய்யுமென்னும் பெயரெச்சத்தையும் கோவலனென்னும் பெயரொடு முடித்து அவனைப்போலத் திரிதருமென்க.

---

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ௬௬.

† ,, நாமகளிலம்பகம், உக.

## ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

௧௫௬

பாணர்க்கு வண்டும், பாதர்க்கு வேனிலும், கோவலற்கு மாருதமும் உவமம்.

இனி வீதிவருணனை கூறுவார்.

உ0௪-உ0எ. கருமுகில் சுமந்து குறுமுய லொழித்தாங்
இருகருங் கயலோ டிடைக்குமி ழெழுதி
யங்கண் வானத் தரவுப்பகை யஞ்சித்

திங்களு மீண்டுத் திரிதலு முண்டுகொல்

இ - ள். அழகிய வானத்திடத்தே திரியும் அரவாகிய பகை செறுமென்றஞ்சி ஆண்டுத் திரியாமல் ஓர் பெரிய முகிலைச்சுமந்து சிறியமுயலையொழித்து இருமருங்கினும் இரண்டு கருங்கயலினையும் இடையே ஒரு குமிழமலரையுமெழுதி இங்ஙனம் *உள்வரிக்கோலங்கொண்டு திங்களும் இந்நிலத்தே திரிதருகின்றதுகொல்லோ வெனவும்,

உம்மை - சிறப்பு. கருமை - பெருமை.

உ0அ-உகக. நீர்வாய் திங்க ணிணிலத் தமுதின்
சீர்வாய் துவலைத் திருநீர் மாந்தி
மீனேற்றுக் கொடியோன் மெய்பெற
வளர்த்த
வான வல்லி வருதலு முண்டுகொல்

இ - ள். காமன்றான், முன்பு இறைவன் நுதல்விழியானிழந்த மெய்பெறுதற் காக ஈரம் வாய்ப்புப்பெற்ற திங்களாகிய பெரியநிலத்தே சீர்மைவாய்ப்புப்பெற்ற துவலையையுடைய அமிர்தகலையினீரைமாந்தி வளரவளர்த்த வானவல்லி இந்நிலத்தே வருதலுமுண்டாயிற்றோதானெனவும்,

வளரவென ஒருசொல் வருவிக்க. மாந்தி மெய்பெறவெனினுமமையும். இதனை வானவல்லி என்றார், காமவல்லியுமுண்மைதோன்ற. வானவல்லி - மின்னுக்கொடி. உம்மை - சிறப்பு.

உகஉ-உகஎ. இருநில மன்னற்குப் பெருவளங் காட்டத்
திருமகள் புகுந்ததிச் செழும்பதி
யாமென

வெரிநிறத் திலவமு முல்லையு மன்றியுங்
கருநெடுங் குவளையுங் குமிழும் பூத்தாங்
குள்வரிக் கோலத் துறுதுணை தேடிக்
கள்ளக் கமலந் திரிதலு முண்டுகொல்

இ - ள். வளத்தையுடைய இப்பதியிடத்தே திருமகள் வந்துபுகுதற்குக்காரணம் மிக்கநிலத்தையுடைய கரிகாலற்குத் தனதுவளங்காட்டவாயிருந்தது தப்பாதெனக்கருதி எரிபோலு நிறத்தையுடையதோர் இலவமலரையும் பல்முல்லைமுகை யையுமொழிந்தும் இரண்டு கரிய பெரிய குவளைமலரையும் ஒருகுமிழமலரையும்

பூத்து இங்ஙனங்கொண்ட உள்வரிக்கோலத்தோடு தனது அன்புமிக்கதுணையைத்

தேடிக் கமலந்திரிதலும் உண்டாயிற்றோதானெனவும்,

---

* உள்வரிக்கோலம் - பாணடவர்போல வேற்றுருக்கொண்டுநடிக்குங்கோலம். ௬௫௦



கள்ளக்கமலமென்றூர், உருமாறித்திரிதலின் ; கள்ளையுடைய அக்கமலமென்பு இயல்பு. ஆங்கு - பூத்த அப்போதே. வளம் - செல்வமும் அழகும். உ௯அ-உ௨௫. மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப்

பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்ற
மாண்மையிற றிரிந்தத னருந்தொழி

றிரியாது

நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப்
பண்மொழி நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப்
பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென

இதற்குக் கொல்லென்னும் இடைச்சொல் வருவிக்க.

இ - ள். முன்பு ஒடியொளித்த பகுவாய்க் கூற்றம் தான் ஆணுருவோடு திரிந்து பல்லுயிரைப்பருகில் அரசன்செங்கோலே மறுத்ததாமென்று அதற்கஞ்சி மறைந்துநின்று பருகவேண்டிக் கடுத்தமுகமும் இடித்தகுரலுமொழித்து வாணகைமுகமும் யாழிசைமொழியுங்கொண்டு நகைத்து மிழற்றிப் பெண்ணுருவோடு இந்த வீதியிற்றிரியுந்தன்மையும் உண்டாயிற்றோதானெனவும்,

பருகுங்கூற்றம் - பலவுயிரையும் ஒருவாயிற் பருகுங்கூற்றம். பகுவாய் - அங்ஙன்பருகுங்கால் அங்காக்கும்வாய். தன் அருந்தொழில் திரியாது ஆண்மையிற் றிரிந்து பெண்மையிற்றிரியுமெனினுமமையும். இதன்கருத்து - கூற்றம் தன் கொலைத்தொழில்கெடாமல் ஆணுருக்கெடப் பெண்ணுருவால் திரியுமென்றபடி. அருந்தொழில் - கொலைத்தொழில். நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டியென்றது ஒருருவைக் கோட்டுவார்க்கு நாணுடைமைகோட்டல் அரிதாகவின், முதல் அதனைக்கோட்டிப் பின்பு அதனோடு நகைமுகத்தையுங்கோட்டியென்பதாயிற்று.

கூற்றம் அஞ்சித் திரியாமற் கோட்டி மிழற்றிப் பெண்மையிற்றிரியும் பெற்றியென்க.

மாருதந்திரிதருமறுகில் திங்களும் வல்லியும் கமலமும் கூற்றமும் திரிதலு முண்டுகொல் வருதலுமுண்டுகொல திரிதலுமுண்டுகொல பெற்றியுமுண்டுகொலெனக் கூறியென்க.

இது, இங்கள்முதலியவற்றைப் பொதுமகளிருறப்போடும் தொழிலோடு முற வித்துக் காமுகர்புகழ்ந்துகூறுதலெனக்கொள்க.

உஉச-உகூச. உருவி லாள னொருபெருஞ் சேனை
யிகலம ராட்டி யெதிர்நின்று விலக்கியவ
ரெழுதுவரி கோல முழுமெயு முறீஇ
விருநதொடு புக்க பெருந்தோட் கணவரொ
டுட னுறைவு மரீஇ யொழுக்கொடு புணர்ந்த*
வடமீன் கற்பின் மனையுறை மகளிர்
மாதரவாண் முகத்து மணித்தோட்டுக்
குவளைப்
போதுபுறங் கொடுத்துப் போகிய
செங்கடை

# ரு.—இந்திரவிழவூரெடுத்தகாதை.

கருக

விருந்திற் றீர்ந்தில தாயின் யாவது
மருந்துந் தருங்கொலிம் மாநில வரைப்பெனக்
கையற்று நடுங்கு நல்வினை நடுநாள்

இ - ள். காமனுடைய ஒப்பிலாத பெரியசேனையாகிய பொதுமகளிர் ஊட லானுகிய மாறுபட்ட அமரை இங்ஙனம்புகழ்ந்துசொல்லி வென்று அவர்போகா மல் எதிர்நின்றுவிலக்கிப் புணர்தலின் அவருடைய முலைமுதலியவற்றினெழுதிய தொய்யின்முதலிய பத்திக்கீற்றுத் தமதுமார்பமுழுதும் உறுதலானே விருந்தொடு புக்க கணவரோடே உடனுறைதலைமருவி வழிபாட்டோடும்பொருந்திப்புணர்ந்த அருந்ததிபோலும் கற்பையுடைய இல்லறமகளிரை அப்பெருந்தோட்கணவரே இம்மாதருடைய ஒளிபொருந்தியமுகத்து நீலமணிபோலும்

இதழையுடைய குவளைப்போதுகள் புறங்கொடுத்துப்போதற்குக் காரணமாகிய கரியகண்களின் கடைச் சிவப்பு அவ்விருந்தால் தீர்ந்ததில்லையாயின் இப்பெரிய நிலவெல்லை இதற்கு ஒரு மருந்தையும் தரவற்றேவெனத் தமதுநெஞ்சொடுகூறிச் செயலற்றுநடுங்கும் விழா நடுநாளிலென்க.

இகலமராட்டி - மாறுபட்ட அமரைச் சயித்து ; ஆடு - வென்றி. என்றது புலவி யாலே கூடாதமகளிரை இங்ஙனம்புகழ்ந்து புலவியைத்தீர்த்தென்றபடி . எதிர் நின்று விலக்கி - போகப்புக்கவர்களைப் போகாமல்விலக்கி. வரிகோலம் - வினைத் தொகை. முழுமெயும் - மார்பமுழுதும் ; *" முழுமெயும் புன்கணுற்றோர்க்கு" என்றார் பிறரும். உறீஇ - உறுவித்து ; புணர்ந்தென்றபடி. தீர்ந்திலது - விகாரம். யாவதும் - சிறிதும் ; உம்மை - சிறப்பு. மருந்தும் தருங்கொலிம் மாநில வரைப் பெனத் தருதல் வரைப்புக்கேற்றுக. வரைப்பென்றார், வரைப்பிலுள்ளாரை. நல் விழா - விழா.

ஆட்டி விலக்கி உறீஇப் புக்க கணவர் நடுங்குநாளென்க.

நிலவரைப்புத் தருங்கொலென்றார், சல்லியகரணி சந்தானகரணி சமனிய கரணி மிருதசஞ்சீவினி யென்னும் இவைமுதலிய மருந்துகளைத்தரும் நிலவரைப்பு இவ்வூடன்முதலியவற்றிற்கு மருந்து தரமாட்டாதென்றற்கு.

இனி, திங்கள் வானவல்லிமுதலியவற்றைக் கூறுதலைக் கண்டோர்கூற்றாக்கி அவர் அங்ஙனங்கூற அக்காமன்சேனையாகியமகளிர் மாறுபட்டுத் தம்முறுப்புக்களால் அமரைச்செய்வித்து வீதியிற்போவாரைப் போகாமல் தடுத்தலின் அவருடைய முலையிலெழுதிய தொய்யிலுறுதலின் விருந்தொடுபுக்கவெனினுமமையும். இனி இம்மகளிர் செருக்குதலாலே மைந்தர் மார்பாற்றள்ளிப்பெயர்கின்றவர் தம்

மார்பிற் பொறித்தலாலெனவுமாம். இஃது “ உறுத்தலு மொன்றலும்” என்னும் ஆலிங்கன

விகற்பம் ; †பூசுசாங் தொருவர் பூசிற் றெழுவர்தம் மகலம் பூசி, மாசன மிடம்பெ றுது வண்கடை மலிந்த தன்றே” என்றார் பிறரும். உடனுறைவுமரீஇயெனவே

ஊடநீர்தலும் ஒழுக்கொடுபுணர்ந்தவெனவே காட்டிற்றுஞ்செய்து கதம்படாராத விற் புலவி தனியிற் செல்லாது ஊடலுணர்ந்தமையும் விளங்கின்றன.

---

* சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், ருஉஎ.
† ,, நாமகளிலம்பகம், அஎ.



உருடு-உசo. உள்ளக நறுந்தா துறைப்பமீ தழிந்து
கள்ளுக நடுங்குங் கழுநீர் போலக்
கண்ணகி கருங்கணு மாதவி செங்கணு
முண்ணிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன
வெண்ணுமுறை யிடத்தினும் வலத்தினுந் துடித்தன
விண்ணவர் கோமான் விழவுநா ளகததெ்ன

இ - ள். *இந்திரனுடைய விழாநாளகத்து உள்ளுள்ள நறியதாதுகண் மதுவை யூறிப் பிலிற்றுதலால் அகநிறைந்து மீது அழியப்பொழிய நின்றுநடுங்கும் கழுநீரினைப்போலக் கண்ணகியுடைய கருங்கண்ணும் மாதவியுடைய செங்கண்ணும் உண் ணிறை கரத்தலானே இதயத்தையொளித்து நீரையுகுத்தன ; அவையே முன் எண்ணியமுறையே இடமும் வலமுந் துடித்தனவென்க.

அழிந்து - அழிய.

தாதெறிப்பவென்றபாடமோதித் தாது ஒளிவிடவெனப் பொருளுரைப்பாரு முளர். கழுநீர்போலவென்றது; ஊறி நிறைந்து இதழினின்றும்வழிந்து சிந்து தலின். நடுங்குமென்றார், மல்கிநின்று அலேந்துசிந்துமாகலின், கருங்கண் செங்க ணென்றார், இருவர்க்கும் கூட்டமின்மையும் உண்மையுமுணர்த்தற்கு. இடத்திலும் வலத்தினுந்துடித்தனவென்றார், மேல் இருவர்க்கும் கூட்டமும் பிரிவுமுணர்த் தற்கு. விழவுகாலகத்தென்றார், நீர்த்தத்தின்முன்றுளென்பது உணர்த்தற்கு.

மடக்தை போர்த்த படாத்தைப் போகநீக்கி ஒளி உச்சித்தோன்றிப் பரப்பச் சொரிந்து ஆடிப் பெயா நலங்கொளவைத்து ஊட்ட மண்டபமன்றியும் மன்றத் தும் பலியுறீஇ ஏற்றிச் சாற்றி எடுத்து ஈண்டிக்கொள்கென ஆட்டக் களிசிறந்த வியுலுளாங்கண் திரிதருமறுகில் உண்டுகொலென்று சேனையாட்டி விலக்கி உறீஇப் புக்க கணவர் நடுங்குநாள் உகுத்தனவாகிய கருங்கண்ணும் செங்கண்ணும் விழாா அகத்து இடத்தினும் வலத்தினுந் துடித்தனவென வினைமுடிக்க.

இஃது எல்லாவடி யும் அளவடி யாய்வந்துமுடிதலின் நிலைமண்டிலவாசிரியப்பா.

பருந்து நிழலுமென . . .
...அடியார்க்குநல்லானென்பான்.
ஒருந்தமிழ் ... ... ...
...நிரம்பையர்காவலனே.
காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

## இந்திரவிழ வூரெடுத்தகாதை முற்றிற்று.

௲. மன்னு மாலை வெண்குடையான் வளையாச் செங்கோ லதுவோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி. (உ)

ங. உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த தெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி. (ங)

சார்த்துவரி. வேறு.

ரு. மோது முது பான் மொத்துண்டு போந்தசைந்த முரல்வாய்ச் சங்க
மாதர் வரிமணன்மேல் வண்ட லுழுதழிப்ப மாழ்கி யைய
கோதை பரிந்தசைய மெல்விரலாற் கொண்டோச்சுங் குவளை மாலைப்
போது சிறங்கணிப்பப் போவார்கண் போகாப் புகாரே யெம்மூர்.

இது, தோழி தலைமகன்முன்னின்று வரைவுகடாயது;
கையுறைமறையெனினுமமையும்.

௬. காதல ராகிக் கழிக்கானற் கையுறைகொண் டெம்பின் வந்தா
ரேதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதையாங் கறிகோமைய

---

௩. கன்னி - தெற்கேயுள்ள குமரியென்னு மோர்நதி; இது கன்னியாகுமரி யென்றுஞ்சொல்லப்படும்.

௪. தண்பதங்கொள் விழவர் - புதுப்புனலாடுவோர்; மழவரோதைவளவன் - மழவர்கள்கொட்டும் வீரமத்தளவோசையையுடைய சோழன்; மழவர் - ஒருவகை வீரர்; "இம்புழல் வல்சிக் கழற்கான் மழவர், பூந்தலை முழவி னெஞ்றலை கடுப்ப" என்றார் மதுரைக்காஞ்சியிலும்; [௩௯௫ - ௩௯௬.] நடந்ததெல்லாம் வளனென விரியும். 'திங்கண்மாலை' முதலியமூன்றும் முகமுடைவரியென்றுங்கூறப்படும். வரிப்பாட்டு, தெய்வத்தைச்சுட்டுவனவும் மக்களைச்சுட்டுவனவுமென இருவகைய; அவற்றுள், 'திங்கண்மாலை' முதலியன மக்களைச்சுட்டுவன.

௫. முரல்வாய் - ஒலித்தலையுடையவாய். மாதர் - ஈண்டுச்சிறுமியர்கள். வண்டல் - அம்மகளிர்விளையாட்டு; ஈண்டுச் சிற்றில்முதலியன; ஆகுபெயர். மாழ்கி - மயங்கி. கோதை - கூந்தல். பரிந்து - அவிழ்ந்து. போது - மலரும்பருவத்தரும்பு. மாலைக் குவளைப்போதென்க. சிறங்கணிப்ப. கடைக்கணிக்க. புகார் - காவிரிப்பூம் பட்டினம். சங்கம் உழுது வண்டலையழிப்ப மாதர் மாழ்கி ஒச்சும் மாலைக்குவளைப் போது சிறங்கணிப்பப் போவார்கண் போகாப் புகாரெனமுடிக்க. புறங்கணிப்ப வென்றும் பாடம். சிந்தியகுவளைப்போதுகள் மகளிர் கடைக்கணித்தாற்போலிருத் தலையின், சிறங்கணிப்பவென்றார்.

சு. காதலராகி - அன்புடையாராகி. கானல் - கடற்கரைச்சோலை. கையுறைகோணிக்கை. எம்பின்வந்தார் - எமது பின்னேவந்த இரந்தவர். ஏதிலர் - அயலார். கூஅ0

# சிலப்பதிகாரம்.

மாதரார் கண்ணு மதிநிழனீ ரிணைகொண்டு மலர்ந்த நீலப்
போது மறியாது வண்டூச லாடும் புகாரே யெம்மூர். (உ)

புமது.

எ. கரிய மலர்நெடுங்கட் காரிகைமுன் கடற்றெய்வங் காட்டிக் காட்டி
யரியசூள் பொய்த்தா ரறனிலரென் றேழையம்யாங் கறிகோ மைய
விரிகதிர் வெண்மதியு மீன்கணமு மாமென்றே விளங்கும வெள்ளைப்
புரிவளையு முத்துங்கண் டாம்பல் பொதியவிழ்க்கும் புகாரே யெம்மூர்.

கானல்வரி. வேறு.

இது, குறியிடத்துச் சென்றபாங்கன், தலைமகளாது காதனமிகுதி
குறிப்பினறிந்து கூறியது.

அ. துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்ற மாய்வான்

பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர்ந்து நுண்டாது போர்க்குங் கான

விறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த
வுறைமலி யுய்யாநோ யூர்சுணங்கு மென்முலையே தீர்க்கும்போலும். ——————— ———

——————— ——————— ——— அன்று கையுறைகொண்டு எம்பின்வந்து காதலராகி இரந்தவர் இன்று தாம் ஏதில ராகி யாமிரக்கும்வண்ணம் நிற்கின்றார் ; அங்ஙனநிற்றலை யாம் யாங்கறிகோம். **அறிகோம் - அறிவோம்.** காதலர் ஏதிலர் தாமென முன்னிலையைப் படர்க்கைவாய் பாட்டாற் கூறினார். **ஐய - அண்மைவிளி. நீர் மதி நிழல் இணை கொண்டு -** நீரில் **மதியினது** பிரதிபிம்பத்தில் இரண்டாகி; மாதரார்முகத்திலுள்ள **கண்களுக்கும்** மதி **நிழலில்** மலர்ந்த நீலோற்பலமலர்களிரண்டற்குமுள்ள வேறுபாடறியாது வண்டு **கள்** மயங்குவனவாயின. மதிநிழலென்றதனா ல் முகம் வருவிக்கப்பட்டது. **ஊச லாடுதல் - அங்குமிங்குமலைதல்.**

எ. கரியமலர் - நீலமலர். கடற்றெய்வம் - வருணன். அரிய சூள் - விடுத்தற் கரியசூள் ; சூள் - சபதம். ஈண்டும் பொய்த்தாரென்று முன்னிலையைப்படர்க்கை வாய்பாட்டாற் கூறினார். வளை - சங்கு. வளையை மதியென்றும் முத்துக்களை மீன் கணமென்றுங்கருதி ஆம்பல் பொதியவிழ்க்குமென்க. பொதியவிழ்த்தல் - மலர்தல். பாட்டுடைத்தலைவன் பதியோடுசார்த்திப்பாடிய வரிபபாட்டாதலின், 'மோது முது திரை' முதலியமூன்றும் சார்த்துவரியெனப்பட்டன. பாட்டுடைத்தலைவன் - சோழன். "பாட்டுடைத் தலைவன் பதியொடும் பெயரொடுஞ், சார்த்திப் பாடலிற் சார்த் தெனப் படுமே" என்றார். அச்சார்த்து முகச்சார்த்து, முரிச்சாரத்து,

கொச்சகச் சார்த்தென மூன்றுவகைப்படும். அவற்றுள், இம்மூன்றும் முகச்சார்த்து.

அ. பூ பொறை மலி புன்னை - பூவாகிய பாரமிக்க புன்னை. கானல் - கானலில். கேர்கயற்கண் - கயல்கேர்கண். கானலிற்செய்தவெனவியையும். உறைமலி - மலி யுறையால் ; உறை - மருந்து. உய்யாநோய்-போக்கமுடி யாதநோய். ஊர்சுணங்கு மென்முலை - சுணங்கூர்மென்முலை. போலும் - ஒப்பில்போலி. நிறைமலியென்றும் பாடம்.

சிறிய மலர் நெடுங்கட் கோரிகை முன்:
தொல். சொல். ௪௨௦-ந. பக். ௨௫௩
மு. வரை. தொல். பொ. பக். ௨௦௦-ந.

இறை. பக். ௬௭; இ-வி. பக். ௬௬௦, இ-வி. ப
... 14; நம்பியகம், பக். 584

ஈ: தொல். செய். ௫. கருசு. பேர். பக். 726
உரை உரை ந பக். 191
இறை. பக். ௬௬

## எ.—கானல் வரி.

கஅக

இது, கழற்றெதிர்மறை.

௯. கிணங்கொள் புலா லுணங்க னின்றுபுள் ளோப்புத
றலைக்கீ டாகக் கணங்கொள்வண் டார்த்துலாங் கன்னி
நறுஞா ழல் கையி லேந்தி மணங்கமழ் பூங்கானன்
மன்னிமற் றுண்டோ
ரணங்குறையு மென்ப தறியே னறிவனே லடையேன்
மன்னோ.(உ)

இதுவுமது.

க0. வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின் மலர்கை
யேந்தி விலைமீ னுணங்கற் பொருட்டாக வேண்டுருவங்
கொண்டு வேறோர் கொலைவே னெடுங்கட் கொடுங்கூற்றம்
வாழ்வ
தலைநீர்த்தண் கான லறியே னறிவனே லடையேன்
மன்னோ. (௩)

நிலைவரி. வேறு.

இது, தமியளாக இடத்தெதிர்ப்பட்ட தலைவிக்குத்
தலைமகன் கூறியது.

கக, கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்
திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
யங்கணேர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே.
(க)

இதவுமது.

கஉ. எறிவளைக ளார்ப்ப விருமருங்கு மோடுங்
கறைகெழுவேற் கண்ணோ கடுங்கூற்றங் காணீர்

௯. புலால் உணங்கல் - புலால்வற்றல். ஒப்புதல் - ஓட்டுதல். தலைக்கீடு - வியாஜம். ஞாழல் - புலிநகக்கொன்றை. அணங்கு - வருத்துந்தெய்வம். புள்ளோப்பு தலைத் தலைக்கீடாகக்கொண்டு ஞாழலையேந்திக் கானலில் அணங்குறையுமென்பதை யறியேன் ; அறிவேனாயின், ஆண்டுச் செல்லேனென்க. கையிலூன்றியெனவும் பாடம்.

௧௦. வலைவாழ்நர் - வலைவளத்தால் வாழ்பவர். சேரி - சேரியில். உணங்கும் - உலரும். உணங்கற் பொருட்டாக - உணங்கலைக்காத்தற்பொருட்டாக. கானலிற் கூற்றம் வேண்டுருவங்கொ ண்டு வாழ்வதை அறியேனென்க. வலைவாணரென்றும் பாடம். கூற்றம் - இயமன்.

௧௧. கயல் வில் காரென்றது முறையே கண் புருவம் கூந்தலாகிய இவற்றை. காமன்செயல் - பிறரை வருத்துந்தொழில். தீர்ந்தமுகம் - பணிக்குறையற்றுக் கை விட்டமுகம். திங்களோ, ஓ - வியப்பு. காணீர் - பாரீர். திமில் - மீன்படகு ; "திரைதிமில் வேட்டுவர்" என்றார் மதுரைக்காஞ்சியிலும் ; [௧௧௯.] திங்கள் வானத் தரவையஞ்சிச் சிறூரில் வாழ்வதைக் காணீரென்க. சிறூர்க்கு - உருபுமயக்கம்.

௧௨. எறிவளை - அறுக்கும்வளை ; கரையிலே அலைகளெறிகிறவளையென்றுமாம். கண்ணே, ஓ - வியப்பு சங்குகள் முழங்க அவற்றைப்பார்த்து ஓடுங்கண்ணையுடை ௧அ௨

சிலப்பதிகாரம்.

> கடுங்கூற்றங் காணீர் கடல்வாழ்நர் சிறூர்க்கே
> மடங்கெழுமென் சாயன் மகளா யதுவே.

(உ)

இதுவுமது.

கஈ. புலவுமீன் வெள்ளுணங்கற் புள்ளோப்பிக் கண்டார்க்
கலவநோய் செய்யு மணங்கிதுவோ காணீ
ரண்ங்கிதுவோ காணீ ரடம்பமர்தண் கானற்
பிணங்குநே ராம்பாவோர் பெண்கொண் டதுவே. (ஈ)

முரிவரி. வேறு.

இது, தலைமகன் பாங்கன்கேட்ப உற்றதுரைத்தது.

கச. பொழிதரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுருவ வில்லிணையே
யெழுதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே. (க)

இதுவுமது.

கரு. திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
யிருகய லிணைவிழியே யெனையிடர் செய்தவையே.

(உ) ———————————————————————
——————— யாள்; வேற்கண் - அன்மொழித்தொகை; ஆகுபெயரென்பர் அரும்பதவுரையாசிரியர். சாயல் - மென்மை. கூற்றம் சீறூரின்கண் மகளாயது காணீரென்க. ஆர்ப்பவெம்மருங்குமோடுமென்றும் பாடம்.

கஈ. அலவ - அலந்து அலைபட. அணங்கு -

வருத்துந்தெய்வம். பிணங்கு நேர் ஐம்பால் - செறிந்த மெல்லிய கூந்தல். பெண் கொண்டது - பெண்வடிவுகொண்டது. இதுவோ, ஓ - வியப்பு. அணங்கு கானலிற் பெண்வடிவுகொண்டிருத்தலைக் காணீரென்க. நிலைவரியின் இலக்கணத்தை, "முகமு முரியுந் தன்னொடு முடியு, நிலையை யுடையது நிலையெனப் படுமே" என்னுஞ் சூத்திரத்தாலறிக. அலவனோ யென்றும், அவலநோயென்றும் பாடபேதமுண்டு.

கசு. இடர்செய்தவை, மலரும் மணலும் மொழியும் முலையும் முகமும் வில் லிணையும் இடையுமென்க. ஏகாரங்கள் எண்ணுப்பொருளன. முரிபுருவம் - வளைந்தபுருவம். இணை - இரண்டு. எழுதருமிடை - எழுதுதற்கரிய இடை. எழுதரிய வெனவும், செய்தவிவையெனவும் பாடம்.

கரு. இடர்செய்தவை, துறையும் இடமும் மலரும் இடமும் குழலும் முகமும் விழியுமென்க. திரை - அலை. விரை - நறுமணம். ஏகாரங்கள் எண்ணுப்பொருள. விரிவிடமெனவும், செய்தவிவையெனவும் பாடம்.

## எ.—கானல்வரி.

கஅ௲

இதுவுமது.

கசு. வளைவளர் தருதுறையே மணம்விரி தருபொழிலே

தளையவிழ் நறுமலரே தனியவ டிரியிடமே
முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே
யிளவள ரிணைமுலையே யெனையிடர்

செய்தவையே. (௬.)

திணைநிலைவரி. வேறு.

இது, புணர்ச்சிநீட இடந்தலைப்பாட்டிற்

புணர்தலுறுவான்

ஆற்றாமைகூறியது.

௬எ. கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் ஐய
ருடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயு
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பார
மிடர்புக் கிடுகுமின் னிடையிழவல் கண்டாய்.

(க)

இதுவுமது.

௬அ. கொடுங்கண் வலையா லுயிர்கொல்வா னுந்தை
நெடுங்கண் வலையா லுயிர்கொல்வை மன்னீயும்
வடங்கொண் முலையான் மழைமின்னுப் போல
நுடங்கி யுகுமென் னுசுப்பிழவல் கண்டாய்.

(உ)

---

௬௬. இடர்செய்தவை, துறையும் பொழிலும் மலரும் இடமும் கலையும் முகமும் முலையுமென்க. வளை - சங்கு. இளையவளிளமுலையெனவும், செய்தவினை எனவும் பாடம். முரிவரியின் இலக்கணத்தை, "எடுத்த வியலு மிசையுந் தம்மின், முரித்துப் பாடுதன் முரியெனப் படுமே" என்னுஞ்சூத்திரத்தாலுணர்க.

௬எ. நின் ஐயர் - உனது மூத்தோர். மிடல்புக்கு - வலியிலே புகுந்துநின்று. இடர்புக்கு - இடரிலே கிடந்து. இடை இழவல் -

இடையை இழந்துவிடாதே. நின்னையர் கடலிற்புகுந்து உயிர்களைக்கொன்று வாழாநிற்பர்; நீயும் உடலிற்புகுந்து உயிரைக்கொன்று வாழ்கின்றனை; உனது குலதருமத்தை நீ இங்ஙனஞ்செய்கின்ற கொடுமையாலே இடைமுரியவுங்கூடும்; அன்றியும் முலைகளோ பாரமாகவுள்ளன; ஆதலால், கொல்லுதலைத்தவிர்ந்து அப்பாரத்தை என்தோளிலேற்றி இடையைப் பாதுகாக்கக்கடவையென்க. எனது ஆற்றாமையைத் தீரென்பதுகருத்து. பின் னுள்ள கவிகளிரண்டற்கும் இப்படியே பொருள்கொள்க. இடர்ப்புக்கிடுகுமிடை யிழவலெனவும் பாடம்.

கஅ. கொடுங்கண்வலை - வளைந்த கண்களையுடைய வலை; கண் - ஈண்டு வலை யின் இடைவெளி. நுக்தை - உன்தந்தை. நெடுங்கண்வலை - நீண்ட கண்ணாகிய வலை. நுடங்கி - அசைந்து. நுசுப்பு இழவல் - இடையை இழவாதே. மறை மின்னுப்போலவெனவும், துடங்குமிளமென்னுசுப்பெனவும் பாடம்.



இதுவுமது.

கக. ஓடுந் திமில்கொண் டுயிர்கொல்வர் நின்னையர்
கோடும் புருவத் துயிர்கொல்வை மன்னீயும்
பீடும் பிறரெவ்வம் பாராய் முலைசுமந்து
வாடுஞ் சிறுமென் மருங்கிழவல் கண்டாய்.
(ந)

வேறு.

இது, குறியிடத்துச்கண்ட பாங்கன் சொல்லியது; புணர்ந்துநீங்குவான் விடுத்த

லநுமையான் ஆற்முஞய்த் தன் நெஞ்சிற்குச்
சொல்லியதுமாம்.

உ௦. பவள வுலக்கை கையாற் பற்றித்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய.

(௪)

இதுவுமது.

உக. புன்னை நீழற் புலவுத் திரைவா
யன்ன நடப்ப நடப்பாள் செங்க
ணன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கூற்றங் கூற்றம்.

(௫)

இதுவுமது.

உஉ. கள்வாய் நீலங் கையி னேந்திப்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்

---

கசு. கோடும்புருவம் - வளைந்தபுருவம். பீடும் பிறர் எவ்வம் பாராய் - உனது பெருமையினையும் பிறர்படுந்துன்பத்தையும் நீ பார்த்தல்செய்யாய்; எவ்வமுமென் னுமும்மை விகாரத்தால் தொக்கது. பாராமுலையெனவும் பாடம்; அதற்குத் தமது பீடும் பிறரெவ்வமும் பாராதமுலையென்க. மருங்கு இழவல் - இடையை இழவாதே. கொள்வரென்றும் கொள்வையென்றும் பாடம். 'கடல்புக்கு' என்ற கவி முதலியமூன்றும் சாயல்வரியென்று சில மூலப்பிரதிகளில் எழுதப்பட்டுள்ளன.

உ௦. பவள உலக்கை - பவளத்தாலாகிய உலக்கை. தவள

முத்தம் - வெண் மையாகிய முத்து. குறவாள் - குற்றுவாள். கண் குவளை அல்ல - கண்கள் குவளைக ளல்ல—நிறத்தாற் குவளையென்னவேண்டா. உலக்கையைக் கையாற்பற்றி முத்தத்தைக் குறுவாள்கண்கள் குவளையல்ல; கொடிய கொடியவென்க. பின்னுள்ள செய்யுளிரண்டற்கும் இப்படியே பொருள்கொள்க.

உக. நீழல் நடப்பாளென இயையும். அன்னம் நடப்ப - தான் நடத்தலைப் பார்த்து அன்னம் நடக்கும்படி; தன் நடைக்கஞ்சி அன்னமோடும்படியென்று மாம். கொன்னேவெய்ய - மிகக்கொடியன.

உஉ. கள்வாய்நீலம் - தேனை வாயினிடத்தேயுடைய நீலம். புள்வாயுணங்கல்உணங்கல் வாய்ப் புள்—உணங்கலிடத்துவரும் பறவைகள். கடிவாள் - ஓட்டுவாள்.

கஅ: நம்பியகம்.
பக். 45. மு

## எ.—கானல் வரி.

கஅ௫

புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
வெள்வே லல்ல வெய்ய வெய்ய.

(௬)

வேறு.

இது, காமஞ்சாலா இளமையோள்வயின்
ஏமஞ்சாலா இடும்பையெய்தியோன் சொல்லியது.

உஙு. சொன்மட வன்னஞ் சொன்னடை யொவ்வாய்
சொன்மட வன்னஞ் சொன்னடை யொவ்வாய்
ஊர்திரைநீர் வேலி யுழக்கித் திரிவாள்பின்
சென்மட வன்னஞ் சொன்னடை யொவ்வாய்.

(எ)

கட்டுரை.

உச. ஆங்குக், கானல்வரிப் பாடல்கேட்ட மானெடுங்கண் மாதவியு
மன்னுமோர் குறிப்புண் டிவன் றன்னிலை மயங்கினானெனக்
கலவியான் மகிழ்ந்தாள்போற் புலவியால் யாழ்வாங்கித்
தானுமோர் குறிப்பினள்போற் கானல்வரிப் பாடற்பாணி
நிலத்தெய்வம் வியப்பெய்த நீணிலத்தோர் மனமகிழக்
கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தாற் பாடத்தொடங்குமன்.

---

———————— ‘பவளவுலக்கை’ முதலியமூன்றும் கந்தருவமார்க்கத்தால் இடைமடக்கிவந்தன. இம்மூன்றும் தள்ளல்வரியென்று சிலபிரதியில் எழுதப்பட்டுள்ளன.

உங. சொல் மடவன்னம் - புலவர்களால் உவமையாகச்சொல்லப்படும் மடவன்னமே. அன்னம் - விளி. சொல் நடை ஒவ்வாய் - உன்னடையைக்காட்டி லுஞ்

சிறந்ததென்று புகழ்ந்துசொல்லப்படும் இவள்நடையை நீ ஒவ்வாய். ஊர் திரை நீர் வேலி உழக்கித் திரிவாள் - பரக்கின்ற அலைகளையுடைய கடலாற்சூழப் பட்ட உலகத்திலுள்ளாரைவென்று விளையாட்டுவிருப்பினாலோடுவாள்; நீர்வேலி - நெய்தனிலமுமாம். திரிவாள்பின் செல்லுகின்ற அன்னமே, இவள் விளையாடுங் காலத்து இவள்நடையை உன்னடை ஒக்குமென்று நீ கருதுவையாயினும், இவள் விளையாட்டொழிந்து தன்னியல்பாற் செல்லுங்காலத்து இவள்நடையை உன் னடை ஒவ்வாதாதலால், இனிப் பின்செல்லாதிருக்கக் கடவையென்பதாம். இக் கவியும் கந்தருவமார்க்கத்தால் அடிமடக்கிவந்தது. பின், சொன்மடவன்னமென் றும்பாடம்.

உச. மன்னும் ஓர் குறிப்பு உண்டு - அவ்விடத்துக் கோவலன்வாசித்த உருக் கள் களவுப்புணர்ச்சியில் தலைமகன்கூறிய கூற்றாயிருத்தலின், இவன் தன்மேலன் பிலன்; உள்ளத்து நிலைபெற்ற வேறோர்குறிப்பு ஒன்றுண்டு. இவன் தன் நிலை மய ங்கினனென - இவன் தன்றன்மை வேறுபட்டானென்று புலந்து. புலவியால் - அப்புலவியால்; புலவி - இளையகலாம்; புலவியால் வாங்கியென்க. கலவியால் மகிழ்ந்தாள்போல் - அப்புலவியைப் புலப்படுத்தாமற் கலவியால் மனமகிழ்ந்தாள் போல. யாழ்வாங்கி - கோவலன்கையினின்றும் யாழைவாங்கி. தானும் ஓர் குறிப் பினள் போல் - தான் வேறுகுறிப்பு இலளாயினும் அவன் வேறுகுறிப்பினனாகப் பாடினமையின், தானும் வேறுகுறிப்புடையாள்போல. நிலத்தெய்வம் - வருணன்.



## ஆற்றுவரி, வேறு.

உரு. மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்

கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தவெல்லா நின்கணவன்'
திருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன்வாழி காவேரி. (க) உசு. பூவார் சோலை மயிலாடப் புரிந்து குயில்க ளிசைபாடக்
காமர் மாலை யருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை யருகசைய நடந்த வெல்லா நின் கணவன்
நாம வேலின் றிறங்கண்டே யறிந்தேன் வாழி காவேரி. (உ) உஎ. வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி
யூழியுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியாதொழுக லுயிரோம்பு
மாழி யாள்வான் பகல்வெய்யோ னருளே வாழி காவேரி. (ங)

## சார்த்துவரி. வேறு.

இது, கையுறைமறை.

உஅ. திங்கதிர் வாண்முகத்தாள் செவ்வாய் மணிமுறுவ லொவ்வாவேனும்
வாங்குநீர் முத்தென்று வைகலு மான்மகன்போல் வருதி ராய

---

கலத்தொடுபுணர்ந்தமைந்த கண்டத்தாற் பாடத் தொடங்குமன் - யாழின் எழா லோடுகலந்து ஒன்றுபட்ட தனது மிடற்றாற் பாடத்தொடங்குவான். மாதவியும் புலவியால் யாழ்வாங்கிப்

பாடற்பாணி பாடத்தொடங்குமெனமுடிக்க. பாடல் கேட்டெனவும், கண்டத்தாற் பாமெனெனவும் பாடம்.

உரு. வண்டு - வண்டும், வளையலும். பூவாடை - பூவாகிய ஆடையும், பூத்தொழி லமைந்த ஆடையும். கயற்கண் - கயலாகியகண்ணும், கயல்போன்றகண்ணும். ஒல்கி - அசைந்து, ஒதுங்கி. ஒதுங்குதல் மகளிர்குணம். இது சிலேடை. கணவன் - நண்டுச் சோழன். வளையாமையேயென்னும் தேற்றேகாரம் தொக்கது. காவேரி, நடந்ததெல்லாம் வளையாமையே ; யான் அதனை அறிந்தேனெனமுடிக்க.

உசு. புரிந்து - விரும்பி. காமர் - விருப்பம். நாமம் - அச்சம் ; உரிச்சொல் நறுதிரிந்தது ; புகழுமாம் . வேலின் திறங்கண்டு - வேலின்வன்மையைக்கண்டு= இனிப் பிறரால் வருத்தமில்லையென்றறிந்து. கண்டே, ஏகாரம் - தேற்றம். காவேரி, நீ நடந்ததெல்லாம் வேலின்றிறங்கண்டே ; அதனை யானறிந்தேனென முடிக்க. மயிலாலவெனவும், குழல்களிசைபாடவெனவும் படம்.

உஎ. வளநாடு - சோழநாடு. மகவாய் - மகவாக ; எச்சத்திரிபு. ஆழியாள்வான் - சக்கரவர்த்தி. பகல்வெய்யோன் - நடுவுநிலைமையைவிரும்புவோன். காவேரி, நீ ஒழியாதொழுகல் வெய்யோனருளேயெனமுடிக்க. உலகோம்புமெனவும்பாடம்.

‘ மருங்குவண்டு’ முதலிய மூன்றும் கந்தருவமார்க்கத்தால் இடைமடக்கிவந்தன.

உஅ. திங்கதிர் - மதி. மணிமுறுவல் - அழகியமுறுவல்.
ஒவ்வாவேனும் -
நீர் சொரேக்கும் முத்துக்கள் முறுவலை ஒவ்வாவாயினும்.
வாங்கும் நீர் முத்தி ந-க: மு. தொல்.

பொருள். இளம். பக். 193
ஷ ந. பக். 303
இறை. பக். 72.

## எ.—கானல்வரி.

கஅஎ

வீங்கோதந் தந்து விளங்கொளிய வெண்முத்தம்
விரைசூழ் கானற் பூங்கோதை கொண்டு விலைஞர்போன்
மீளும் புகாரே யெம்மூர்.(க)

இது, தோழியிற்கூட்டங்கூடியபின்பு வாரா
வரைவலென்றற்குத்

தோழிகூறியது.

உகூ. மறையின் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து மடவார்
செங்கை
யிறைவளைக ளேற்றுவதை யேன்மூய மெங்ஙனம்யாங்
கறிகோ மைய
நிறைமதியு மீனு மெனவன்ன நீள்புன்னை யரும்பிப் பூத்த
பொறைமலிபூங் கொம்பேற வண்டாம்ப லூதும் புகாரே யெம்மூர்.

௩௦. உண்டாரை வென்ற ஆணொளியாப் பாக்கத்துளுறையொன்றின்றித்
தண்டாநோய் மாதர் தலைத்தருதி யென்பதியாங் கறிகோமைய
வண்டா திரையகழ்ப்பக மையான் மணன்முகந்து மதிமே னீண்ட
புண்டோய்வே னீர்மல்க மாதர் கடறூர்க்கும் புகாரே யெம்மூர்.()

திணைநிலைவரி. வேறு.

இஃது, அறியேனென்று வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தது.

௩௧. புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி
யிணர்ததைபூங் கான லென்னையு நோக்கி
புணர்வொழியப் போனா னொலிதிரைநீர்ச் சேர்ப்பன்
வணர்சுரியைம் பாலோய் வண்ணமுணை ரேனால்.
(௧)

---

என்று - நீர் இம்முத்துக்களை வாங்குமினென்று. மான்மகன் - மயங்கியமகன்; காமனுமாம். ஓதம் - கடல். ஓதம் வெண்முத்தைத்தந்து கானற்கோதைகொண்டு விலைஞர்போல் மீளும் புகாரெனக. ஓதம் - எழுவாய். விலைஞர் - விற்போர் ஒன்றைக்கொடுத்து ஒன்றைப்பெறுவது விலைஞருக்கியல்பு. ஒளிர்வெண்முத்த மென்றும் பாடம்.

௨௯. மறை - இரகசியம். மண ந்தாராகியமடவாரை ; மடவாரத, உருபு மயக்கம். பாக்கம் - கடற்கரையூர். இறை -

தங்குதல். மடவாரதுசெங்கை வளேக நேற்றுவதை. அன்னம் பூத்த புன்னேக்கொம்பேற, அவ்வன்னத்தையும் அரும்பு முதலியவற்றையும் முறையே நிறைமதியும் மீனுமாகக்கருதி ஆம்பல் மலரும் புகாரென்க. வண்டூதுமெனவே மலர்தல் பெறப்பட்டது.

கூo. உண்டானை ; வெல் நரு - உண்டவர்களைத் தன்கடுமையால் வெல்லும்

நரு. ஊண் ஒளியா - உண்ட உணவை மறையாத. உறை - மருந்து. தண்டா நோய் - அமையாத காமநோய். வண்டல் - மகளிர்விளேயாட்டு ; வண்டால் - விகாரம். மதியும், வேலும் உருவகம். மாதர், தமதுவண்டலைத் திரையழிப்பக் கையால் மணலேமுகந்து கடலைத்தூர்க்கும் புகாரென்க ; இது, " முன்னைத்தஞ்சிற் றில்" என்னுங் கவியில் ' அன்னைக் குரைப்பே னறிவாய் கடலே' என்பதுபோலப் பெண்களுடைய பேதைமைத்தன்மையை நன்குபுலப்படுத்திநின்றது.

நக. ஆடும் - விளையாடும். அலவன் - நண்டு. பொறியலவன் - " புள்ளிக் கள்வன்" என்பதுபோலநின்றது. இணர் - பூங்கொத்து. உணர்வு ஒழிய - அறிவு



இது, காமமிக்க கழிபடர்கிளவி.

௩௨. தம்முடைய தண்ணளியுந் தாமுந்த மான்றேரு
மெம்மை நினையாது விட்டாரே விட்டகல்க
வம்மெ னிணர வடம்புகா ளன்னங்கா
ணம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால். (உ)

இதுவுமது.

௩௩. புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழவாய் துயிலப் பெறுதியா

வின்கள்வாய் செய்தானீ யெய்துங் கணவினுள்
வன் ஞார் கானல வரக்கண் டறிதியோ.
(ரு)

இதுவுமது.

ருச. புள்ளியன்மான் றேராழி போன வழியெல்லாந்
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற
றென்செய்கோ
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற்
றெம்மொடுங்
குள்ளாரோ டுள்ளா யுணராய்மற்
றென்செய்கோ. (சு)————————————

———————————— தன்னைவிட்டுநீங்க.
வணர்சுரி ஐம்பாலோய் - வளைந்த கடைகுழன்ற கூந்தலையுடையாய்.
சேர்ப்பன்வஞ்ணமென்க. இப்பாட்டின்கருத்து,
[திருக்கோவையார், அச] "நீகண் டனையெனின் வாழலை கேரிழை
யம்பலத்தான், சேய்கண் டனயன்சென் ருங்கோ ரலவன்றன்
சீர்ப்பெடையின், வாய்வண் டனையதொர் நாவற் கனிநனி
நல்கக்கண்டு, பேய்க ண் டனையதொ ன் றாகிநின் றனை ப்
பெருந்தகையே" என் பதுபோல நின்றதுகாண்க.

ருஉ. தண்ணளியுந் தாமுந்த மான்றேருமென்று பின்பு
சிலசொல்ல எண்ணி யவள் அதனைக் காதன்மிகுதியான்மறந்து
கலங்கி, விட்டாரென்றாள் ; "மடமா மயிலே குயிலே மழலை,
நடைமா னனமே நலமார் கிளியே, யுடனு டுமெனை யனை யென்
றுருகாத், தொடையாழ் மழலைம் மொழிசோர்ந் தனளே"
என்றாருமுளர். [சீவகசிந்தாமணி, கேம, கசுடு.] அன்றி
உயர்திணையையும் அஃறிணையையுமெண் ணி உயர்திணையான்
முடித்தாரென்றுமாம். மறக்கமாட்டேமென்றது ஒருசொல்.

ருரு. புன்கண் - துன்பம். துயிலுதல் - குவிதல்.

இன்கள்வாய்கெய்தா லென்றான் ; தன்கண் துயிலாதுவருந்த அது கவற்சியின்றித் துயிறலின், நீ கள் ளுண்டுமயங்கினையாதலாற் கேட்டுஞ் சொல்லமாட்டாயாயினையென்று. எய்துங் கனவினுளென்றாள் ; உறங்குவார்க்குக் கனவுமுண்டென்றுகருதி.

௩௯௪. புன் இயல் மான் - பறவையின் இயல்பையுடையகுதிரை ; விரைந்து செல்லுவனவென்றபடி. ஆழி - உருளை. வழியெல்லாஞ்சிதைத்தாய். என்செய்கு - என்செய்வேன் ; தனித்தன்மை ; ஒகாரம் ஈற்றசை. ஈங்கு உள்ளார் - ஈங்குள்ளாராகிய அலர்தூற்றும் அயலார். உணராய் - நீ அவர்களோடுள்ளாயாதலால் என் நோயறியாய். அன்றி, எம்மொடீங் குள்ளாரோ டுள்ளாயென்பதற்கு எம்மனம் விட்டுநீங்காத தலைவரோடு உள்ளாயாதலாலென்றுமாம்.

௩௨. ௩-ம் அடி. தொல். செய். ௩. பக்.
" ... ௯-௨ ; தொல். சே. ப. 51 227
" மு : இ-வி. பக். ௨௬௪.

௩௩ ,

மு : தொல். பொ. பக். 260
" இறை. பக். ௯௨௭.
" ௩ 1
௯௦௭-அ

ரு. மு. தொல். செய். ரு.
ப. உஉ௭

ரு௲௭ (க-உ) இறை. பக். ௲௭௰

எ.—கானல் வரி.

க௮க

இதுவுமது.

௩௫. கோர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே.

(௫)

இதுவுமது.

௩௬. நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்ந்தாயவாழி கடலோத
மூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்மற் றெம்மோடு
தீர்ந்தாய்போற் றீர்ந்திலையால் வாழி கடலோதம்.

## மயங்குதிணைநிலைவரி. வேறு.

இஃது, அலரறிவுறீஇ வரைவு கடாயது.

ருஎ. நன்னித் திலத்தின் பூணணிந்து நலஞ்சார் பவளக கலையுடுத்துச
செங்கெற் பழனக் கழனிதொறுந் திரையு லாவு கடற்சேர்ப்ப
புன்னைப் பொதும்பர் மகரத்தின் கொடியோ னெய்த புதுப்புண்க
ளென்னைக் காணு வகைமறைத்தா லன்னை 'காணி னென்செய்கோ.

இதுவுமது.

ருஅ. வாரித் தரள நகைசெய்து வண்செம் பவள வாய்மலர்ந்து
சேரிப் பரதர் வலைமுன்றிற் றிரையு லாவு கடற்சேர்ப்ப
மாரிப் பீரத் தலர்வண்ண மடவாள் கொள்ளக் கடவுள்வரைந்
தாரிக் கொடுமை செய்தாரென் றன்னை யறியி னென்செய்கோ.(உ)

இதுவுமது.

ருகூ. புலவுற் றிரங்கி யதுநீங்கப் பொழிறறண் டலையிற் புகுந்துதிர்ந்த
கலவைச் செம்மன் மணங்கமழத் திரையு லாவு கடற்சேர்ப்ப———

ரூடு. சேர்ந்த - கம்மோடுபொருந்திய; பிரியேனென்று ளமைந்தவென்று மாம். நேமி - உருளை. ஓதம் - வெள்ளம். இதுவென்றது பிரிதலை. பிரிவென் னவும் அஞ்சுகின்றாளாதலின், இதுவெனச் சுட்டியொழிந்தாள்.

ரூசு. நேமி நெடு திண்டேர் - வட்டக்காலாற்சிறந்த நெடிய திண்ணியதேர். நீர்ந்தாய் போல் நீர்ந்திலை - உறவுபோலிருந்து உறவாயினுயில்லை. இது, கந்தருவ மார்க்கத்தால் இடைமடக்கிவந்தது.

ரூஎ. பொதும்பர் - பொதும்பரில்=சோலையில். பொதும்பர் தாதுக்களையுதிர்த்துப் புதுப்புண்களைமறைத்தாலென்றுமாம். என்செய்கு - என்செய்வேன்.

ரூஅ. வாரித்தரளம் - கடல்முத்து. பீரத்தலர் - பீர்க்கின் அலர். கடவுள் வரைந்து - கடவுளைவழிபட்டு. அறியின் - ஆராய்ந்தறியின். கொடுநோய்செய்தா ரென்றும் பாடம்.

ரூகூ. புலவுற்றிரங்கியது நீங்க - புலால்நாற்றத்தையடைந்து முழங்கிக்கொண் டிருத்தலொழிய; புலத்தலையடைந்து வருந்தியது நீங்கவென்றும் ஒருபொருள் கசுo

சிலப்பதிகாரம்

பலவுற் றொருநோய் துணியாத படர்நோய் மடவா டனியுழப்ப
வலவுற் றிரங்கி யறியாநோ யன்னை யறியி

வேறு.

லென்செய்கோ. (ரு)

இது, மாலைப்பொழுதுகண்டு ஆற்றுளாகிய தலைமகள்

தோழிக்குரைத்தது. ௪௰. இளையிருள் பரந்ததுவே
யெற்செய்வான் மறைந்தனனே
களைவரும் புலம்புநீர் கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழ் மலர்க்குழலாய் தணந்தார்நாட்
டுளதாங்கொல்
வளைநெகிழ வெரிசிந்தி வந்தவிம் மருண்மாலை.
(௪)

இதுவுமது.

௪௧. கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
யெதிர்மலர் புரையுண்க ணெவ்வநீ ருகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய் போனார்நாட் டுளதாங்கொல்
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தவிம் மருண்மாலை.
(௫)

இதுவுமது.

௪௨. பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான்
மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீ ருகுத்தனவே
துறுமல ரவிழ்குழலாய் துறந்தார்நாட்
டுளதாங்கொல்
மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை.
(௬)

## சாயல்வரி. வேறு.

இது, மெலிதாகச்சொல்லிக் குறை நயப்பித்தல்;
ஆற்றுவித்தற்பொருட்டுத் தோழி இயற்பழிக்கத்
தலைமகள்
இயற்பட மொழிந்ததூஉமாம்.

சரு. கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்த லழித்துப் போனா ரொருவர்
பொய்த லழித்துப் போனா ரவர்நம்
மையன் மனம்விட் டகல்வா ரல்லர்.

(க)

______________________________

______________________________ தோன்றிற்று. கலவை - பலவுங்கலந்தது. செம்மல் - பழம்பூ. பலவுற்று - பலநோயிலேபொருந்தி. படர் - நினைவு. அலவுற்று - மெலிந்து.

௪௦. இளையிருள் - இளைய இருள்; விகாரம். எற்செய்வான் - சூரியன். களை வரும் புலம்புநீர் - களைதற்கரிய தனிமைவருத்தத்தால்வந்த நீர்; புலம்பு - தனிமை. மாலை உளதாங்கொலெனவியையும்.

௪க. எதிர்மலர் - செவ்விமலர்; எதிர்த்துப்பிணைத்தமலரென்றும், தோற்றுகின்ற மலரொன்றுமாம். எவ்வம் - துன்பம்.

௪உ. பாட்டடங்கின - ஒலித்தலடங்கின. நிறைநிலா நோய்கூர - நிறைந்தநில்லாவாய் நோய்கள் அதிகரியாநிற்க. மறவையாய் - மறத்தையுடைத்தாய். மயங்கு இணைநிலைவரியென்றது வருந்தினவொழுக்கம்.

௪ரு. பொய்தல் அழித்து - விளையாட்டைமறப்பித்து. நம்மையன்மனமென்றான்; ஒற்றுமையால்.

## எ.—கானல் வரி.

இதுவுமது.

சச. கானல் வேலிக் கழிவாய் வந்து
நீநல் கென்றே நின்றா ரொருவர்
நீநல் கென்றே நின்றா ரவர்நம்
மானேர் நோக்க மறப்பா ரல்லர்.

(உ)

இதுவுமது.

சரு. அன்னந் துணையோ டாடக் கண்டு
நென்ன ணோக்கி நின்றா ரொருவர்
நென்ன ணோக்கி நின்றா ரவர்நம்
பொன்னேர் சுணங்கிற் போவா ரல்லர்.

(ங)

முகமில்வரி. வேறு.

இது, காமமிக்க கழிபடர்கிளவி.

சசா. அடையல் குருகே யடையலெங் கானல்
அடையல் குருகே யடையலெங் கானல்
உடைதிரைநீர்ச் சேர்ப்பற் குறுநோ
யுரையாய்
அடையல் குருகே யடையலெங் கானல்.

வேறு.

சஎ. ஆங்கனம்பாடிய வாயிழை பின்னருங்
காந்தண் மெல்விரற் கைக்கிளை சேர்குரற்
றீந்தொடைச் செவ்வழிப் பாலை
யிசையெழீஇப்

பாங்கினிற் பாடியோர் பண்ணுப்
பெயர்த்தாள்.

வேறு.

இது, மாலைப்பொழுதுகண்டு தலைவிகூறியது.

சஅ. நுளையர் விளரி நொடிதருந்தீம் பாலை
ஊ /

யிளிகிளையிற் கொள்ள விறுத்தாயான்
மாலை

---

சச. நீ நல்கு என்றே நின்றார் - நீ
அருள்செய்வாயென்றுசொல்லியேநின்றார்.

சரு. சுணங்கின் - சுணங்குபோல. 'கைதைவேலி'
முதலியமூன்றும் கந்தருவமார்க்கத்தால் இடைமடக்கிவந்தன.

சசு. உரையாய் - சொல்லாதிருக்கின்றனை; அடையல் -
அடையாதே. சேர்ப்பற்கு நோய் உரையாய்; ஆதலால், குருகே
எங்கானலில்வந்து அடையலென முடிக்க. இதுவும்
கந்தருவமார்க்கத்தால் அடிமடக்கிவந்தது.

சஎ. ஆங்கனம்பாடிய - அவன்பாடினாற்போலப்பாடிய.
எழீஇ - எழுப்பி. பண்ணு - பண்ணை.

சஅ. விளரிநொடிதருந்தீம்பாலை - விளரிப்பாலை;
கொடிதருதல் - சொல்லுதல். இளி - யாழ்நரம்புள் ஒன்று. கிளை
- கைக்கிளையென்னுநரம்பு. நின்றநரம் கசுஉ சி

லப்பதிகாரம்.

யினிகிளையிற் கொள்ள விறுத்தாய்மன் னியேற்
கொளவல்லா யென்னுவி கொள்வாழி மாலை.

(க)

இதுவுமது.

சக. பிரிந்தார் பரிந்துரைத்த பேரருளி னீழ
லிருந்தேங்கி வாழ்வா ருயிர்ப்புறத்தாய் மாலை
யுயிர்ப்புறத்தாய் நீயாகி லுள்ளாற்று வேந்த
னெயிற்புறத்து வேந்தனோ டென்னாதி மாலை.

(உ)

இதுவுமது.

ரு0. பையுளோய் கூரப் பகல்செய்வான் போய்வீழ
வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை
மாலைநீ யாயின் மணந்தா ரவராயின்
ஞாலமோ நல்கூர்ந் ததுவாழி மாலை.

(௩)

வேறு.

இது, வரைவுநீட்டித்தவிடத்துத் தலைமகன
சிறைபுறத் தானாகக்கூறியது.

ருக. தீத்துழை இ வந்தவிச் செல்லன் மருண்மாலை
தூக்காது துணிந்தவித் துயரெஞ்சு கிளவியாற்
பூக்கமழ் கானலிற் பொய்ச்சூள்
பொறுக்கென்று
மாக்கடற் றெய்வநின் மலரடி வணங்குதும்.

---

—————— பிற்கு ஆரூரம்பு பகையாகலின்,
இளிகிளையிற்கோடல் கூடமென்னும் குற்றமென்பர்.

கொளவல்லாய் - கொள்ளுதற்குவல்லாய்.
கொளேவல்லாயெனவும் பாடம்.

௪௯. பரிந்து - அன்புடையராய். ஏங்கி - வருந்தி. உயிர்ப்புறத்தாய் - உயிரைச்சூழ்ந்தாய். உள்ளாற்றுவேந்தன் - சோர்சியான். எயிற்புறத்துவேந்தன் - உழிஞையான்; வேந்தனோடு - வேந்தனுக்கு. உள்ளாற்று வேந்தனுடைய எயிற்புறத்துவேந்தனுக்கும் உனக்கும் என்னவுறவுண்டு.

௫௦. வையமோகண்புதைப்ப - வையத்துள்ளார் கண்புதைப்ப. நீ அவரென்னுஞ்சொற்கள் கொடுமைகுறித்துநின்றன. ஞாலமோ நல்கூர்ந்ததென்றாள்; தன்னோய் எல்லார்க்குமுண்டென்று தனக்குத் தோற்றுதலால். இது 'தான்சாவ உலகுகவிழும்' என்னும் பழமொழிபோல நின்றது. வைதனோயென்றும் பாடம்.

௫௧. துழைஇ - பரப்பி. செல்லல் - வருத்தம். தூக்காது - நம்மைவருத்துமென்று கருதாது. துணிந்த இத்துயர் எஞ்சு கிளவியால் - துணிதற்குக்காரணமான நல்லவார்த்தையோடே. அஃதாவது நின்னிற்பிரியேனென்றது. கானலிற் கூறியவென ஒருசொல் வருவிக்க. பொய்ச்சூள் - பொய்ச்சபதம்.

## எ.—கானல்வரி.

௧௯௩.

### வேறு.

௫௨. எனக்கேட்டு,
கானல்வரி யான்பாடத் தானொன்றின்மேன் மனம்வைத்து
மாயப்பொய் பலகூட்டு மாயத்தாள் பாடினளென
யாழிசைமேல் வைத்துத்த னூழ்வினைவந் துருத்ததாகலி

னுவவுற்ற திங்கண் முகத்தாளைக் கவவுக்கை
ஞெகிழ்ந்தனனாய்ப் பொழுதீங்குக் கழிந்ததாகலி
னெழுதுமென் றுடனெழா தேவலாள ருடன்சூழ்தரக்
கோவலன்றான் போனபின்னர்த் தாதவிழ் மலர்ச்சோலை
யோதையாயத் தொலியவித்துக் கையற்ற நெஞ்சினளாய்
வையத்தி னுள்புக்குக் காதலனுட னன்றியே மாதவிதன்
மனைபுக்காள் ஆங்கு,
மாயிரு ஞாலத் தரசு தலைவணக்குஞ்
சூழி யானைச் சுடர்வாட் செம்பியன்
மாலைவெண் குடைகவிப்ப
வாழி மால்வரை யகவயி னங்கென.

## கானல்வரி முற்றிற்று.

---

ருஉ. எனக்கேட்டு - என்று மாதவிபாடக்கேட்டு. கானல்வரி யான் பாடத் தான் ஒன்றின்மேல் மனம் வைத்து மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள் பாடினாளென - கான் கானல்வரிபாடத் தான் அப்படிப்பாடாமல் என்னையொழிய வே றொன்றின்மேல் மனம்வைத்து வஞ்சனையுடன்கூடிய பொய்கள் பலவற்றைறக்கூட்டும் மாயத்தாளாகிப் பாடினாளென்று கோவலன் எண்ணி. யாழிசைமேல்வைத்துத் தன் ஊழ்வினை உருத்ததாகலின், ஞெகிழ்ந்தனனாய் உடனெழாது கோவலன் போனபின்னரென இயையும். உருத்தது - கோபித்தது. ஞெகிழ்தல் - நெகிழ்தல். கவவு - அகத்திடுதல். கையற்ற - செயலற்ற. வையம் - வண்டி.

ஆங்கு அசை. ஆழிமால்வரை - சக்கரவாளகிரி. அகவயிற் கவிப்பவெனப் புக்காளெனவியையும்.

இக்கானல்வரிப்பொருட்குறிப்பு, பெரும்பாலும் இந்நூல் அரும்பதவுரையைத் தழுவியே எழுதப்பட்டது.

---

# ௮ எட்டாவது வேனிற்காதை.

நெடியோன் குன்றமுந் தொடியோள்
பௌவமுந் தமிழ்வரம் பறுத்த தண்புன
னாட்டுமாட மதுரையும் பீடா ருறந்தையுங்
கலிகெழு வஞ்சியு மொலிபுனற் புகாரு
மரசுவீற் றிருந்த வுரைசால் சிறப்பின்
மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
வின்னிள வேனில் வந்த திவணென
வளங்கெழு பொதியின் மாமுனி பயந்த
விளங்காற் றூத னிசைத்தன னாதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை புகாஅ
கோலங் கொள்ளுமென் பதுபோற் கொடி
மிடை சோலைக் குயிலோ னென்னும்
படையுள் படுவோன் பணிமொழி கூற

லவிழ் கானற் கடல்விளை யாட்டினுட் கரு
கோவல னூடக் கூடா தேகிய . மாமலர்
நெடுங்கண் மாதவி விரும்பி வானுற நிவந்த
மேனிலை மருங்கின் வேனிற் பள்ளி யேறி
மாணிழை
தென்கடன் முத்துந் தென்மலைச் சந்துந்
தன்கட னிறுக்குந் தன்மைய வாகலிற்
கொங்கை முன்றிற் குங்கும வளாகத்து
மையறு சிறப்பிற் கையுறை யேந்தி யதிரா
மரபின் யாழ்கை வாங்கி
மதுர கீதம் பாடினண் மயங்கி
யொன்பான் விருத்தியுட் டலைக்கண்
விருத்தி நன்பா லமைந்த விருக்கைய ளாகி
வலக்கைப் பதாகை கோட்டொடு சேர்த்தி
யிடக்கை நால்விரன் மடக்கத் தழீஇச்
செம்பகை யார்ப்பே யதிர்வே கூடம்
வெம்பகை நீக்கும் விரகுளி யறிந்து

அ.—வேனிற்காதை.

௧௧௫

பிழையா மரபி னீரேழ் கோவையை
யுழைமுதற் கைக்கிளை யிறுவாய் கட்டி
யிணைகிளை பகைநட் பென்றிந் நான்கி
னிசைபுணர் குறிநிலை யெய்த நோக்கிக்

குரல்வா யிளிவாய்க்* கேட்டன ளன்றியும்
வரன்முறை மருங்கி னைந்தினு மேழினு
முறைமுத லாகவு முறையீ றாகவுங்
†குரன்முத லாகவுங் குரலீ றாகவு
மகநிலை மருதமும் புறநிலை மருதமு
மருகியன் மருதமும் பெருகியன் மருதமு
நால்வகைச் சாதியு நலம்பெற நோக்கி
மூவகை யியக்கி முறையுளிக் கழிப்பித்
திறத்து வழிப்படூஉந் தென்றிசைக் கரணத்துப்
புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கிச்
சண்பக மாதவி தமாலங் கருமுகை
வெண்பூ மல்லிகை வேரொடு மிடைந்த
வஞ்செங் கழுநீ ராயிதழ்க் கத்திகை
யெதிர்பூஞ் செவ்வி யிடைநிலத் தியாத்த
முதிர்பூந் தாழை முடங்கல்வெண் டோட்டு
விரைமலர் வாளியின் வியனில மாண்ட
வொருதனிச் செங்கோ லொருமக ளாணையி
னொருமுக மன்றி யுலகுதொழு திறைஞ்சுந்
திருமுகம் போக்குஞ் செவ்விய னாகி
யலத்தகக் கொழுஞ்சே றளைஇ யயலது
பித்திகைக் கொழுமுகை யாணிகைக் கொண்டு
மன்னுயி ரெல்லா மகிழ்துணை புணர்க்கு
மின்னிள வேனி லிளவர சாள
‡னந்திப் போதகத் தரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனுஞ் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினுங்

தணந்த மாக்க டந்துணை மறப்பினு
நறும்பூ வாளியி னல்லுயிர் கோட
லிறும்பூ தன்றிஃ தறிந்தீ யின்னென

---

* கொண்டனளெனவும் பாடம்.
† குரல்குரலாகவுமெனவும் பாடம்.
‡ அந்தியம் போதகமெனவும் பாடம்.



வெண்ணெண் கலையு மிசைந்துடன் போகப் கூடு
பண்ணுந் திறனும் புறங்கூறு நாவிற் றளைவா
யவிழ்ந்த தனிப்படு காமத்து விளையா மழலையின்
விரித்துரை யெழுதிப் பசந்த மேனியள் படருறு
மாலையின் வசந்த மாலையை வருகெனக் கூஉய்த்
தூமலர் மாலையிற் றுணிபொரு ளெல்லாங்
கோவலற் களித்துக் கொணர்க வீங்கென மாலை
வாங்கிய வேலரி நெடுங்கண் கூல மறுகிற்
கோவலற் களிப்பத் திலகமு மளகமுஞ்
சிறுகருஞ் சிலையுங் குவளையுங் குமிழுங்
கொவ்வையுங் கொண்ட மாதர் வாண்முகத்து
மதைஇய நோக்கமொடு காதலிற் றோன்றிய
கண்கூடு வரியும் புயல்சுமந்து வருந்திப்

பொழிகதிர் மதியத்துக் கயலுலாய்த் திரிதருங்
காமர் செவ்விமிற் கூ0 பாகுபொதி பவளந்
திறந்து நிலாவுதவிய நாகிள முத்தி னகைநலங்
காட்டி வருகென வந்து போகெனப் போகிய
கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமு மந்தி
மாலை வந்ததற் கிரங்கிச்
கூ௫ சிந்தைநோய் கூருமென் சிறுமை நோக்கிக்
கிளிபுரை கிளவியு மடவன நடையுங் களிமயிற்
சாயலுங் கரந்தன ளாகிச் செருவேன் நெடுங்கட்
சிலதியர் கோலத் தொருதனி வந்த வுள்வரி
யாடலுஞ் கூ0 சிலம்புவாய் புலம்பவு மேகலை
யார்ப்பவுங் கலம்பெறு நுசுப்பினள் காத
னோக்கமொடு திறத்துவே றுயவென் சிறுமை
நோக்கியும் புறத்துநின் றாடிய புன்புற வரியுங்
கோதையுங் குழலுந் தாதுசே ரளகமு கூ௫ மெ
ருகாழ் முத்தமுந் திருமுலைத் தடமு மின்னிடை
ட வருத்த நன்னுத றோன்றிச் சிறுகுறுந்
தொழிலியர் மறுமொழி யுய்ப்பப் புணர்ச்சியுட்
பொதிந்த கலாந்தரு கிளவியி னிருபுற
மொழிப்பொருள் கேட்டன ளாகித்

அ.—வேனிற்காதை.

கசுஎ

க00 தளர்ந்த சாயற் றகைமென் கூந்தல்

கிளர்ந்துவே றாகிய கிளர்வரிக் கோலமும்
பிரிந்துறை காலத்துப் பரிந்தன ளாகி
யென்னுறு கிளைகட்குந் தன்னுறு துயரந்
தேர்ந்துதேர்ந் துரைத்த தேர்ச்சிவரி யன்றியும்
வண்டலர் கோதை மாலையுண் மயங்கிக்
கண்டவர்க் குரைத்த காட்சி வரியு
மடுத்தடுத் தவர்முன் மயங்கிய மயக்க
மெடுத்தவர் தீர்த்த வெடுத்துக்கோள் வரியு
மாடன் மகளே யாதவி ஞாயிழை
பாடுபெற் றனவப் பைந்தொடி தனக்கென
வணித்தோட்டுத் திருமுகத் தாயிழை யெழுதிய
மணித்தோட்டுத் திருமுக மறுத்ததற் கிரங்கி
வாடிய வுள்ளத்து வசந்த மாலை •
தோடலர் கோதைக்குத் துனைந்துசென் றுரைப்ப
மாலை வாரா ராயினு மாணிழை
காலைகாண் குவமெனக் கையறு நெஞ்சமொடு
பூமல ரமளிமிசைப் பொருந்தா தவதிந்தனள்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென.

---

க - உ. நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புன னாட்டு

நெடியோன் குன்றம் - வேங்கடமலை. தொடியோள் - பெண்பாற்பெயரரற் குமரியென்பதாயிற்று. ஆகவே தென்பாற்கண்ணதோர் ஆற்றிற்குப் பெயராம். ஆனால்,

நெடியோன்குன்றமும் தொடியோள் நதியுமென்றது பௌவமு
மென்றது என்னையெனின், முதலூழியிறுதிக்கண்
தென்மதுரையகத்துத் தலைச்சங்கத்து அகத்தியனாரும்
இறையனாரும் குமரவேளும் *முரஞ்சியூர் முடிநாகராயரும்
நிதியின்கிழவனும் என்றிவருள்ளிட்ட நாலாயிரத்து நானூற்று
நாற்பத்தொன்பதின் மர் எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும்
முதுகுருகும் களரியாவிரையுமுள் ளிட்டவற்றைப் புனைந்து
தெரிந்து நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு †இரீயினர்
காய்சினவழுதிமுதற் கடுங்கோனீறாயுள்ளார்
எண்பத்தொன்பதின்மர் ; அவருட் கவியரங்கேறினார் எழுவர்
பாண்டியருள் ஒருவன் சயமாகீர்த்தியனாகிய நிலந்
தருதிருவிற்பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்து
இரீயினான். அக்காலத்து அவர்நாட்டுத் தென்பாலிமுகத்திற்கு
வடவெல்லையாகிய பஃறுளியென்னுமாற்றிற் கும்
குமரியென்னுமாற்றிற்குமிடையே எழுநூற்றுக் காவதவாறும்
இவற்றின் நீர் மலிவானென மலிந்த ஏழ்தெங்கநாடும்
ஏழ்மதுரைநாடும் ஏழ் முன்பாலைநாடும் ஏழ்———

* முரிஞ்சியூரெனவும் பிரதிபேதமுண்டு. † இரீயினர் -
பிறவினை. ஆ௰அ



பின்பாலைநாடும் ஏழ் குன்றநாடும் ஏழ்குணகாரைநாடும் ஏழ்
குறும்பனைநாடுமென் னும் இந்த நாற்பத்தொன்பதுநாடும் குமரி
கொல்லமுதலிய பன்மலைநாடும் காடும்
நதியும் பதியும் தடநீர்க்குமரி வடபெருங்கோட்டி ன்காறும்
கடல்கொண்டொழித
லாற் குமரியாகிய பௌவமென்றாரென்றுணர்க. இஃது என்னை

பெறுமாறெனின்,
*" வடி வே லெறிந்த வான்பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்
துக், குமரிக் கோடு கொடுங்கடல் கொள்ள'' என்பதனானும் கணக்காயனார் மகனார்
நக்கீரனாருரைத்த இறையனார்பொருளுரையானும் உரையாசிரியராகிய இளம்பூரண
வடிகள் முகவுரையானும் பிறவாற்றானும்பெறுதும். அஃது அற்றாக, வடக்கின்
கண் வேங்கடமலை தெற்கின்கட் குமரிக்கடலெனக் குறியாற்கூறினவர் கீழ்
பான் மேல்பாற்கு எல்லைகூறாதது என்னையோவெனின், நெடுந்திசையாகிய வட பாற்கெல்லை குன்றமென்றும் தென்பாற்கெல்லை குமரிப்பௌவமென்றுங்கூறி னமையான் ஒழிந்ததிசைகட்கு ஒழிந்தபௌவம் எல்லையென்பதாயிற்று ; என்னை ? " வேங்கடங் குமரி தீம்புனற் பௌவமென், றிந்நான் கெல்லை தமிழது வழக்கே'' என்றார் சிகண்டியாருமாகலின். அன்றியும் வடதிசைக்கண் வடுகொழிந்த திரிபுடை மொழி பலவுளவாகலான் மலையெல்லைகூறி ஒழிந்த திசைமூன்றிற்கும் திரிபின்மை யாற் கடலெல்லைகூறினாரெனினுமமையும்.

இ - ள். வடக்கின்கண் வேங்கடமலையும் தெற்கின்கட் குமரிக்கடலும் கிழக் கின்கண்ணும் மேற்கின்கண்ணும் ஒழிந்த கடல்களுமே தமிழ்நாட்டிற்கு எல்லை யென்று கூறுபடுத்த மூவேந்தருடைய குளிர்ந்த புனலையுடைய நல்லநாட்டிடத் தென்க.

௩ - எ. மாட மதுரையும் பீடா ருறந்தையுங்

கலிகெழு வஞ்சியு மொலிபுனற் புகாரு
மரசுவீற் றிருந்த வுரைசால் சிறப்பின்
மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
வின்னிள வேனில் வந்த தீவணென

இந்நகரம் நான்கிற்கும் மாடமுதலியநான்கும் அடை.

இ - ள். மதுரையும் உறந்தையும் வஞ்சியும் புகாருமென்னும் நான்குநகரிற்கும் அரசனைத் தன் தேரும் புரவியும் யானையும் சேனையும் இச்சொன்னமுறையே வைத்து வீற்றிருந்த புகழமைந்த சிறப்பினையுடைய மாரனாகிய மன்னனுக்கு மன மகிழுந்துணையாகிய இன்பத்தைத்தரும் இளவேனிலென்னும் இளவரசன் இப்பொழுது இங்கே வந்துவிட்டானென்றென்க.

வந்தது - வருமென்னும் எதிர்காலத்தை இறந்த காலத்தாற்கூறினார்; விரைவு; என்னை? †" வாராக் காலத்து நிகழுங் காலத்து, மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி, யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல், விரைந்த பொருள வென்மனார் 'புலவர்" என்றாராகலின். இஃது என்சொல்லியவாறோவெனின், காமனுக்குத் தேர் தென்றலும், புரவி கிள்ளையும், யானை அந்தியும், சேனை மகளிருமாதலால்

---

* காடுகொண்காதை, கஅ - உ0.

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், வினையியல், சச.

அ.—வேனிற்காதை.

தேர் தென்னர்காவலும், புரவி *கின்னிகாவலும், யானை சோமான்காவலுமாக்கித் தானும் தன்சேனையும் புகாரில் வீற்றிருந்தானென்பதுகருத்து. அஃது, †"உருவி லாள னொருபெருஞ் சேனை, யிகலமி ராட்டி யெதிர்நின்ற விலக்கி" என்பதனானும், "மகர வெல்கொடி மைந்தன் சேனை, புகாறு கோலங் கொள்ளுமென் பது போல்" என மேற்கூறுதலானுமுணர்க. "திண்பரித் தென்றலந் தேருந் தார்புனை, வண்பரிக் கின்னையு மாலை யானையுங், கண்கடைப் படுகொலைக் காமர் சேனையு, மெண்படப் புகுந்தன னிரதி காந்தனே" என்றார் பிறருமெனக்கொள்க.

அ-கஅ. வளங்கெழு பொதியின் மாமுனி பயந்த
விளங்காற் றூத னிசைத்தன னாதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை
புகாறு கோலங் கொள்ளுமென் பதுபோற்
கொடியிடை சோலைக் குயிலோ னென்னும்
படையுள் படுவோன் பணிமொழி கூற

இ - ள். வளமைபொருந்திய பொதியத்துமுனிபயந்த இளங்காலாகியதூதன் குயிலோனுக்கிசைத்தனனாதலானே காமன்சேனையாயுள்ளாரெல்லாம் கோலங் கொண்மினென்னும் பொருள்பயப்பப் பூங்கொடிகண்மிடைந்த சோலையென்னும் பாசறையிலிருக்கும் அக்குயிலோனென்னும் சின்னமூதி காற்றூதன் தனக்குப் பணித்தமொழியைச் சேனைக்குக் கூறவென்க.

இளங்காற்றூதன் - தென்றலாகியதூதன்; இளைய காற்றூதனென்றுமாயிற்று. காற்றூதன் - ஒட்டன். சேனை - மகளிர். கோலங்கோடல் - அக்காலத்திற்கேற் பனவுடுத்து முடித்துப் பூசிப் பூண்டல்; போர்க்கோலமென்றுமாயிற்று. படையுள் படுவோன் - சின்னமூதி; "சேனையுள் படுநரை யானையி னேவி" என்றார் கதையிலும். பணிமொழி - காற்றூதன் பணித்தமொழி. பணித்தல் - அருளிச்செய்தல்; திசைச்சொல்; ‡"

மண்டல மேபணி யாய்" என்பதுபோல, பணிவிலை டயென் னும்வழக்குமது.

கச - கஅ. மடலவிழ் கானற் கடல்விளை யாட்டினுட்
கோவல னூடக் கூடா தேகிய
மாமலர் நெடுங்கண் மாதவி விரும்பி
வானுற நிவந்த மேனிலை மருங்கின்
வேனிற் பள்ளி யேறி

இ - ள். கடலாட்டாகிய விளையாட்டின்கண்ணே மடலவிழுங்கானலிடத்துக் கோவலனோடு ஊடுதலாலே தமியளாய்த் தன்மனையிற்புக்க கரியமலர்போலும்

---

* கிள்ளி - சோழன்.

† இந்திரவிழவூரெடுத்தகாதை, உஉச - உஉரு.

‡ திருச்சிற்றம்பலக்கோவையார், கஎஎ : "விண்டலை யாவர்க்கும் வேந்தர் வண், டில்லைமெல் கன்வர், கண்டிலை லங்கழிசூழ், கண்டலை யேகரி யாக்கன்னிப் புன்னைக் கலந்த யேவரக் கங்குலெல் லாமங்குல் வாய்விளக்கு, மண்டலமே பணி யாய்தமி யேற்கொரு வாசகமே."



நெடியகண்ணையுடைய மாதவி அதற்குவிரும்பிப் பருவத்திற்குப்பொருந்த வானி லேயுறவுயர்ந்த மேனிலையில் ஒருபக்கத்து

நிலாமுற்றத்தேயேறியென்க.

விளையாட்டினுளென்றார், விளையாட்டுப்பூசல் விளையாயிற்றென்னும் வழக்குப் பற்றி.

கஅ - உஉ. மாணிழை

தென்கடன் முத்துந் தென்மலைச் சந்துந்
தன்கட னிறுக்குந் தன்மைய வாகலிற்
கொங்கை முன்றிற் குங்கும வளாகத்து
மையறு சிறப்பிற் கையுறை யேந்தி

இ - ள். அந்த மாட்சிமைப்பட்ட இழையினையுடையாள் முத்தும் சந்தும் அக் காலத்திற்கு எப்பொழுதும் தான் கடனாகவிடக்கடவ திறையாகலான் முன்சென்ற பின்பனிக்காலத்திற் குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்ட முலைமுற்றமாகிய பரப்பிலே அம்முத்தையும் சந்தையும் கையுறையாகவேந்தியென்க.

கையுறை-காணிக்கை, எந்தியெனவே பூண்டும் பூசியுமென்பதாயிற்று. காணிக் கைகாட்டுவோர் காண்பார்முன்றிலிற் கொணர்ந்துகாட்டுவாராகலிற் கொங்கைமுன் றிலில் ஏந்தியென்றார். முலைக்குமுற்றம் - மார்பு.

உரு - உசு. அதிரா மரபின் யாழ்கை வாங்கி
மதுர கீதம் பாடின ண் மயங்கி
யொன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தி
நன்பா லமைந்த விருக்கைய ளாகி

இ - ள். மாதவி, பணிமொழிகூற, அதற்குவிரும்பி ஏறிப் பூண்டு பூசி ஒன்பது வகைப்பட்ட இருப்பினுள் முதற்கண்ணதாகிய பதுமாசனமென்னும் ஆசனத் திருந்து கோவைகலங்கா மரபினையுடையயாழைக் கையில்வாங்கிக் கண்டத்தால் மூந்துற மதுரகீதமாகப்பாடி அதுமயங்கிக்

கலத்தாற் பாடத் தொடங்கினவ ளென்க.

இதனுள் விருத்தியென்பது இருப்பு. ஓவியநூலுள் நிற்றல் இருத்தல் கிடத்தல் இயங்குதலென் னும் இவற்றின்விகற்பங் கள் பலவுள. அவற்றுள் இருத்தல் திரிதர வுடையனவும் திரிதரவில்லனவுமென இருபகுதிய. அவற்றுள் திரிதரவுடையன யானை தேர் புரவி பூனைமுதலியன ; திரிதரவில்லன ஒன்பதுவகைப்படும். அவை, பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப் புடம், மண்டிலம், ஏகபாதம் எனவிவை ; என்னை ? "பதுமுக முற்கட் டிதமே யொப்படி, யிருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திகந், தனிப்புட மண்டில மேக பாத, முளப்பட வொன்பது மாகுந், திரிதர வில்லா விருக்கை யென்ப" என்றாராகலா னும், *" பண்ணுள் கழிந்த பின்னர் முன்னு, ளெண்மெய்ப் பாட்டி னு ளிரக்க மெய்ந் நிறீஇ, யொண்வினை யோவியர் கண்ணிய விருத்தியுட், டலையத னும்பர்த் தான் குறிக் கொண்ட, பாவை நோக்கத் தாரணங் கெய்தி" எனப் பேருங்கதையுட் கூறினமையானுங்கொள்க. இனி நாடகநூலார் இவ்விருப்பை ஐம்பதென . விரி______________

---

* பெருங்கதை, ௩௰ - வது நருமதைச்சம்பந்தம்.

## அ.—வேனிற்காதை.



வாயவை றயாற்கூறித் தொகைவராயவை றகூறுவார் அவற்றை ஒன்பதினடக்கினு ரெனவுணர்க ; என்னை ? "ஆதிப்பா விருத்தி யைம்பதிற் புலவோ, ரோதிக் கொண் டனரொன்பான் விருத்தி"

என்றாராகலின். அவற்றுள் தலைக்கண்விருத்தியாவது பதுமாசனம். இதனாற்சொல்லியது அதிராமரபினையுடைய யாழைக் கையின்வாங் கிப் பத்மாசனமாகவிருந்தவள் தனக்கு நாயகனின்மையால் நியாதநாயகனுக மான தத்தானேக்கி எதிர்முகமாகவிருந்து வாசித்தலைக் கருதினுளென்பது. என்னை? "முதற்க ணெதிர்முக நோக்கி நயத்தக, வொருவ னுகிய தோற்றமும்" என்று ராகலின். யாழ்வாசிக்குமுறையை, "நல்லிசை மடந்தை நல்லெழில் காட்டி, யல் வியம் பங்கயத் தயனினிது படைத்த, தெய்வஞ் சான்ற நீர்சுவை நல்யாழ், மெய் பெற வணங்கி மேலொடு கீழ்புணர்த், திருகையின் வாங்கி யிடவயி னிரீஇ, மருவிய விநய மாட்டுதல் கடனே" என்பதனுனறிக. விநயம் - தேவபாணி.

உஎ - உஅ. வலக்கைப் பதாகை கோட்டொடு சேர்த்தி
யிடக்கை நால்விரன் மாடகந் தழீஇ

இ - ள். வலக்கையைபபதாகையாகக் கோட்டி ன்மிசையேவைத்து இடக்கை நால்விரலான் மாடகத்தைத்தழுவியென்க.

பதாகைக்கையாவது பெருவிரல்குஞ்சித்து ஒழிந்தவிரலெல்லாநிமிர்த்தல்; என்னை? "எல்லா விரலு நிமிர்த்திடை யின்றிப், பெருவிரல் குஞ்சித்தல் பதாகை யாகும்" என்றுராகலின். மாடகம் - வீக்குங்கருவி. அது முன்னர் ஆணியென்பத

உகூ - ௩௦. செம்பகை யார்ப்பே யதிர்வே கூடம்
வெம்பகை நீக்கும் விரகுளி யறிந்து

செம்பகை ஆர்ப்பு அதிர்வு கூடமென்னுநான்கினும் செம்பகை தாழ்ந்த விசை=இன்பமின்றியிசைத்தல். ஆர்ப்பு மாத்திரையிறந்த சுருதி=ஓங்கவிசைத் தல். அதிர்வு நரம்பைச் சிதறவுந்தல். கூடம் இசைநிறவாதது=தன்பகையாகிய

ஆருநரம்பினிசையிற்குன்றித் தன்ஞேசைமழுங்கலெனக்கொள்க. இதனை, "இன் னிசை வழிய தன்றி யிசைத்தல்செம் பகைய தாகுஞ், சொன்னமாத் திரையி ஞேங்க விசைத்திடுஞ் சுருதி யா ர்ப்பே, மன்னிய விசைவ ராது மழுங்குதல் கூட மாகு, நன்னுதால் சிதற வுந்த லதிர்வென காட்டி ஞரே" என்பதனுற்கொள்க. இது பஞ்சபாரதீயம்.

அன்றி, "செம்பகை யென்பது பண்ணோ டொரா, வின்பமி லோசை யென் மஞர் புலவர்" "ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைக்கும்" "அதிர்வெனப் படுவ திழுமென வின்றிச், சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே" "கூடமென்பது குறியுற விளம்பின், வாய்வதின் வாரா து மழுங்கியிசைப் பதுவே" எனக்கூறினரு முளர். இவைநான்கும் மரக்குற்றத்தாற் பிறக்கும்; என்னை? "நீரிலே நிற்ற லழுகு தல் வேத னிலமயக்குப், பாரிலே நிற்ற விடிவீழ்த ஞேய்மரப் பாற்படல்கோ, ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல், சேரினேர் பண்க ணிறமயக் குப்படுஞ் சிற்றிடையே" என்ருர்.

இ - ள். இச்சொல்லப்பட்ட பகைநரம்புநான்கும் புகாமல் நீக்கும்விரகைக் கடைப்பிடித்தறிந்தென்க.

உகள



கூக - கூஉ. பிழையா மரபி னீரேழ் கோவையை
யுழைமுதற் கைக்கிளை யிறுவாய்க் கட்டி

இ - ள். மயங்காமரபினையுடைய இப்பதினுற்கோவையாகிய சகோடயாழை உழைகுரலாகக் கைக்கிளைதாரமாகக் கட்டியென்க.

இக்குரன்முதலேழினும் முற்ரேன்றியதுதாரம் ;

" தாரத்துட் டோன்று முழையுழை யுட்டோன்று, மோருங் குரல்குரலி ளூட்டோன்றிச - சேருமிளி, யுட்டோன்றுந் துத்தத்துட் டோன்றும் விளரியுட், கைக்கிளை தோன்றும் பிறப்பு" என்பதனால் தாரத்தில் முதற்பிறப்பதாகிய உழைகுரலாய்க் கைக்கிளைதாரமாகிய கோடிப்பாலை முதற்பிறக்கக்கட்டியென்க.

நடந - நடச. இணைகிளை பகைநட் பென்றிந் நான்கி
னிசைபுணர் குறிநிலை யெய்த நோக்கி

இணை கிளை பகை நட்பென்றுசொல்லப்பட்ட நான்கினும், இணை - இரண்டு நரம்பு ; என்னை ? " இணையெனப் படுவ கீழு மேலு, மணையத் தோன்று மளவின வென்ப." கிளை - ஐந்துநரம்பு ; என்னை ? " கிளையெனப் படுவ கிளக்குங் காலைக், குரலே யிளியே துத்தம் விளரி, கைக்கிளை யெனவைந் தாகு மென்ப." பகை - ஆறும் மூன்றும் ; " நின்ற நரம்பிற் காறு மூன்றுஞ், சென்றுபெற நிற்பது கூடமாகும்." கூடமெனினும் பகையெனினுமொக்கும். நட்பு - நாலாநரம்பு. *

இ - ள். இந்நான்கனுள் இசைபுணருங்குறிநிலையைப்பொருந்தநோக்கியென்க.

நடரு. குரல்வா யிளிவாய்க் கேட்டனள்

இ - ள். குரல்முதலாக எடுத்து இளிகுரலாக வாசித்தாளென்க.

இனி வட்டப்பாலை இடமுறைத்திரிபு கூறுகின்றார். " குன்றாக் குரற்பாதி தாரத்தி லொன்று, நடுவ ணிணைகிளை யாக்கிக் - கொடியிடையாய், தாரத்தி லொன்று விளரிமே லேறடவர், நோரத் ததுகுரலா நின்று." என் - எனின், உழை குரலாகிய கோடிப்பாலைநிற்க இடமுறைதிரியுமிடத்துக் குரல்குரலாயது செம்பாலை ; இத னிலே குரலிற்பாதியும் தாரத்திலொன்றும் இரண்டின் அந்தரத்திலே கிளையாக்கித் தாரத்திலே நின்ற ஓரலகை விளரியின்மேலேறட விளரிகுரலாய்ப் படுமலைப்பாலை யாம்.

இம்முறையே துத்தம் குரலாயது செவ்வழிப்பாலையாம். இளி குரலாயது அரும்பாலையாம். கைக்கிளை குரலாயது மேற்செம்பாலையாம். தாரம் குரலாயது விளரிப்பாலையாம். என அந்தரமைந்துநீக்கி உறழ்ந்து கண்டுகொள்க. இவ்விடத் தில் தாரநரம்பின் அந்தரக்கோலைத் தாரமென்றது "தன்னமுந் தாரமுந் தன்வழிப் படா" என்னுஞ்சூத்திரவிதியானென்க. இவவேழு பெரும்பாலையினையும் முத லடுத்து நாற்றுமூன்று பண்ணும் பிறக்கும் அவற்றுள் செம்பாலையுட்பிறக்கும் பண்கள்: பாலையாழ், நாகராகம், ஆகரி, தோடி, கௌடி, காந்தாரம், செந்துருத்தி, உதயகிரியெனவிவை. பிறவும் விரிப்பின் உரைபெருகுமாதலின் அவற்றை வந்த வழிக்கண்டுகொள்க. "நாற்பெரும் பண்ணுஞ் சாதி நான்கும், பாற்படு திறனும் பண்ணெனப் படுமே" என்றார்.

---

* கிளை ஐந்தாநரம்பென்றும், பகை ஆறுநரம்பென்றும் பிரதிபேதமுண்டு.

## அ.—வேனிற்காதை.

உ0௯

௯௫ - ௯௬. அன்றியும்,

வரன்முறை மருங்கி னைந்தினு மேழினும்

இ - ள். அங்ஙனம் இளிகுரலாக வாசித்தலேயன்றி முற்கூறியவகையே ஐந்து நரம்பானமுறைமையின் ஏழுநரம்பு வாசித்தாளென்றவாறு.

௯௭ - ௪௧. உழைமுத லாகவு முறைமுதி றாகவுங்

குரன்முத லாகவுங் குரலீ றாகவு
மகநிலை மருதமும் புறநிலை மருதமு
மருகியன் மருதமும் பெருகியன் மருதமு
நால்வகைச் சாதியு நலம்பெற நோக்கி

இனி உழைகுரன்முதல் குரலீறாயுள்ள நான்கிற்கும் அகநிலைமருதமுதற் பெருகியன்மருதம் ஈறாயுள்ளநான்கும் நிரனிறை.

இ - ள். முன்னணிந்தமுறையே உழைகுரலாய கோடிப்பாலை அகநிலைமருத மாகவும், உழைகுரலாய்க் கைக்கிளைகுரலாய மேற்செம்பாலை புறநிலைமருதமாகவும், குரல்குரலாய செம்பாலை அருகியன்மருதமாகவும்; குரல்தாரமாய்த் தாரங்குரலாய விளரிப்பாலை பெருகியன்மருதமாகவும் இச்சொல்லப்பட்ட சாதிப்பெரும்பண்ணையும் ஓசையினிமைபெற நோக்கியென்றவாறு.

சஉ. மூவகை யியக்கி முறையுளிக் கழிப்பி

இ - ள். வலிவும் மெலிவும் சமனுமென்னும் மூவகைப்பட்டசுருதியும் நிற்கு நிலைமையிலேநிறுத்தி முறையானே அத்தொழிலைக் கழித்தென்க. சங - சச. திறத்து வழிப்படூஉந் தெள்ளிசைக் கரணத்துப்

புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கி

இ - ள். திறங்கட்குப் பிறப்பிடமாயுள்ள இச்சாதிப்பெரும்பண்களுட் மருதப்பண்ணை வாசித்தலிலே மயங்கியென்க.

புறநிலை

அன்றி அத்திறங்களுட் புறநீர்மையென்னும் திறத்தில் மயங்கியென்றுமாம்.

௬௫ - ௭௧. சண்பக மாதவி தமாலங் கருமுகை
வெண்பூ மல்லிகை வேரொடு மிடைந்த
வண்டுசெய் கழுநீ ராயிதழ்க் கத்திகை
யெதிர்பூஞ் செவ்வி யிடைநிலத் தியாத்த
முதிர்பூந் தாழை முடங்கல்வெண் டோட்டு
விரைமலர் வாளியின் வியனில மாண்ட
வொருதனிச் செங்கோ லொருமக னாணையி
னொருமுக மன்றி யுலகுதொழு திறைஞ்சுந்
திருமுகம் போக்குஞ் செவ்விய ளாகி
யலத்தகக் கொழுஞ்சே றளைஇ யயலது
பித்திகைக் கொழுமுகை யாணிகைக் கொ
காண்டு



மன்னுயி ரெல்லா மகிழ்துணை புணர்க்கு
மின்னிள வேனி லிளவர சாள
னந்திப் போதகத் தரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனுஞ் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினுந்
தணந்த மாக்க டந்துணை மறப்பினு
நறும்பூ வாளியி னல்லுயிர் கோட
லிறும்பூ தன்றிஃ தறிந்தீ மின்னென
வெண்ணெண் கலையு மிசைந்துடன் போகப்
பண்ணுந் திறனும் புறங்கூறு நாவிற்
றளைவா யவிழ்ந்த தனிப்படு காமத்து
விளையா மழலையின் விரித்துரை யெழுதிப்
பசந்த மேனியள் படருறு மாலையின்

வசந்த மாலையை வருகெனக் கூஉய்த்
தூமலர் மாலையிற் றுணிபொரு ளெல்லாங்
கோவலர்க் களித்துக் கொணர்க வீங்கென

இ - ள். அங்ஙனம் கண்டத்திலும் கலத்திலுமயங்கிய மாதவியாகிய பூங்கொடி **பசந்தமேனியளாய்ச்** சிறியவாளியாலே பெரியநிலமுழுதையுமாண்ட ஒப்பில்லாத **தனிச்செங்கோலையுடைய** ஒருவனாகிய காமராசனாணையாலே ஒருமுகமன்றி உலக **மெல்லாம்** எதிர்கொண்டு தொழுதிறைஞ்சப்படும் அவன்றிருமுகத்தைப் போக **விடக்கடவோமென்னும்** நினைவாற்பிறந்த செவ்வியையுடையளாகிச் சண்பக முதலியவற்றால் நெருங்கத்தொடுத்த பூவின் மணமாறுபடும் செவ்வியையுடைய **மாலையினிடையே** தொடுத்த செவ்வி எதிர்கொள்ள முதிர்ந்த தாழைப்பூவினது **முடக்கத்தையுடைய** வெள்ளியதோட்டிலே அதற்கயலதாகியதோர் பித்திகையி **னது** கொழுவியமுகையாகிய எழுத்தாணியைக் கையின்வாங்கிக்கொண்டு அதனைச் செம்பஞ்சின்குழம்பிற்றோய்த்து உதறி எழுதுகின்றவள் உலகின்மிக்க **உயிர்ப பன்மைகளைத் தாம் மகிழ்த்துணையோடு** புணர்விக்கும் இனிய இளவேனிலென்பான் **இளவரசன்; ஆதலால்** நெறிப்படச்செய்யான்; **அவனேயன்றியும்,** அந்திப்பொழுதின் கண்ணே அரும்புகின்ற விசும்பினதனத்தின்மேலே வந்துதோன்றிய திங்களாகிய **செல்வனும் இன்றண்டான** பண்பன்றிப் பிறப்பினும் கோட்டமுடையன்; ஆதலாற் **புணர்ந்தோர்** இடைப்படுப்பினும் தணந்தோர் மறப்பினும் சிறிய பூவாளியாலே **இன்பநுகருமுயிரைக் கொண்டுவிடுதல் அவற்குப் புதியதொன்றன்று,** இதனை அறிமி **னென்றுகொண்டு** அறபத்துநால்வகைக்கலைகளும் வழிபட்டுப் புகழ்த்தொழுக **அவற்றுட்.** பண்களும் திறங்களுமாகிய அவை புறங்கூறப்படுமோவில் முற்றுத மழ **லைச்சொல்லோடே** **அப்பாசுரத்தைப்** பேசிப்பேசியெழுதி **நினைவுமிகும்** மாலைக்

காலத்தே வசந்தமாலையை வருகவெனவழைத்து இம்மாலையிலெழுதிய பொருளை யெல்லாம் கோவலர்க்கேற்பச்சொல்லி இப்பொழுதே இங்கே கொணர்வாயாக வென்றுளென்க.

## அ.—வேனிற்காதை.

உ0ரு

தமாலம் - பச்சிலை. கருமுகை - பித்திகை. கத்திகை - தொடைவிசேடம். இடைநிலம் - தொடைநடு. தாழைமுடங்கல் - இருபெயரொட்டுமாம். போக்கும்- போகவிடும். செவ்வி - ஈண்டு மனோதம். அலத்தகச்சேறு - செம்பஞ்சக்களி. திங் கட்செல்வன் - "கால முலகம்" என்னுஞ்சூத்திரத்துள் ஞாயிறு திங்களென்பன உயர்திணைமேலனவாய்ப் பால்பிரிந்திசையாவெனவும், "நின்றாங் கிசைத்த லிவணி யல் பின்று" எனவே நின்றமுறையானே ஈறுபெற்றுநின்று உயர்திணையாயிசைத் தல் இவணியல்பின்றெனவுங்கூறிய ஆசிரியர், "இசைத்தலு முரிய வேறிடத் தான" எனக் காலமுதலாகியசொல் உயர்திணையாயிசைத்தலுமுரிய ; ஈறுதிரிந்து வாய்பாடுவேறுபட்டவழியென்றாராகலின், இதுவும் ஈறுதிரிந்து திங்கட்செல்வ னென்றுயிற்றென்க. மேலும் இவ்வாறு வருவனவற்றிற்கும் இவ்விதிகொள்க. திங் களாகிய செல்வனெனப் பண்பொட்டுவிரிக்க. செவ்வியனல்லன், செம்மை-நடுவு நிலைமை; *" செவ்வியான் கேடும்" எனவும், †" செவ்விய ரல்லார்" எனவுங்கூறி னமையின். பொழுதிடைப் படுப்பினும் - சிறிதுபொழுதை இடையே பயமின்றாகக் கழிப்பினும்; என்றது ஊடல் நீட்டி ப்பினுமென்றபடி . தணத்தல் - ஒதன்

முதலியவற்றாற்சென்று குறித்துக்கூறும் பருவம் பொய்த்தல். வாளியின், இன் - ஆன் ; உருபுமயக்கம். நல்லுயிர் - காமவின்பத்தைநுகருமுயிர். இறும்பூது - புதுமை. அறிந்தீமின் - அறியின் ; பகுதிப்பொருள் விகுதி. புறங்கூறுநா - புறங்கூறுதற்குக் காரணமேயான நா ; புறங்கூற்று - நிகரல்லார் தம்பொறுமையான் அவரில்வழி இகழ்ந்துகூறுபவாகலின் இவையுங்கூறின ; ' இவற்றைப் பழிக்குநாவெனவுமாம். தளைவாயவிழ்ந்த - கட்டுக்குலைந்த; என்றது தன்வரைத்தன்றுதல் ; என்னை ? ‡" பஞ் சிறை கொண்ட பைம்பொற் கலைபுறஞ் சூழ வைத்து, நஞ்சிறை கொண்ட நாகப் படம்பழித் தகன்ற வல்குல், வெஞ்சிறைப் பள்ளி யாக விழுமுலைத் தடத்து வைகத் தஞ்சிறைப் படுக்க லாதார் தம்பரி வொழிக வென்றான்" என்றார் பிறரும். தனிப் படுகாமம் - சிறந்தார்க்கும் உரைக்கலாவதன்றாய் அரிதாய் அகத்தே சுட்டெரிக்குங் காமம். விளைதல் - முற்றுதல். மழலையின் - மழலையோடே. படருறுமாலை - நினைவு மிகுமாலை ; படர் - துன்பமுமாம். துணிபொருள் - §மறத்தலால்வருந்தண்டம் ; திருவாணைக்குமேல் ஆக்கினை இல்லையென்பதுவழக்கு. அளித்து - இனிமையாற் கொடுத்து ; " உணர்த்தியு மண்ட மாணையி னிறைஞ்சும்" என்ப. கத்திகையிடை நிலத்தில்யாத்த தாழைவெண்டோட்டின் எழுதியென்க. துணிபொருளென்பதற்குத் தீர்த்தபொருளெனினுமமையும். அளிக்கவென்றது அளித்துக் கொணர்கவென்றான், இது காமன் திருமுகமாதலானும் மூன்றும் இவன்பிரிவது அறியாமை யானுமெனக்கொள்க. இனி இவ்வாறன்றி அந்திப்போதகமென்பதனை யானையாக்கி அதன்புறக்கழுத்திற்றோன்றிய திங்களெனிற் பிறையாம் ; ஆகவே காடுகாண் காதையுள், ‖" வைகறை யாமத்து, மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக், காரிரு ணின்ற கடைநாட் கங்குல், ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப......கெடுங்கடை கழிந்து" என்பதனாற்

பூருவபக்கத்துப் பதிஞலாம்பக்கமாதலான் அதனேடும்,

---

* திருக்குறள், அழுக்காறுமை, கூ. † நாலடியார், புல்லறிவாண்மை, உ.

‡ சீவகசிந்தாமணி, கேமசரியாரிலம்பகம், கஉஎ.

§ இறுத்தலாலென்றும் பிரதிபேதமுண்டு.

|| காடுகோண்காதை, க - அ.



*" ஆடித் திங்கட் பேரிருட் பக்கத், தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று, வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண, வுரைசான் மதுரையோ டரசுகே டுறுமெனு, முரையு முண்டு" என்பதனேடும் பிறவற்ருேடும் மாறுகொள்ளுமாதலான் இவ் வாறுகூறுதல் பொருந்தாதெனவுணர்க. இனி இவ்விழவின் முதலும் முடிவும் கட லாட்டும் புலவியும் புறப்பாடும் வதிச்செலவும் பொறையுயிர்த்திருப்பும் நிறைபதிப் புகலும் நீதறுநாளும் ஊர்தீப்பாடும் முதனடுவிறுதியாகக் கட்டுரைகாதையுள் விரி யக்கூறுவாம் ; அதனுட் கண்டுகொள்க. இனி இதன்பிறப்பை இகழ்ந்துகூறுவான், தந்தைதாயரிடத்தன்றி அவித்தன்மையதாகிய மாலையென்னும் யானையின்பிடரிற் பிறந்த செல்வனென்றுளெனினுமமையும். செவ்வியனல்லன் - புணர்ந்தார்க்கும் பிரிந்தார்க்கும் ஒருதன்மையனல்லனெனினுமமையும்.

பூங்கொடி இருக்கையளாகிச் சேர்த்தித் தழீஇ அறிந்து கட்டி

நோக்கிக் கேட்டனள் ; கேட்டு நோக்கி இயக்கிக் கழிப்பி மயங்கிச் செவ்வியளாகி அலோஇக் கைக் கொண்டு எழுதிக் கூஉய் அளித்துக் கொணர்க ஈங்கென்றுளென வினைமுடிக்க.

எஉ - எங. மாலை வாங்கிய வேலரி நெடுங்கண்
கூல மறுகிற் கோவலற் களிப்ப

இ - ள். இங்ஙனம் மாதவிகூற அம்மாலையைவாங்கிய வசந்தமாலை, போய் எண்வகைக கூலங்கள்செறிந்த மறுகினையுடைய கோவலனைக்கண்டு அவனுக்கு அம் மாலையைக் கொடுப்பவென்க.

போயெனவும் கண்டெனவும் வருவிக்க.

எச - எஎ. நிலகமு மளகமுஞ் சிறுகருஞ் சிலையுங்
குவளையுங் குமிழுங் கொவ்வையுங் கொண்ட
மாதர்வாண் முகத்து மதைஇய நோக்கமொடு
காதலிற் றோன்றிய கண்கூடு வரியும

இனிக் குரவையும் வரியுமென்னுமிரண்டனுள், வரிகூறுவார், அதனை இவன் தொழிலாகச் சார்த்திக்கூ றுகின்றார். வரியாவது அவரவா பிறந்தநிலத்தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழிற்றன்மையும் தோன்றநடித்தல் ; என்னை ? "வரியெனப் படுவது வகுக்குங் காலைப், பிறந்த நிலனுஞ் சிறந்த தொழிலு, மறியக் கூறி யாற்றுழி வழங்கல்" என்றாராகலின். அவ்வரி எட்டுவகைப்படும் ; கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள்வரியென ;

என்னை ? "கண்கூடு காண்வரி யுள்வரி புறவரி, கிளர்வரி யைந்தோ டொன்ற வுளைப்பிற், †காட்சி தேர்ச்சி யெடுத்துக் கோளென, மாட்சியின் வரூஉ மெண்வகை நெறித்தே" என்பவாகலின். அவற்றுட் கணகூடாவது பிரிய தரிசனம் ; அஃதாவது

காட்சி, அஃது ஒருவர்கூட்டவன்றித் தானே வந்துநிற்குநிலைமை; என்னை ? கண்கூ
டென்பது கருதுங் காலை, இசைப்ப வாராது தானே வந்து, தலைப்பெய்து நிற்குந்
தன்மைத் தென்ப" என்றாராகலின்.

* கட்டுரைகாதை, ௧௩௨ - ௧௩௬.
† காட்சிவரி, தேர்ச்சிவரிக்குப் பின்புள்ளதேனும் எதுகைநயம்பற்றி முன் வைக்கப்பட்டது.

## அ.—வேனிற்காதை. ௨

0௭

இ - ள். சிலைமுதலியவற்றை உறுப்பாகக்கொண்ட திலதமுதலியவற்றை யுடைய மாதர்முகத்தின் மதர்த்தநோக்கத்தோடே என்மேற் காதலையுடையான் போற்றோன்றி முத்தின் எதிர்முகமாகநின்றூடித்த நடிப்பும், ௪அ
••அ௩. புயல்சுமந்து வருந்திப் பொழிகதிர் மதியத்துக்
கயலுலாய்த் திரிதருங் காமர் செவ்வியிற்
பாகுபொதி பவளந் திறந்து நிலாவுதவிய
நாகிள முத்தி னகைநலங் காட்டி
வருகென வந்து போகெனப் போகிய
கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமும்
"காண்வரி யென்பது காணுங் காலை, வந்த பின்னர் மனமகிழ் வுறுவன, தந்து நீங்குந் தன்மைய தாகும்."

இ - ள். புயல்சுமந்துவருந்திக் கதிரைப்பொழியும்

மதியிடத்தே கயல்களுலாவித்திரிகின்ற செவ்வியோடே யாகைப்பொதிந்த பவளத்தைத்திறந்து ஒளியைத் தருகின்ற முத்தையொத்த நகைநலத்தைக்காட்டி வருகெனவந்து போகவெனப் போகிய கரிய நெடிய கண்ணுளுடைய காண்வரியென்னுங்கோலமும்,

இளமுத்தென்முர், ஒளிபெறுதல்கருதி.

இளநாகீன்றமுத்தெனினுமமையும். அச - அகூ. அந்தி மாலை வந்ததற் கிரங்கிச்

சிந்தைநோய் கூருமென் சிறுமை நோக்கிக்
கிளிபுரை கிளவியு மடவன நடையுங்
களிமயிற் சாயலுங் கரந்தன ளாகிச்
செருவேனெடுங்கட் சிலதியர் கோலத்
தொருதனி வந்த வுள்வரி யாடலும்

உள்வரியென்பது வேற்றுருக்கொண்டுநடித்தல்; என்னை? "உள்வரி யென்ப துணர்த்துங் காலை, மண்டல மாக்கள் பிறிதோ ருருவங், கொண்டுங் கொள்ளாது மாடுதற் குரித்தே" என்றாராகலின். மண்டலமாக்களாவார் அரசர். பாண்டவர் பிறிதுருவங்கொண்டதுவுமது.

இ - ள். யான் ஊடிப் பிரிந்தகாலத்து அந்திமாலைவந்ததாகப் பிரிவாற்ருமலிரங்கி என்சிந்தைநோய்மிகும் வறுமையைத் தானறிந்து கிளியொத்த கிளவியையும் மடப்பம்பொருந்திய அன்னத்தையொத்த நடையினையும் களித்த மயில்போலுஞ் சாயலினையுங்கரந்தனளாகி வேல்போன்ற கண்ணையுடைய தனதுசிலதியர் கோலத்தைக்கொண்டு தான் தனிவந்துநின்றுநடித்த உள்வரியென்னுநடிப்பும்,

௬௦ - ௬௩. சிலம்புவாய் புலம்பவு மேகலை யார்ப்பவுங்

கலம்பெறு நுசுப்பினள் காத னோக்கமொடு
திறத்றுவே றுயவென் சிறுமை நோக்கியும்
புறத்துநின் றாடிய புன்புற வரியும் ௨௦அ

சிலப்பதிகாரம்-

புறவரியாவது தலைவனுடனணையாது புறத்துநின்று விளையாடுவது ; என்னை ? "புறவரி யென்பது புணர்க்குங் காலை, யிசைப்ப வந்து தலைவன்முற் படாது, புறத்துநின் றாடி விடைபெறு வதுவே" என்றாராகலின்.

இ - ள். கலங்களைப் புனையவும்பெறாத நுசுப்பினையுடையாள் சிலம்பு வாய் விட்டுப் புலம்பவும் மேகலை வாய்விட்டார்ப்பவும் என்றகாதலையுடையான்போல் வந்து நோக்கியநோக்கோடே தன்னைப்பிரிதலால் தன்மைதிரிந்த எனதுவறுமை யையறிந்தும் என்னுடனணையாது புறம்பேநின்றாடித்தாடிப்பும்,

நுசுப்பினள் புலம்பவும் ஆர்ப்பவும் நோக்கமொடு நோக்கியும் நின்றாடிய புற வரியுமென்க.

௯௯ - ௨௦௧, கோதையுங் குழலுந் தாதுசே ரளகமு
மொருகாழ் முத்தமுந் திருமுலைத் தடமு
மின்னிடை வருத்த நன்னுத றோன்றிச்
சிறுகுறுந் தொழிலியர் மறுமொழி யுய்ப்பப்
புணர்ச்சியுட் பொதிந்த கலாந்தரு கிளவியி
னிருபுற மொழிப்பொருள் கேட்டன ளாகித்
தளர்ந்த சாயற் றகைமென் கூந்தல்
கிளர்ந்துவே றாகிய கிளர்வரிக் கோலமும்

கிளர்வரியென்பது நடுநின்றார் இருவருக்கும் சந்துசொல்லக் கேட்டுநிற்பது ; என்னை ? "கிளர்வரி யென்பது கிளக்குங் காலை, யொருவ ருய்ப்பத் தோன்றி யவர் வா, யிருபுற மொழிப்பொருள்

கேட்டுநிற் பதுவே'' என்றுராகவின்.

இ - ள். நன்னுதல் கோதைமுதலியன மின்னிடையைவருத்தத் தோன்றி வந்துணுகாதே புறவாயிலேவந்துநின்று சிலதியர் வார்த்தைகேட்டு மறுமாற்றஞ் சொல்லப் புணர்ச்சியை உட்பொதிந்திருக்கின்ற எனது புலவிச்சொல்லைக்கேட்டு அதனை இருபுறமொழிப்பொருளாகக்கொண்டு தளர்ந்தமேனியினையும் அழகியகூந்த லினையுமுடையாள் புலவியாற்போகின்றாள்போல நடித்துப்போன நடிப்பும்,

இதனாற்கூறியது : யான் புணர்ச்சிநிமித்தமாகப் புலந்து தன்சிலதியர்க்குச் சொல்லிவிட்டமொழியைக்கேட்டு அப்படியன்றிப் புலந்துசொன்னேனாக நடித் துப்போனநடிப்பென்றபடி.

க0உ - க0ச. பிரிந்துறை காலத்துப் பரிந்தனளாகி
யென் னுறு கிளை கட்குத் தன் னுறு துயரந்
தேர்ந்துதேர்ந் துரைத்த தேர்ச்சிவரி

யன் றியும்

தேர்ச்சிவரியென்பது நாயகன்கிளைகட்குத் தன்றுன்பங்களைத் தேடித்தேடிச் சொல்லுதல் ; என்னை ? "தேர்ச்சி யென்பது தெரியுங் காலைக், கெட்ட மாக்கள் கிளைகண் டவர்முன், பட்டது முற்றது நினைஇ யிருந்து, தேர்ச்சியோ டுரைப்பது தேர்ச்சிவரி யாகும்'' என்றுராகவின்.

இ - ள். நான் பிரிந்துறைபொழுதில் தான் பிரிவாற்றாது வருந்தினளாகப் பாவித்து எனது மிக்ககிளைகட்குத் தனது மிக்க துயரத்தைத் தன்மயக்கத்தாலே

தேர்ந்துதேர்ந்து சொல்லின்றனாகநடித்த நடிப்பும் அதுவன்றியும்,

## அ.—வேனிற்காதை.

உ0கூ

க0ரு - க0சு. வண்டலர் கோதை மாலையுண் மயங்கிக்
கண்டவர்க் குரைத்த காட்சி வரியும்

காட்சிவரியென்பது தன்வருத்தத்தைப் பலருங்காணும்படி நடித்தல்; என்னை? "காட்சிவரி யென்பது கருதுங் காலைக், கெட்ட மாக்கள் கிளைகண் டவர்முன்னர்ப் பட்டது கூறிப் பரிந்துநிற் பதுவே" என்றாராகலின்.

இ - ள். வண்டலர்த்துங்கோதையையுடையாள் மாலைக்காலத்தின்கண்ணே மயங்கிக் கண்டோரெவர்க்கும் தன்விரகத்தைச்சொல்லிநடித்த நடிப்பும், க0எ-க0அ. அடுத்தடுத் தவர்முன் மயங்கிய மயக்க
மெடுத்தவர் தீர்த்த வெடுத்துக்கோள் வரியும்

எடுத்துக்கோள்வரியென்பது தான் கையறவெய்தி வீழ்ந்தாளாகவீழ்ந்து பிறர் எடுத்துக்கொள்ளும்படி நடித்தல்; என்னை? "எடுத்துக் கோளை யிசைக்குங் காலை, அடுத்தடுத் தழிந்து மாழ்கி யயலவ, ரெடுத்துக் கோள்புரிந்த தெடுத்துக் கோளே" என்றாராகலின்.

இ - ள். அவர் முன்பு தான் மேன்மேலுமயங்கியமயக்கத்தை அவர் எடுத்துத் தீர்த்த எடுத்துக்கோள்வரியென்னுநடிப்பும், க0கூ - கக0. ஆடன் மகளே யாதலி னாயிழை
பாடுபெற் றனவப் பைந்தொடி தனக்கென

இ - ள். ஆயிழாய், பைந்தொடி நாடகமகளாதலான் இங்ஙனநடித்தல் அவட்கு இயல்பன்றோவென்றுகூறவென்க.

இவற்ருற்கூறியது முன்பு தான் இவளோடு கூடியும் ஊடியுஞ்செல்கின்ற காலத்து இவ்வனடித்தகடிப்பை நாடகவுறுப்பாகிய கண்கூடுமுதல் எடுத்துக்கோளீருயுள்ள வரி எட்டினேடும் சிலேடித்துக்கூறியகோவலன் நாடகமகளிர்க்கு இந்நாடகம் பிறந்துடைமையன்ருேவெனச்சொல்லி ஒலையை மறுத்தானென்பது. கக௩ - கக௪. அணித்தோட்டுத் திருமுகத் தாயிழை யெழுதிய

மணிதோட்டுத் திருமுக மறுத்ததற் கிரங்கி
வாடிய வுள்ளத்து வசந்த மாலை
தோடலர் கோதைக்குத் துனிந்துசென்
றுரைப்ப

இ - ள். அழகினையுடைய பொற்ருேடணிந்த திருமுகத்தையுடைய ஆயிழை யெழுதப்பட்ட அழகிய தாழந்தோட்டுத்திருமுகத்தைக் கோவலன்மறுப்பத் தான் அதற்குவருந்தி வாடிய உள்ளத்தையுடைய வசந்தமாலை மாதவிக்குவிரைந்துசென்று உரைப்பவென்க.

அணியும் மணியும் அழகு. தோடு - பொற்ருேடும், தாழந்தோடும். துனிவு - விரைவு.

கக௫-கக௮. மாலை வாரா ராயினு மாணிழை

காலைகாண் குவமெனக் கையறு நெஞ்சமொடு
பூமல ரமளிமிசைப் பொருந்தாது
வதிந்தனண்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென



இ - ள். துனிந்துசென்றுரைப்பவென்றதனுன் ஆற்ருளாகியதலைவியை ஆற்ற 'வித்தற்பொருட்டுத் தலைவனை இயற்பழித்ததோழிக்குத் தலைவி இயற்படமொழிகின் ருளாகலின்,

இன்னும் இம்மாலைப்பொழுதினுள்வருவார் ; வாராராயினும் காலைப் பொழுதில் ஈண்டு நாம் காண்போமெனச்சொன்னாள் ; சொன்னவள் தானிருந்த மலரமளிக்கண்ணே செயலற்ற நெஞ்சத்தோடு வீழ்ந்தாள் ; வீழ்ந்தவள் அமளி மிசையே இமைபொருந்தாமற் கிடந்தனள் ; அவள் யாரெனிற் கரிய மலர்போலும் நெடியகண்ணையுடைய மாதவிதானென்க.

இனி, தான் அசையுமாம். அளிப்ப அவன் பாடுபெற்றனவென்றுசொல்லி
மறப்ப அதனைக்கட்டுரைத்தவளுக்குக் காண்குவமெனச்சொல்லிப் பொருந்தாது
வதிந்தனளென்க. வதிதல் - தங்குதல். பொருந்தாதுவதிதல் - தன்கொழுநனைக்
கூடாதுவதிதலுமாம்.

இது நிலைமண்டிலம்.

செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்தொழுக
மைந்தா ரசோக மடலவிழக் - கொந்தார
இளவேனல் வந்ததா லென்னாங்கொ லின்று
வளவேனற் கண்ணி மனம்.

மைந்து - அழகு. கொந்து - கொத்தென மெலிந்துநின்றது. இது, கூனி
ஓலைகொண்டு செல்லுகின்றகாலத்துத் தன்னுள்ளேசொல்லியது, கோவலன் கேட்
பச்சொல்லியதூஉமாம்.

ஊடியனீ ரெல்லா முருவிலான் றன்றிருவாணை
கூடுமி னென்று குயில்சாற்ற - நீடிய
வேனற்பா ணிக்கலந்தான் மென்பூந்
திருமுகத்தைக
கானற்பா ணிக்கலந்தாய் காண்.

இ - ள். உலகில் ஒருவனும் ஒருத்தியுமாயுள்ளோரின்
ஊடினவர்களே, நீயி
ரெல்லாம் அநங்கன்றிருவாணையே கூடுமினென்று
குயிற்குலங்கள்சாற்ற, இங்ங
னம்பிரிந்து சாலநீடுதலால் ஆற்றுனாகி இளவேனிற்பொழுதில்
நின்னோடு என்றுங்
கலந்தானுடைய மெல்லிய பூவிலெழுதிய திருமுகத்தை,
கானலிடத்து அவள்
பாடியபாட்டிற்கு அலந்தோனே, காண்பாயாகவென்று ஓலையை
நீட்டினளென்க.

பருந்து நிழலுமென ...
...அடியார்க்குநல்லானென்பான்.
ஓருந்தமிழ் ... ... ... ...நிரம்பையர்காவலனே.
காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

வேனிற்காதை முற்றிற்று.

---

"ஊடினீரெல்லாம்"

தொல். சொல்.
ந. பக். 121
ஐ உ-வி பக். க௭௫

நகூ. தொல். எழுத். ப.
க0௩

## ஒன்பதாவது
# கனாத்திறமுரைத்தகாதை.

---

அகனக ரெல்லா மரும்பவிழ் முல்லை
நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகன்மாய்ந்த
மாலை மணிவிளக்கங் காட்டி யிரவிற்கோர்
கோலங் கொடியிடையார் தாங்கொள்ள மேலோர்நாண்
று மாலதி மாற்றாண் மகவுக்குப் பாலளிக்கப்
பால்விக்கிப் பாலகன் றான்சோர மாலதியும்
பார்ப்பா னொடுமனையா ளென்மேற் படாதனவிட்
டேற்பன கூறாரென் றேங்கி மகக்கொண்
டமரர் தருக்கோட்டம் வெள்ளியானைக்கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்

லுச்சிக் கிழான்கோட்ட மூர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்ட
நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கெங்குந்
தேவிர்கா ளெம்முறுநோய் தீர்மென்று மேவியோர்
பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்
கேசும் படியோ ரிளங்கொடியா யாசிலாய்
செய்தவ மில்லோர்க்குத் தேவர் வரங்கொடார்
பொய்யுரை யன்று பொருளுரையே கையிற்
படுபிணந் தாவென்று பறித்தவள்கைக் கொண்டு
சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளிற் சென்றாங்
கிடுபிணந் தின்னு மிடாகினிப்பேய் வாங்கி
மடியகத் திட்டாள் மகவை யிடியுண்ட
மஞ்ஞைபோ லேங்கி யழுதாளுக் கச்சாத்த
னஞ்ஞைநீ யேங்கி யழலென்று முன்னை
உறு யுயிர்க்குழவி காணாயென் றக்குழவி யாயோர்
குயிற்பொதும்பர் நீழற் குறுக வயிர்ப்பின்றி
மாயக் குழவி யெடுத்து மடித்திரைத்துத்
தாய்கைக் கொடுத்தாளத் தையலா டேய
மறையோன்பின் மாணியாய் வான்பொருட் கேள்வித்
துறைபோ யவர்முடிந்த பின்ன ரிறையோனுங்



தாயத்தா ரோடும் வழக்குரைத்துத் தந்தைக்குந்
தாயர்க்கும் வேண்டுங் *கடன்கழித்து மேயநாட்

டேவந்தி யென்பாண் மனைவி யவளுக்குப்
பூவந்த வுண்கண் பொறுக்கென்று மேவித்தன்
மூவா விளநலங் காட்டியெங் கோட்டத்து
நீவா வெனவுரைத்து நீங்குதலுந் தூமொழி
யார்த்த கணவ னகன்றனன் போயெங்குந்
தீர்த்தத் துறைபடிவே னென்றவனைப்
பேர்த்திங்கள்
மீட்டுத் தருவா யெனவொன்றின் மேலிட்டுக்
கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்
வாட்டருஞ்சீர்க்
கண்ணகி நல்லாளுக் குற்ற குறையுண்டென்
றெண்ணிய நெஞ்சத் தினையளாய் நண்ணி
யறுகு சிறுபூளை நெல்லொடு தூஉய்ச் சென்று
பெறுக கணவனோ டென்றாள் பெறுகேன்
கடுக்குமென் னெஞ்சங் கனவினா லென்கை
பிடித்தனன் போயோர் பெரும்பதியுட்
பட்டேம்
பட்ட பதியிற் படாததொரு வார்த்தை
யிட்டன ரூரா ரிடுதேளிட் டென்றன்மேற்
கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன்
காவலனோ
டூர்க்குற்ற தீங்குமொன் றுண்டா லுரையாடேன்
தீக்குற்றம் போலுஞ் செறிதொடீஇ தீக்குற்ற
முற்றேனை யுற்ற வுறுவனோ டியானுற்ற
நற்றிறங் கேட்கி னகையாகும் பொற்றொடீஇ

கைத்தாயு மல்லை கணவற் கொருநோன்பு
பொய்த்தாய் பழம்பிறப்பிற் போய்க்கெடுக
உய்த்துக்
கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றின்
மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்
யாமொருநா
ளாடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள்
பீடன் றெனவிருந்த பின்னரே நீடிய
காவலன் போலுங் கடைத்தலையான் வந்துநங்

---

* கடன்செய்தெனவும் பாடம்,

எக. தொல். எழுத். ப. 194
" சொல். ப. ந. உகஎ

௯.—கனாத்திறமுரைத்தகாதை.

உகரு.

கோவல னென்றாளோர் குற்றிளையாள்
கோவலனும்

பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
விலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன
கலங்கேழ் முறுவ னகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மெனச் சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோ
டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னொடிங்
கேடலர் கோதா யெழுகென்று நீடு
வினைகடைக் கூட்ட வியங்கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சியா முன்.

---

க – ச. அகனக ரெல்லா மரும்பவிழ் முல்லை
நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகன்மாய்ந்த
மாலை மணிவிளக்கங் காட்டி யிரவிற்கோர்
கோலங் கொடியிடையார் தாங்கொள்ள

இ – ள். கொடியிடையார் அகன்ற மனையிடமெங்கும் கதிரோன்மறைந்த மாலைக்காலத்தே அரும்பு புரிநெகிழ்ந்த முல்லையினது ஒளிமலரை நெல்லோடே தூவி இல்லுறைதெய்வத்தை வணங்கி மாணிக்கவிளக்கை மையினக்கோடேயெடுத்து அம்மாலைக்காலத்தே இராப்பொழுதைக்காம்படி கொழுநர்மார்பைத் தமது முலையாற் பொருந்துதற்கேற்ற கோலங்களைக் கொள்ளாநிற்பவென்க.

என்றது மகரக்குழைமுதலிய மணியும், பூணும் மதாணியுமுதலிய அணியும் இரட்டையங்கண்ணி பிணையன்முதலிய

பணியுங்களைந்து நொய்யனவே புனைந்தும் பூண்டும் முடித்துஞ்செய்தல். அகனகர் - பட்டினப்பாக்கமெனினுமமையும். நிகர் - ஒளி; *"நீர்வார் நிகர்மலர் கடுப்ப" என்றார் கதையினும். பகல் - ஆகுபெயர். மாய்தல் - மறைதல்; †"களிறுமாய்க்குங் கதிர்க்கழனி" என்றாற்போல. மணிவிளக்கம் - உம்மைத்தொகை; இருபெயர்க்கண்வந்தது. மணி - அழகுமாம். கோலம் - ஒப்பனை; தமது கொழுநரோடெதிர்க்கும் போர்க்கோலமுமாயிற்று. தாம் - அங்ஙனந்தூவியமகளிர்தாம். ‡"நெல்லு மலருந் தூஉய்க் கைதொழுது, மல்ல லாவண மாலை யயர" என்றார் நெடுநல்வாடையினும்.

---

* இந்தவாக்கியம், அகநானூறு, களிற்றியானைநிரை, கஅ - ம் பாடலிலும் வந்துள்ளது.

† பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, உசஎ.

‡ ,, நெடுநல்வாடை, சஙு - சசு.



ச - கூ. மேலோர்நாண்
மாலதி மாற்றாண் மகவுக்குப் பாலளிக்கப்
பால்விக்கிப் பாலகன் றான்சோர

இ - ள். முன்னொருநாளிலே மாலதியென்பாள் ஓர்பார்ப்பனி தனது மாற்றாள்குழவிக்குத் தன்முலைசுரந்தபாலைச் சங்காலூட்ட அப்பால் விக்குதலாலே தன் கையிலே அக்குழவி மரிக்கவென்க.

சோர்தல் - மரித்தல். பால் - ஆன்பாலுமாம்.

கூ - அ.

மாலதியும்

பார்ப்பா னொடுமனையா ளென்மேற்

படாதனவிட்

டேற்பன கூறுரென் றேங்கி மகக்கொண்டு

இ - ள். அங்ஙனம் பாலகன் மரித்தலானே அம்மாலதியும் பார்ப்பானொடு அவன்மனைவியும் என்மேல் அடாப்பழிகூறுதலொழித்து ஏற்பனகூறுராதலால் இதற்கென்செய்கேனென்றேங்கி அம்மகவைக்கொண்டென்க.

உம்மை - இழிவுசிறப்பு. ஒடு - எண்ணொடு. படாதன. ஒழிந்து.

அடாதன. விட்டு -

கூ. அமரர் தருக்கோட்டம்—இ - ள். தேவர்தரு நிற்குங்கோயில்,

௲. வெள்ளியானைக்கோட்டம்—இ - ள். ஐராவதநிற்குங்கோயில்,

௧௦ புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம்—இ - ள். அழகினையுடைய பலதேவர்கோயில்,

புகர் - அழகு. வெள்ளைநாகர் - பலதேவர்.

௧௦ - ௧௧. பகல்வாயி லுச்சிக் கிழான்கோட்டம்

பகல்வாயில் - பகற்றோற்றுகிறவாயில்; ஆவது கீழ்த்திசை. உச்சிக்கிழான் - பகற்பொழுதிற்குரியோன். சூரியன்கோயிலென்றபடி.

இ - ள். கீழ்த்திசையிற்றோற்றுகின்ற சூரியன்கோயில், இனிப் பகற்பொழுதிற்கு வருவாயாயுள்ளவனென்றுமாம்.

௧௧. ஊர்க்கோட்டம்—இ - ள். இறைவனாராகிய கைலாயநிற்குங்கோயில்,

௧௧. வேற்கோட்டம்—இ - ள்.

முருகவேள்நிற்குங்கோயில்,

வேல் - ஆகுபெயர்.

௧௨. வச்சிரக் கோட்டம்—இ - ள்.

வச்சிரப்படைநிற்குங்கோயில்,

௧௨. புறம்பணையான் வாழ்கோட்டம்—இ - ள்.

சாதவாகனன்கோயில்,

புறம்பு அணைந்தவிடம் - புறப்பணையாயிற்று. "புறம்பணை யியம்பு மோசை" என்றார் சிந்தாமணியினும்,

௧௩. நிக்கந்தன் கோட்டம்—இ - ள். அருகன்கோயில்,

என்னை? "துக்கந் துடைக்குந் துகளறு காட்சிய, நிக்கந்த வேடத் திருடிக ணங்களை, யொக்க வடிவீழ்த் தலகியல் செய்தபி, னக்கதை யாழ்கொண் டமைவரப் பண்ணி" என்றார் வளையாபதியினும்.

௧௩.

நிக்கந்தக் கோட்டம்:
எழுத். ப.க். ௧௦௫.

தொ"ல்

கொண்டு

சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளிற்

சென்றாங்கு

கிடுபிணந் தின்னு மிடாகினிப்பேய் வாங்கி
மடியகத் திட்டாண் மகனை ॥

இ - ள். சுடுகாட்டுக்கோட்டத்து இடுபிணந்தின்னும் இடாகினிப்பேய் எசம்

படி ஓரிளங்கொடியாய்த் தூங்கிருளிற்சென்று அங்குப் பாடுகிடந்தானைநோக்கி

ஒன்றினுங்குற்றமற்றவளே, கேளாய்; முற்பவத்தில் தவஞ்செய்யாதோர்க்குத் தேவ

ரும் வரங்கொடார்; அது பொய்யன்று; மெய்யெனச்சொல்லி அங்ஙனம்பட்ட

---

* சீவகசிந்தாமணி, கடவுள்வாழ்த்து.

† இதனை, "பாசண்டத் துறையு மிவற்றுட் பலவாம், பேசிற் றொண்ணூற்

றறுவகைப் படுமே" என்னும் திவாகரச்சூத்திரத்தானுமுணர்க; கஉ-வது.

‡ மகாசாத்தனென்பதெனவும் பிரதிவேறுபாடுண்டு.

§ அகநானூறு, மணிமிடைபவளம், உகஉ. "கிளையரி ஞெணற் கிழங்கு

மணற்கீன்ற, முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய், நயவன் றைவருஞ்

செவ்வழி நல்யா, ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி, யணங்குசா லரிவையை

நகைஇ''



கின் பின்ளைப்பிணத்தைப் பார்க்கத்
தந்துகாணெனச்சொல்லாரின்று பறித்து அவள்வாங்கி
மடியகத்திட்டாளென்க.

ஏசல் - பழித்தல். படி - வடிவு. பிறைப்பழிக்கும் வடிவையுடையதொரு பெண்வடிவாய். சுடுகாட்டுக்கோட்டம் - *சக்கரவாளக்கோட்டம் துங்கிருள் - செறிந்தவிருள்; யாவரும் துஞ்சுமிருளுமாம். இடுபிணம் - குழியிலிடுபிணம். மடி - வயிறு. †"படியை மடியகத் திட்டான்" என்பதனாலுமுணர்க. இட்டான் - விழுங்கினாள். மக - ‡"குழவியு மகவு மாயிரண் டல்லவை, கிழவ வல்ல மக்கட் கணமே" என்பதனாற் கூறப்பட்டது. பாலகனென்பது காவ்யூாக்கு - உஉ.-உஅ.

இடியுண்ட

மஞ்ஞைபோ லேங்கி யழுதாளுக் கசசாத்த
§னஞ்ஞைநீ யேங்கி யழலென்று முன்னே
யுயிர்க்குழவி காணுயென் றக்குழவி யாயோர்
குயிற்பொதும்பர் நீழற் குறுக வயிர்ப்பின்றி
மாயக் குழவி யெடுத்து மடித்திரைத்துத்
தாய்கைக் கொடுத்தாளத் தையலாள்

இ - ள். இடிக்குரல்கேட்ட மயில் அகவுமாபோல ஏங்கியழுகின்ற தையலாளுக்கு அச்சாத்தன் அன்னாய், நீசெல்கின்ற வழிமுன்னர்ப் பொதும்பரிடத்து உயி ரோடுகிடக்கின்ற குழவியைக் காண்கின்றிலேயோவென, அவள்

அதுசெய்ய, ஏங்கி அழுகின்றாய் அழாதொழியென்று தான் அக்குழவியாய் அவ்விடத்துச்சென்று கிடப்ப, அவள் வஞ்சக்குழவியை ஐயமின்றித் தன்குழவியென்றெடுத்து வயிற்றிலே யணைத்துக் கொடுபோய்த் தாய்கையிற் கொடுத்தாள்; அங்ஙனமேங்கியழுத அத்தையலாளெனக.

அடிக்கப்பட்டதனை அடியுண்டதென்றாற்போல இடிக்கப்பட்டதனை இடியுண்டதென்றார்; உண்டல் - உறுதல். உ-அ-௬௨.

தூய,

மறையோன்பின் மாணியாய் வான்பொருட்
கேள்வித்
துறைபோ யவர்முடிந்த பின்ன ரிறையோனுந்
தாயத்தா ரோடும் வழக்குரைத்துத்
தந்தைக்குந்
தாயர்க்கும் வேண்டுங் கடன்கழித்து
மேயநாள்

---

* சக்கரவாளக்கோட்டம் - காவிரிப்பூம்பட்டினத்துப் பண்டைக்காலத்து மயனால் நிருமிக்கப்பட்டது; இதன்வரலாற்றை மணிமேகலை, 'ஆறாவது சக்கரவாளக் கோட்டமுரைத்தகாதையிற்காண்க.

† நான்மணிக்கடிகை, கடவுள்வாழ்த்து:
"படியை மடியகத் திட்டா னடியி னான், முக்காற் கடந்தான் முழுநில மக்காலத், தானிரை தாங்கிய குன்றெடுத்தான் சோவி, னருமை யழித்த மகன்."

‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், உ௬.

§ அஞ்ஞை - அன்னை; "அஞ்ஞை யிழந்த சிறுவென

கொக்து" என்றார் கச்சியப்பமுனிவரும்; திருத்தணிகைப்புராணம், சீபரிபூரணநாமப்படலம், ௫௬௧.

௬.—கனுதந்றமுரைத்தகாதை.

உ௬௭

இ - ள். அக்குழவியாய இறையோனும் இருமரபுந்தூய மறையோனுக்குப் பின்செல்லும்பிள்ளையாய் மிக்க கல்விகளையும் இவற்றின்பொருட்கேள்விகளையும் கற்றும் தரித்தும் துறைபோய்த் தந்தைதாயிறந்தபின்னர் அவர்க்கு நீர்க்கடன் முதலியவுஞ்செய்து தன்சுற்றத்தாரோடும் வெல்வழக்குரைத்து எட்டியாண்டு தன் மனைவியோடேகூடிநடந்தபின் ஒருநாளிலென்க.

வான்பொருட்கேள்வி - மறைநூலும் அங்கமும். துறைபோதல் - அதற்குத் தகநிற்றல். மாணியாயெனவே சௌளமும் உபநயனமும், துறைபோயெனவே கல்விகேள்விமுதலிய பிரமசரியமுங்கூறி, மேல், "தேவந்தியென்பாண் மனைவி" என்பதனான் விவாகமும் காருகத்தமுங்கூறினமையுமுணர்க. இறையோனும், உம்மை - சிறப்பு. வழக்குரைத்தெனவே, தன்மனைவிக்குப் பொருட்குறைபாடில்லாமற்செய்து என்பதாயிற்று. இறையோனும் அவர் மடிந்தபின்னர்க் கடன்கழித்து வழக்குரைத்தென்க. தாயரென்றார் மாலதியையுங்கூட்டி. மேயநாள் - மேவிய நாள்=இவனைத் தீவலஞ்செய்த *நாலீராண்டு கழிந்தபின்னர். மேவினனென்று பாடமோதித் தன்னைமேவினவளென்று பொருளுரைப்பாருமுளர்.

௩௩ - ௩௬. தேவந்தி யென்பாண் மனைவி யவளுக்குப் பூவந்த வுண்கண் பொறுக்கென்று மேவித்தன்

மூவா விளகலங காட்டியெங் கோட்டத்து
நீவா வெனவுரைத்து நீங்குதலும்

இ - ள். அங்ஙனம் கூடி நடந்த தன்மனேவியாகிய தேவந்தியென்று பெயர் கூறப்படுவாளுடைய பூவின்றன்மை தலைவந்த மையுண்ட கண்கள் இதனைப் பொறுப்பதாகவென நிருமித்துக்கொண்டு பின்பு அவனைமேவித் தனது எக்காலத்தும் முதிராத இளைய அழகினதுநலத்தை வெளிப்படுத்தி அவன் அவள் குறிப்பினையறிந்து அதற்கேற்ப அவட்கு நீ எங்கோட்டத்து வாவெனச்சொல்லிப் பிறர்க்கெல்லாம் தீர்த்தத்துறைபடிவேனெனச்சொல்லி நீங்கினுனெகவென்க.

மக்கள்கண்ணிற்குத் தெய்வயாக்கை காணப்பொறாதாகலின் இவள்கட்குப் பொறுக்கக்கடவதென்று நிருமித்துக்கொண்டான்; †"அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து" என இதனுள்ளும், ‡" கரந்துரு வெய்திய கடவு ளாளரும்" ‡" தேவரு மக்களு மொத்துடன் றிரிதரு, நா லேழ் நாளினும்" என மணிமேகலையுள்ளுங் கூறினமையானுமுணர்க. இனி உண்கணென்பதனை முன்னிலைவிளியாக்கி இம்மறையை நீபொறுக்கவென்று சொல்லிக்காட்டினுனெனினுமமையும்..

---

* " பாசண் டன்பாற் பாடு கிடந்தாட், காசில் குழவி யதன்வடி வாகி, வந்தன
னன்னை நீ வான்றுய ரொழிகெனச், செந்திறம் புரிந்தோன் செல்ல னீக்கிப், பார்ப்
பனி தன்னெடு பண்டைத் தாய்பாற், காப்பியத் தொல்குடிக் கவின்பெற வளர்ந்து,
தேவந் திகையைத் தீவலஞ் செய்து, நாலீ ராண்டு நடந்ததற் பின்னர், மூவா விள

கலங் காட்டியெங் கோட்டத்து, நீவா வென்றே நீங்கினன் சாத்தன்'' என மேல் வரந்தருகாதையிலும் இக்கதையை விரித்துக்கூறுவர். [எஅ - அஎ.]

† கடலாடுகாதை, எஉ - எரு.

‡ மணிமேகலை, முதலாவது விழாவறைகாதை.





௩௯ - ௪0. தூமொழி
யார்த்த கணவ னகன்றனன் போயெங்குந்
தீர்த்தத் துறைபடிவே னென்றவனைப்
பேர்த்திங்ஙன்
மீட்டுத் தருவா யெனவொன்றின் மேலிட்டுக்
கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்

இ - ள். அங்ஙனமாகிய தூமொழி என்னெஞ்சிற்பிணித்தகணவன் தீர்த்தத் துறைகளெங்கும்போய்த் தீர்த்தமாடுவேனென்று என்னைவிட்டகன்றனன்; மறுத்தும் இவ்விடத்தே அவன்மனத்தைத் திரும்பப்பண்ணி அழைத்துத் தருவாயென்று ஒருபெயரிட்டுக்கொண்டு அவன்கோட்டத்தை வழிபடுதலை நாடோறும் கடனாகக் கொண்டிருக்கின்றவளென்க.

௪0 - ௪௪. வாட்டருஞ்சீர்க்
கண்ணகி நல்லாளுக் குற்ற குறையுண்டென்
றெண்ணிய நெஞ்சத் தினையளாய் நண்ணி
யருகு சிறுபூளை நெல்லொடு தூஉய்ச் சென்று
பெறுக கணவனோ டென்றாள்

இ - ள். நிறைந்த சீருடைய கண்ணகியாகிய நல்லாளுக்குக் கொழுநன்பிரிதலால் உற்றதோர் துன்பமுண்டென்றுநினைந்த நெஞ்சின்வருத்தத்தையுடையாளாய்க் கோட்டத்தைநண்ணி அறுகுமுதலியவற்றை இவள் கணவனைப்பெறல்வேண்டுமெனத் தூவிப் பின்னர்க் கண்ணகிபாற்சென்று ஆண்டு ஆசிகூறுவாள் கணவனைப் பெறுவாயாகவென்றாளென்க.

இனிக் கண்ணகிபானண்ணிச் சென்றுதூவிக் கணவனோடு வாழ்வுபெறுக வென்றாளெனினுமமையும். வாடு வாட்டெனவிகாரம். வாடுதல் - குறைதல், குறைதலரியவெனவே நிறைந்தவென்பதாயிற்று. பிறரால் வாட்டுதலரியவெனவு மாம். இணைதல் - இணையாயிற்று; விகாரம். கணவனோடு - கணவனை.

சச - ருச. பெறுகேன்
கடுக்குமென் னெஞ்சங் கனவினு லென்கை பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம் பட்ட பதியிற் படாத தொருவார்த்தை யிட்டன ரூரா ரிடுதேளிட் டென்றன்மேற் கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக் காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன் காவலனோ டூர்க்குற்ற தீங்கு மொன் றுண்டா லுரையாடேன் றீக்குற்றம் போலுஞ் செறிதொடீஇ தீக்குற்ற முற்றேனோ டுற்ற வுறுவனோ டியானுற்ற நற்றிறங் கேட்கி னகையாகும்

## கூ.—கனாத்திறமுரைத்தகாதை.

உகக

இ - ள். செறிதொடீஇ, நீ இவ்வனங்கூறுதலாற் பெறுவேனாயினும் என் னெஞ்சம் ஐயுறுகின்றதுகாண்; அஃது

எற்றுலெனின், நெருநற் கள்குற் கனவின் கண் என்கொழுநன் என்னைக் கைப்பற்றினனாய்ப்போக யாங்கள் ஓர் பெரிய பதிக்கட்புக்கோம் ; அங்ஙனம்புக்க பதியிடத்தே எங்கட்கு ஏலாததோர் படிற்று ரையை அவ்வூரார் இடுதேளிடுமாறுபோல என்மேலிட்டனர் ; அங்ஙனம் அவரி டப்பட்ட அப்படிற்றுரைக் கோவலற்கு ஓர் தீங்குற்றதென்று பிறர் சொல்லக்கேட்டு அதுபொறாது அவ்வூரரசன்முன்னர்,செல்லாதேன்சென்று வழக்குரையாதேன்வழக் குரைத்தேன் ; ஆதலால் அவ்வரசனோடு அவ்வூர்க்கும் உற்றதோர்தீங்குண்டு ; ஆனாலும் அவை தீக்கனவாதலான் நினக்குரையேன்; இங்ஙனம் தீவினையுற்ற என்னோடு பொருந்திய மிக்கோனுடனே யான்பெற்ற நற்றிறங்களை நீகேட்பாயாயின் அது நினக்கு நகையைத்தருமென்றுசொல்லவென்க.

கடுக்கும் - ஐயுறும் ; கடியென்னுமுரிச்சொல் ஈறுதிரிபு ; *"போற்றி னரி யவை போற்றல் கடுத்தபின் - றேற்றுதல் யார்க்கு மரிது" என்றாற்போல. அது †"ஐயமுங் கரிப்பு மாகலு முரித்தே" என்பதனான்முடிந்தது. கனவினாற் கடுக்குமெனினுமமையும். இடுதேளிடுதல் - தேளிடப்படுவார் காணுமே தேளல்லாததொன் றை மறையக் கொடுவந்து மேலேயிட்டு அவரைக் கலங்கப்பண்ணுதல் ; பாய்ச்சுந் தேளென்பாருமுளர். என்றன்மேல், தன் - அசை. தீங்கென்றது கேட்டு - தீங் கென்றுசொல்ல அதுகேட்டு ; சொல்லவென ஒருசொல்வருவிக்க. ஒடு - எண் ணொடு ; வேறுவினை ஒடுவுமாம் ; ஆவது காவலன்மாணமும் ஊர்தீப்பாடும். உம்மை இறந்ததுதழீஇயவெச்சவும்மை. உரையாடேனென்றாள் ; ‡"உரையா ரிழிதக்க காணிற் கனா" என்பது பழமொழியாகலின். தீக்குற்றம் - கடிதானகுற்றம். ஆவது முலைதிருகியெறிதல். நற்றிறம் - இருவரும் சுவர்க்கம்புகுதல. நகையாகு மென்றாள்,

இது கிட்டாததொன்றாகலின். எனவென எண்டும் ஒருசொல் வரு. விக்க. என்மேலென்றாள், பெண்பாற்றன்மையான் ; அன்றி இப்பழி தான் சுமந்து நிற்றலானெனினுமமையும்.

ருசு-ரு௬. பொற்றொடீஇ

கைத்தாயு மல்லை கணவற் கொருநோன்பு
பொய்த்தாய பழம்பிறப்பிற் போய்க்கெடுக
வுய்த்துக
கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றின்
மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய குண்டத் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர்
யாமொருநா
ளாடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள்
பீடன் றெனவிருந்த பின்னரே

* திருக்குறள், மன்னரைச்சேர்ந்தொழுகல், ரு.
† தொல்காப்பியம், சொல்லதிகாரம், உரியியல், அஅ.
‡ பழமொழி, கஅ௨.



இ - ள். பொற்றொடீஇ, நீ கண்டகனுக்கொண்டு வருந்தவேண்டா ; நீ அவனால் வெறுக்கப்பட்டாயுமல்லை ; நின்கணவன்காரணமாக ஒருநோன்பு முற்பிறப் பிலேதப்பினாய் ; அதனால் உள்ளதீங்குமிக்கன ; இத்தீங்குக்கெடுவதாகக் காவிரி தன்னீரைக்கொண்டுசென்று கடலோடெதிர்த்து அலைக்கும்

சங்கமுகத்தயலதாகிய பூவினிதழவிழும் நெய்தற்கானலிடத்து இரண்டு தடாகமுள்ளன ; அவை யாவை யெனிற் *சோமகுண்டம் சூரியகுண்டமென்னும் பெயராயுடையன ; அவற்றின் றுறைகளின்மூழ்கிக் காமவேள்கோட்டத்திற்புக்கு அவனைத் தொழுதாராயின், அவர் இப்பிறப்பினுள்ள நாளெல்லாம் தங்கணவரோடும் பிரிவின்றியிருந்து இவ்வுலகத்து இன்பமுறுவர் ; மறுமைக்கும் போகபூமியிலேயும் போய்ப்பிறந்து கணவரோடும் பிரிவின்றி மூன்றுபல்லங்காலம் இன்பநுகர்வராதலான் அவற்றை யாமும் ஒரு ஞான்று ஆடக்கடவேமென்று சொன்ன தேவந்திக்குக் கண்ணகி அங்ஙனம் துறை மூழ்கித் தெய்வந்தொழுதல் எங்கட்கு இயல்பன்றென்று சொல்லி இருந்தபின்னுக வென்க.

†"காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்" என்றாராகலின், இங்ஙனங்கூறினாள். இக்குண்டமிரண்டிற்கும் இவ்வுலகத்தின்புறலும், போகபூமியிற்பிறத்தலும் நிரனிறையாக்கலுமொன்று , அவற்றை, ‡"இருகாமத் திணையேரி" என்றார் பட்டினப்பாலையிலும்.

௬௪-௬௬.

நீடிய

காவலன் போலுங் கண்டத்தலையான் வந்து நங்

கோவலனென்றாளோர் குற்றிளையாள்

இ - ள். அங்ஙனஞ்சொல்லி அவளிருக்கின்றவளவிலே குறுந்தொழிலிளையாள் காவலன்போலுங்கோவலன் நீடிய நங்கடையிடத்தானென்றாளென்க.

அன்றித் தூரத்தேபார்த்து ஐயுற்று நங்காவலன்போலுமென்று அவனணுகின விடத்து ஐயந்தீர்ந்து கோவலனென்றாளென்றுமமையும். இனி நங்கோவலன் வருகின்றவரத்து நம்மை நெடுங்காலம் காப்பான்போலே இராநின்றதெனறு ளெனினுமமையும்.

௬௬-௭௧.

கோவலனும

பாடமை சேக்கையுட் புக்குதன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண டியாவுஞ்

---

* இங்கேகூறிய சோமகுண்டமும் சூரியகுண்டமும் முறையே திருவெண் காட்டுள்ள சோமதீர்த்தமும் சூரியதீர்த்தமுமாமென்று சிலபெரியோர் கூறுகின்றனர்.

† சீவகசிந்தாமணி, கனகமாலையாரிலம்பகம், ௪௨. "சாமெனிற் சாத லேதை தன்னவன் றணந்த காலைப், பூமனும் புனைத லின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக், காமனை யென்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார், தேமலர்த் திருவொ டொப்பார் சேர்ந்தவன் செல்ல தீர்ப்பார்."

‡ பத்துப்பாட்டு, பட்டினப்பாலை, ௩௯ - ௪௧. "இருகாமத் திணையேரிப், புலிப்பொறிப் போர்க்கதவிற், றிருத்துஞ்சுந் திண்காப்பின்."

௭௨. சிலம்பாடு நகரைத் தடும்:
தொல். எழுத். ந. பச். ௧௬௦
சொல். ந. பக். ௨௧௭.
சி - லி. பக். ௧௧௭,
௨௯௪,

௯—கனாத்திறமுரைத்தகாதை. ௨

"சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
விலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன

இ - ள். அங்ஙன் கடைத்தலையானை கோவலனும் கொடியிடையார்தாம் விளக்கங்காட்டிக் கோலங்கொள்ளாநிற்ப அக்காலத்தேவந்து பெருமையமைந்த சயனத்திடத்தேபுக்கவன் தனது பைந்தொடி யுடைய மேனிவாட்டமும் நெஞ்சவருத்தமுங்கண்டு அவன் எல்லாப்பொருளையும் பொய்யை மெய்யாகப்பொருந்து வித்தொழுகும் பொய்த்தியோடுங்கூடி ஆடிய ஒழுக்கத்தினுலே நங்குலத்திலுள் ளார் தேடித்தந்த மிக்க நிதிக்குன்றமெல்லாம் அவன்பொருட்டால் தொலைந்ததனுன் இல்லாமையுண்டாதல் எனக்கு நாணைத்தருகின்றதுகாணென்னவென்க.

பாடு - படுக்கை. சலம் - பொய். சலதி - பொய்த்தி. ஆடுதல் - உடனுதல். குலந்தருவான்பொருள் - தொன்றுதொட்டுவருகின்றபொருள். இன்று நாணுத்தரு மென்றது, கெட்டால் மதிதோன்றுமென்னும்வழக்கு.

எஉ-எரு. நலங்கேழ் முறுவ னகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மென

இ - ள். இவ்வாறு இவன் தன்னைப்போற்றி இலம்பாடு நாணுத்தருமென் றதனை மாதவிக்குக்கொடுக்கும் பொருட்குறைபாட்டால் தளர்ந்து கூறினுனகக் கருதி ஒளிபொருந்தியமுகத்தே நலம்பொருந்திய சிறிய முறுவலைவிளைத்து இன் னுஞ் சிலம்பு ஓரிணையுள ; அவற்றைக் கொண்மினென் றுளென்க.

சிலம்புளவென்றுள் ; இவையொழிந்த கலனெல்லாம்

தொலேதலால். இவை அணியாதிருத்தலே
இவனறியாளுகக்கருதிறும் அவன் தளர்ச்சிகூறுதலால் தான்
இவையுண்மைநினைந்து கூறினுளென்க. புலந்துகூறினுளெனிற்
கற்பின்றன்மை யனுரும்,

எ௩-எ௯. சேயிழை கேளிச்
சிலம்பு முதலாகச சென்ற கலனெடு
டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னெடிங்
கேடலர் கோதா யெழுகென்று நீடிய
வினைகடைக் கூட்ட வியங்கொண் டான் கங்குற
கனைசுடர் கால்சியா முன்.

இ - ள். இங்ஙனம் கருதியசேயிழாய், கேள் , நீசொன்ன
இச்சிலம்பை நான் வாணிகமுதலாகக்கொண்டு முன்புநான்
வாங்கியழித்தகலனையும் அல்லாக் கெட்ட பொருளைப்
பொருளானும் தேடித்தொகுத்தலைத்துணிந்தேன் ; அஃது
எவ்விடத்தே சென்றெனின், விரிந்த புகழையுடைய
மதுரையென்னுநகரிடத்தேசென்றுதலாற் கோதாய், அதற்கு நீ
இப்பொழுதே இங்குநின்றும் என்னேடெழுவாயாகவென்று
சொல்லி முற்பவத்திற்றான்செய்த தீவினை நெடுங்காலநின்று
நெஞ்சை ஒருப்படுத் உஉஉ சிலப்பதிகாரம்.

துதலானே அவ்வினையின்தேவலைக்கொண்டான், எப்பொழுது
பேரிதற்கெனிற் கங்குலே அவ்விடத்தினின்றுஞ் சுடர்
போக்குவதன்முன்னேயென்க.

சீத்தல் - விளக்குதல். சிலம்புமுதலா .........

உற்றேனென்பதற்குக் கலனைச் சிலம்பானும் பொருளைப் பொருளானும் ஈட்டுதலுற்றேனென்றானென்க. இரண்டும் இதனானே ஈட்டுதலுற்றேனென்றானெனினுமமையும்.

இது, கனவென்னும் பொருளையேகருதாது மாலதிகதையையும் தேவந்திகதையையும் கலந்துகூறிற்றேனும், உறுப்பழிவின்றி நடந்ததேனும் மூன்றாங்கடியி னிறந்துவருதலான் கெடுவெண்பாட்டாகாது கலிவெண்பாட்டாதலுணர்க.

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை வறிதாக்க - மூதை
வினைகடைக் கூட்ட வியங்கொண்டான்

கங்குற்

கனைசுடர் காலசியா முன்.

இவட்கு மேற்கூட்டமின்மையாற் கருநெடுங்கண்ணென்றார்; கனவு சொல்லை வறிதாக்க வினைகடைக்கூட்ட, வியங்கொண்டானென்க. சொல்லைவறிதாக்குதல் - வேனிற்காதையிற் காலைகாண்குவமென்றசொல்லைப் பயனின்றாக்குதல்.

பருந்து நிழலுமென ...
...அடியார்க்குநல்லானென்பான்.

ஓருந்தமிழ் ... ... ... ...நிரம்பையர்காவலனே.
காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

## கனாத்திறமுரைத்தகாதை முற்றிற்று.

---

# பத்தாவது

# நா டு கா ண் கா தை.

வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்காரிரு
ணின்ற கடைநாட் கங்கு
லூழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
வேழகத் தகரு மெகினக் கவரியுந்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந்
தாழொடு குயின்ற தகைசால் சிறப்பி னீணெடு
வாயி னெடுங்கடை கழிந்தாங் கணிகிள ரரவி
னறிதுயி லமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக்
கழிந்து பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி யந்தர
சாரிக ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் போகிப்
புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் தடங்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய

வைவகை நின்ற வருகத் தாணத்துச்
சந்தி யைந்துந் தம்முடன் கூடி
வந்து தலைமயங்கிய வான்பெரு
மன்றத்துப பொலம்பூம் பிண்டி நலங்கிளர்
கொழுநிழ லீரணி விழவினு நெடுந்தேர்
விழவினுஞ் சாரணர் வரூஉந் தகுதியுண்
டாமெனவுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
இலகொளிச் சிலாதலந் தொழுது
வலங்கொண்டு மலைதலைக் கொண்ட பேர்யாறு
போலு முலக விடைகழி யொருங்குட னீங்கிக்
கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருத மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த



ரிலவர் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி னுழைந்து
காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப்

பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிருங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து
முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ
வாறைங் காதம் மகனாட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தென நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
காவுந்தி யையையைக் கண்டடி தொழலு
முருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னோ வுறுக ணாளரிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறென
வுரையாட் டில்லை யுறுதவத் தீர்யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ
வுரிய தன்றீங் கொழிகென வொழியீர்
மறவுரை நீத்த மாசறு கேள்விய
யறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற

காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்
கோவலன் காணாய் கொண்ட விந்நெறிக்
கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு

## க௦.—நாடுகாணகாதை.

பயில்பூந் தண்டலைப் படர்குவ மெனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த தாதுசேர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டு
முதிர்பூஞ் செம்மலி னொதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டு
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச
செஞ்சுளைப் பலவின் பரற்பகை யுறுக்குங்
கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விளங்கப் பாயிற்

கலங்கலு மூண்டிக் காரிகை யாங்கட்
கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னொண்டு கொள்ளவுங் கூடுங்
குறுந ரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடு
மெறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா
வயலுஞ் சோலையு மல்லது யாங்கணு
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோனொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெனத்
தோமறு *கடிஞையுஞ் சுவன்மே லறுவையுங்
காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்

---

* கடிகையெனவும்பாடம்.

# சிலப்பதிகாரம்.

கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடு
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு கடல்வள
னெதிரக் கயவாய் நெரிக்குங் காவிரிப் புதுநீர்க்
கடுவரல் வாய்த்தலை யோவிறந் தொலிக்கு
மொலியே யல்ல தாம்பியுங் கிழாரும்
வீங்கிசை யேத்தமு மோங்குநீர்ப் பிழாவு
மொலித்தல் செல்லாக் கழனிச் செந்நெற்
கரும்புசூழ் மருங்கிற் பழனத் தாமரைப் பைம்பூங்
கானத்துக் கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம் போலப் பல்வேறு
குழூஉக்குரல பரந்த வோதையு முழாஅ
நுண்டொளி யுள்புக் கழுந்திய கழாமயிர் யாக்கைச்
செங்கட் காரான் சொரிபுற முரிஞ்சப் புரிஞெகிழ்
புற்ற குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு கவரிச்
செந்நெற் காயத்தலைச் சொரியக் கருங்கை
வினைஞருங் களமருங் கூடி

யொருங்குநின் றூர்க்கு மொலியே யன்றியுங்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்துசேறு
கோலமொடு வீறுபெறத் தோன்றிச செங்கய
னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற பாணியுங
கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
ஞ வேரொடு நின்றோ ரேர்மங் கலமு
மரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
பெருஞ்செந் நெல்லின் முகவைப் பாட்டுந்

## ௧௦.—நாடுகாண்காதை.

௨௨௭

தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்
பேரியாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளா
ருழைப்புலிக் கொடித்தே ருரவோன்
கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்
மறையோ ராக்கிய *வாவுதி நறும்புகை
யிறையுயர் மாட மெங்கணும் போர்த்து

மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்றி
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
ரிரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடு பரந்து
மங்குல்வா னத்து மலையிற் றோன்றி
யூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்னா ளொருநா
ளாற்றுவீ யரங்கத்து வீற்றுவே றுகிக்
குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா றொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டன ரீங்காப்
பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக வென்றே
கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயிழை

மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்
கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணா
யொழிகென வொழியா தூட்டும் வல்வினை
யிட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி

---

* வானவிறும்புகையென்றும், வானவருணாஅவென்றும் பாடம்.



யொட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா
கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்க
ளறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
றரும முதல்வன் றலைவன் றருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி

லொளியோன்
றத்துவன் சாதுவன் சாரணன்
காரணன்
சித்தன் பெரியவன் செம்ம றிகமொளி
யிறைவன் குரவ னியல்குண
னெங்கோன்
கஅு குறைவில் புகழோன் குணப்பெருங்
கோமான்
சங்கர னீசன் சயம்பு சதுமுக
னங்கம் பயந்தோ னருக னருண்முனி
பண்ணவ னெண்குணன் பாத்தில
பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் வி
ளங்கொளி
ககூ0 யோதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை
யோரெனச்
சாரணர் வாய்மொழி கேட்டுத் த
வமுதற்
காவுந் திரிந்தன் கைதலை மேற்கொண்
டொருமூன் றவித்தோ னோதிய
ஞானத்
கசூடு திருமொழிக் கல்லதென் செவியகந்
திறவா
காமனை வென்றோ னாயிரத் தெட்டு

நாம மல்லது நவிலா தென்னு
வைவனா வென்றே னடியிணை யல்லது
கைவனாக் காணினுங் காணு வென்க
ணருளறம் பூண்டோன் றிருமெய்க்
கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற்
பொருந்தா
தருக ரறவ னறிவோற் கல்லதெ
ணிருகையுங் கூடி யொருவழிக் குவியா
மலர்மிசை நடந்த மலரடி யல்லதென்
றலைமிசை யுச்சி தானணி பொறாஅ
திறுதியி லின்பத் திறைமொழி யல்லது
மறுதர வோதியென் மனம்புடை
பெயரா
தென்றவ னிசைமொழி யேத்தக்
கேட்டதற்

## ௪0.—நாடுகாண்காதை.

௨௨௬

கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவங்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றநநர மாறுப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப பணிந்தனா போநது
காரணி பூம்பொழிற் காவிரிப் பேரியாற்ப

நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதரும் கணவனு மாதவத் தாட்டியுந்
தீதுதீர் நியமத் தெ[illegible]கிப்
போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழி
லிருந்துழி
வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் *சென்றோ
ர
காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ராரெனக் கேட்டீங் கறிகுவ மென்றே
நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீரு
ஞற்று வழிப்பட்டோ ராரென வினவவென்
மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீக்குமின் பரிபுலம் பினரென
வுடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்
தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னாக் கண்ணகி நடுங்க
வெள்ளுநர் போலுமிவ ரென்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்ட தவந்தரு சாபங்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்
குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினு
மறியா மையென் றறியல் வேண்டுஞ்

செய்தவத் தீர்நந் திருமுன் பிழைத்தோர்க்
குயதிக் கால முறையி ரோவென
வறியா மையினின் றிழிபிறப் புற்றோ
ருறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப்
பன்னிரு மதியம் படாநோ யுழந்தபின்

* சென்றழியெனவும்பாடம்.



## சிலப்பதிகாரம்

முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனு
முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென.

க - ௩. வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிரு ளின்ற கடைநாட் கங்குல்

இ - ள். உலகிற்குக் கண்ணாகிய ஆதித்தன் தோன்றிவிளங்காத வைகறை யென்னும் யாமத்திடத்து மீனோடு அழகுபெற்றொழுகும் வெண்மதியானது விசும்பினின்றும் நீங்கிற்றாகக் கரிய இருள் கடைக்கணின்ற கங்குற் பொழுதிலென்க.

என்பது : அந்தச் சித்திரைத்திங்கட் புகுநாள் - சோதி, திதி - மூன்றாம்ப

கம், வாரம் - ஞாயிறு. இத்திங்களிருபத்தெட்டிற் சித்திரையும் பூரணையுங்கூடி
சனிவாரத்திற் கொடியேற்றி *"நாலேழ் நாளினும்"
என்பதனன் இருபத்தெட்
நாளும் விழாநடந்து கொடியிறங்கி வைகாசி
இருபத்தெட்டினிற் பூருவபக்கத்தி௳
பதின்மூன்றும் பக்கமும் சோமவாரமும்பெற்ற அனுடத்தில்
நாட்கடலாடி ஊடு
வின் வைகாசி இருபத்தொன்பதிற் செவ்வாய்க்கிழமையும்
கேட்டையும் பெற்
நாகயோகத்து நிறைமதிப் பதினலாம்பக்கத்து
வைகறைப்பொழுதினிடத்து கில‹
பட்ட அந்தரத்திருளிலேயென்றவாறு. அது பூருவபக்கமென்பது
தோன்றக் காரிே
ணின்ற கடைநாட் கங்குலென்றார்; †"குணமுதற் ரேன்றிய
வாரிருண் மதியிற்,
றேய்வன கெடுகெனிற் றெவ்வ ராக்கம்" என
இருண்மதியென்றார் மதுரைக்காஞ்சி
யுள்ளும். கண் - இறைவன்கண்ணென்பாருமுளர்.
விழித்தல் - விளங்குதல்;
அது செய்யாதவைகறை - ஆகுபெயர்; வைகல் - துயிறல்;
அறல் - அறையா
யிற்று; "பொறியறை" போல. ‡
௬. ஊழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
இ - ள். முன்செய்ததீவினை முறையானேவந்து
இவனுள்ளத்தைச் செலுத்
துதலானேயென்க.
கடைஇ - செலுத்தியென்றுமாம்.

ரு - அ. ஏழகத் தகரு மெகினக் கவரியுந்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந்

---

* மணிமேகலை, முதலாவது விழாவறைகாதை: "தூங்கெயி லெறிந்த தொ
டித்தோட் செம்பியன், விண்ணவர் தலைவனை வணங்கிமுன் னின்று, மண்ணகத்
தென்றன் வான்பதி தன்னுள், மேலோர் விழைய விழாக்கோ ளெடுத்த, நாலேழ்
நாளினு நன்கினி துறைகென, வமரர் தலைவ னுங்கது நேர்ந்தது"

† பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, கஅரு - கஅசு.

‡ இவ்விசேடவுரையிலுள்ள காலவரையறை பொருந்தாததுபோல் தோற்று
கிறது; ஆயினும் பிரதிகளிலுள்ளவாறே பதிப்பிக்கப்பட்டது. அது விளங்கிய
பின்பு தெரிவிக்கப்படும்.



தாழொடு குயின்ற தகைசால் சிறப்பி
னீரொடு வாயி னெடுங்கடை கழிந்து

இ - ள். ஏழகமாகிய தகரும் எகினமாகியகவரியும் தூய மயிரினையுடைய அன் னமுமாகியவிவை ஒன்றோடொன்று இனமல்லவாயினும் இனம்போலே விடாது திரியும் தாழோடுகூடப் பண்ணப்பட்ட பெருமைபொருந்திய சிறப்பினையுடைய மிகவும் பெரிய கதவையுடைய இடைகழியைக் கழிந்தென்க.

நெடுவாயிற்கடை - பெரிய கதவையுடைய தலைக்கடை. தகர்முதலியன இவள் வளர்த்தனவாகலின், இவளைத்

தம்மினமென்றுகருதித் திரியுமெனவுமாம். வாயிற் கணெழுதினவற்றை இனமெனக்கருதித் திரியுமெனவுமமையும். தாழொடுகுயி ன்றவென்றார், போர்க்கதவாகலின் இனியிளகாமற் பண்ணுகின்றபோதே கூடப் பண்ணுதலான். ஏழகத்தகர்முதலியன இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வாயில் - கதவு. கடைகழிந்தென்றார், மனையின்பெருமையும் காவன்மிகுதியுந் தோன்ற. இனி இவன் அன்று கழிந்தானெனினுமமையும்.

அ - கo. ஆங்கு

அணிகிள ரரவி னறிதுயி லமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக்
கழிந்து

இ - ள். அங்ஙனம் வாயில்கழிந்தபொழுதே அரவணையின்மீதே அறிவோடு துயில்கொள்ளும் மணிவண்ணனென்னும் திருநாமத்தையுடைய திருமால்கோயிலை வலஞ்செய்து கழிந்தென்க.

ஆவது வலத்திட்டேகுதல். அணி - அழகு. அறிதுயில் - யோகநித்திரை. மணிவண்ணன் - பெயர்.

கக - கச. பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி
யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் போகி

இ - ள். ஓங்கிய ஐந்துபணையினையும் பசிய இலையினையுமுடைய மாபோதி* நிழலிலெழுந்தருளிய அறவோனாகிய புத்தன் அருளிச்செய்த ஆகமத்தை ஆகாய சாரிகள் மறையவிருந்தோதி யாவர்க்கும் விளங்கப் பொருளுணர்த்தப்படும் இந்திர னிருமிக்கப்பட்ட விகாரங்களேழினையும் அடைவேகண்டு அவற்லைக் கழிந்து போயென்க.

அவை அவ்வூர்ப் †புத்தசைத்தியத்து இந்திரன் நிருமித்தனவாகிய மா*போதியைந்துபணையது... ... ... இயல்பு. திருமொழி - ஆகமம்.

ஏழாங்கு.
அறைந்து
சாற்றுதல் - ‡பாடமோதிப் பொருளுரைத்தல். விகாரம் - கையாற் கருவியாற் பண்ணாது மனத்தால் நிருமித்தல்.

---

* போதி - அரசமரம்.

† புத்தசைத்தியம் - பௌத்த வித்தியாசாலை ; புத்தனாலயமுமாம்.

‡ பாடமோதல் - மூலத்தை விளங்கச்சொல்லுதல்.



கரு - உரு. புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் தடக்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய
வைவகை நின்ற வருகத் தானத்துச்
சந்தி யைந்துந் தமமுடன் கூடி
வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப்
பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ
னீரணி விழவினு நெடுந்தேர் விழவினுஞ்

சாரணர் வருஉந் தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
இலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு

இ - ள். புலாலாகிய ஊணைத்துறந்து பொய்கூறுமையாகிய விரதத்தோடு பொருந்தி *அழுக்காறு அவாமுதலியவற்றைக் கைவிட்டு அறநூன்முதலியவற் றையறிந்து ஐம்புலனையுமடக்கிய கோட்பாட்டையுடையராய் உண்மைவகையுணர்ந்த சீரியோர்திரண்ட ஸ்ரீகோயிலில் பஞ்சபரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்துசந்தியுங் கூடி வந்து தலைமயங்கியிருக்கின்ற மிக்க பெரிய மன்றிற் பூவையுடைய பிண்டியி னது அழகுகிளரும நிழற்கண்ணே விசேஷ அயனதிகளிலும் விழவுகளிலும் ஆகாய சாரிகள் வரத்தகுமெனறு சாவகரெல்லாங் கூடியிடப்பட்ட விளங்காநின்ற ஒளியை யுடைய சிலாவட்டத்தை இவர்தொழுது வலங்கொண்டென்க.

புலவூண் - புலாலோடே உண்ணுமூணுமாம். புலையூண் பாடமாயிற் புலைய ருண்ணுமூணென்க. விரதத்து - விரதத்தோடே. அவலம் - அழுக்காறு அவா முதலியன. அறிந்து - அறியப்படும் அறநூல்களை அறிந்து. ஐவகை - பஞ்சபர மேட்டிகள் ; ஆவார் : அருகர், சித்தர், உபாத்தியாயர், ஆசிரியர், சாதுக்களென விவர். இனி ஐவகை நின்ற வருகத் தானத்துச் சந்தி... ... ..மன்றென்பதற்கு ஐந்து ஸ்ரீகோயிற்சந்திகூடிய மன்றென்பாருமுளர். பொன் பொலிவாதலன்றிப் பொலம் பொலிவாகாமையின் அருகனுணையான் எப்பொழுதும் பொற்பூவைப் பூக்கும் பிண்டி யென்க. சிலாதலம் - சந்திரகாந்தக்கல்லாற் படுத்தது. நீரணி விழவு - அபிடேகவிழவெனினுமமையும்.

உகூ - உஎ. மலைதலைக் கொண்ட பேர்யாறு போலு

மூலக விடைகழி யொருங்குட னீங்கி

இ - ள். மலையிடத்தே தலையையுடையதோர் பெரியயாறுபோலும் உலகிலுள் ளோராயவர் போக்குவரவு செய்தற்கமைந்த வூர்வாயிலே அக்காலத்துப் போவா ரோடு கலந்துபோய் அதனைவிட்டுநீங்கியென்க.

உலகவிடைகழி - ஊர்வாயில். இடையேகழிதலின், அவ்வாயில் இடைகழி யாயிற்று.
கோயிற்கோபுரத்தை மலையாகவும்,
அதனோடு மணந்துகிடந்ததெருவை ஆறாகவும் உவமித்தார்.

---

* "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ லான்கு, மிழுக்கா வியன்றதறம்" என்பது திருக்குறள் ; அறன்வலியுறுத்தல், ரு.

## ௧௦.—நாடுகாண்காதை.

௨௩௧.

௨அ - ௩௧. கலையி லாளன் காமர் வேனிலொடு
மலைய மாருத மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த
ரிலவந் திகையி னெயிற்புறம் போகி

இ - ள். மன்னவற்குக் காமன் வேனிலோடு தென்றலையும் திறையாக இடுதற் குப்பொருந்திய பலமலர்களை நிரைத்த நல்ல மரநிழலையுடைய இலவந்திகையினது எயிற்குப் புறத்திலேபோயென்க.

கலையிலாளன் - அநங்கன் ; கலை - சரீரம். காமர் - அழகு. பந்தர் - நிழல். இலவந்திகை - நீராவியைச்சூழ்ந்த வயந்தச்சோலை.

அஃதா அரசனும் உரிமையு மாடுங் காவற்சோலை, *"இலவந் திகையி னெயிற்புறம் போகி, ஞூலக மன்னவ னுழையோ ராங்குளர்" என்றார் மணிமேகலையிலும்.

௩௨ - ௩௩. தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து

இ - ள். இருமருங்கும் சோலைசூழ்ந்த புதுப்புனலாடப்போம் பெரிய வீதியை யுடைய காவிரிக்கரையில் திருமுகத்துறைகழிகின்ற வாயிலையும் கழிந்தென்க.

கடைமுகங்கழிந்தென்றார், காலையில் நாணீராடுவோர் பிறர்முகநோக்காது போதற்கு மறைந்துகழிவர்; இவரும் அவ்வாறுகழிந்தாரென்றற்கு.

௩௪. குடதிசைக் கொண்டு—இ - ள். மேற்றிசையைநோக்கிக்கொண்டு,

௩௪ - ௩௫. கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி லுழைந்து

இ - ள். வளவிய புனலையுடைய காவிரியினது பெரிய வடகரையிற் பொழிலைக்கழிந்தென்க.

கோடு - கரை. நுழைதல் - கழிதல். அன்றி இளமரக்காவாதலால், தாழ்ந்த கோட்டிடை நுழைந்துபோயெனவுமாம்.

௩௬ - ௪௧. காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறுமலர் கூந்தல் குறும்பல வுயிர்த்து

* மணிமேகலை, மூன்றாவது மலர்வனம்புகுகாதை: "பன்மல ரடுக்கிய நன் மரப் பந்த, ரிலவந் திகையி னெயிற்புறம் போகி, ஞூலக மன்னவ னுழையோ ரான்

ளர், விண்ணவர் கோமான் விழாக்கொ ணன்னுண், மண்ணவர் விழையார் வா னவ ரல்லது, பாடவெண் டிமிரா பன்மரம் யாவையும்,
வாடா மாமலர் மாலை ரேக் கவிற், கைபெய் பாசத்துப் பூதக்
காக்குமென், றய்யா னத்திடை யுணர்ந்தோர் செல்லார், வெங்கதிர்
வெம்மையின் விரிசிறை யிழந்த, சம்பாதி யிருந்த சம்பாதி வனமும்,
தவாநீர்க் காவிரிப் பாவைதன் றாதை, கவேரனாங் கிருந்த கவேர வனமு,
மூப்புடை முதுமைய தாக்கணங் குடைய, யாப்புடைத் தாக வறிந்தோ ரெய்தார்."



முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ

இ - ள். கறிய ஐவகைக் கூந்தலையுடையாள் அங்ஙனம் காதமென்றுசொல்லப் பதம் எல்லையைக்கடந்துசென்று கவுந்தியடிகளிருக்கின்ற பள்ளிக்கு அயலதோர் பொலிவினையுடைய செறிந்த இளமரச்சோலையளவுஞ்சென்றுபொருந்தி அவ்விடத்தே இனி இஃது இறுமெனத்தக்க கொடிபோலும் இடையும் அடியும் மிகவும் வருந்தி மேல் இளைப்பாற் குறுகவுயிர்த்து முற்றாதமழலைமொழியாலே கூர்த்த வெயிறிலங்க மதுரையென்னுமூதூர் யாதுதானென்று கேட்பவென்க.

காவதம் - காதம் ; பகுதிப்பொருள்விகுதி. பொதும்பர் - மரச்செறிவு ; கோடரமென்பதுமாம்.

சஉ - சங. ஆறைங் காதநம் மகனாட் டும்பர்
நாறைங் கூந்த லணித்தென நக்கு

இ - ள். நீகூறிய மதுரை நம் அகன்றநாட்டிற்குமேல்

ஆறைங்காவதங்காண் இனி அண்ணிதென்றுகூறி நக்கென்க.

யாதென்றவட்கு முப்பதென்னும் பொருள்மறைந்து காதம் ஆறைங்காத மென்றாற்போலிருத்தற்கு ஆறைங்காதமென்றான். நகுதல் - துன்பநகை. கூந்தல் - விளி.

சஉ - சடு. தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
காவுந்தி யையையைக் கண்டடி தொழலும்

இ - ள் அங்ஙனம்வினவின தேமொழிதன்னோடுசென்று தவவேலிக்கணிருந்த கவுந்தியடிகளைக்கண்டு அடிதொழுதலுமென்க.

சிறை - பள்ளியென்றுமாம்; ஸ்ரீகோயிலின் ஒருபக்கமுமாம்.

கழிந்து கழிந்து போகிக்கொண்டு நீங்கிப் போகிக் கழிந்து நுழைந்து கடந்து பொருந்தி கக்குக் கண்டு அடிதொழலுமென்க.

சஎ - சய. உருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும
பெருமகன் திருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னோ வுறுகணாளரிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய வாறெனு

இ - ள்.. இவர்கள் தொழுதார்களாக, அழகும் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் இறைவனூலிற்கூறிய விரதந்தப்பாமையுமென்னும் இவற்றையெல்லாம் ஒருதலையாகவுடைய நீங்கள் தீவினையாளரைப்போலே நுமதிடத்தைக்கழிந்துவருவதற்குக் கருதியதென்னோவென்றுகேட்ப வென்க.

பெருமகன் - அருகதேவன். திருமொழி - அவனருளிச்செய்த ஆகமம். உறுகணாளர் - மிடியாளரென்பாருமுளர். கடைகழிதல் இவர்க்கு மரபன்மையிற்கழிந் தென்றார். இவ்வும்மைகள் தோன்றுகின்றன.

எண்ணுக்குறித்தனவெனினும் சிறப்புப்பொருண்மை

௫௦ - ௫௧. உரையாட் டில்லை யுறுதவத் தீர்யான
மதுரை மூதூர் வரைபொருள்
வேட்கையேன்

## ௧௦.—நாடுகாண்காதை.

உ௩௫

இ - ள். மிக்க தவத்தினையுடையீர், இவ்வினாவிற்கு ஒருத்தரமில்லை; ஆயினும்
யான் கருதியதொன்றுண்டு; அதியாதெனின், மதுரையாகிய மூதூரிற்சென்று திரு மித்தபொருளைத் தேடக்கடவோமென்னும் வேட்கையையுடையேனுயினேனென்று சொல்லவென்க.

முன்னர்க்காதையில் *" சென்ற கலனே, லெந்தபொரு ளீட்டுத லுற்றேன்" என்றாகலின், அதனை வரைபொருளென்றான். இனி நியாயத்திற்றேடும்பொரு ளெனினுமமையும். அன்றி, இதற்கு இத்துணைப்பொருட்கு மேற்பட்டதே தானம்
பண்ணக் கடவேனென வரைந்தபொருளென்பாருமுளர், எனவென ஒருசொல்வருவிக்க. இனிக் கவுந்தியடிகள் கூறுவார்.

௫௨ - ௫௪. பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ

இ - ள். இனி அங்ஙனீங்கருத்தாயின், இவள்சீறடி பருக்கையாகிய பகையை வெல்லமாட்டா; ஆதலால் நீர் காடுநாடுமென்றும் இவ்வழியைக்கடத்தற்கு இவள் செவ்வி ஏற்றதன்று; இனி ஊழ் என்செய்துமுடிக்குமோ, ராரென்றாரென்க.

அதனை அறிவா

என்றகருத்து : அடி பரற்பகையுழவா ; வழி காடிடையிட்டாடு ; இவள் அதற்கேற்றதன்மையளல்லள், இனி ஊழ் என்செய்யுமோ, இதனை யாரறிய வல்லரெனப் பரிவுறல்தோன்றநின்றது.

ருரு. உரிய தன்றீங் கொழிகென வொழியீர்

இ - ள். இவையேயன்றியும் குடிப்பிறப்பிற்கும் இவளை ஒருங்குகொண்டு சேறல் ஏலாதாகலின் இனிச் செலவை ஒழிமினென்று யாமொழிப்பவும் ஒழிகின்றிலீராயினீரென்றுரென்க.

ஒழிகென வொழியீரென்பதற்கு இவர்க்கு எதிர்வதறிந்துகூறினரெனின், †" தவந்தரு சிறப்பிற் கவுந்தி ....உண்ணு கோன்போ யெர்பதிப் பெயர்ந்ததும்" என நீர்ப்படையுள் மாடலன் கூறுதலானும், அடைக்கலக்காதையில், ‡" தங் குல வாண, ரரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு, கருந்தடங் கண்ணி யொடு கடிமனைப் படுத் துவ, குடைப்பெருஞ் செல்வர் மனைப்புகு மளவு, மிடைக் குல மடந்தைக் கடைக் கலந் தந்தேன்" எனவும், §" தாயு நீயே யாகித் தாங்கு" எனவும், ||" மிகப்பே ரின்பந் தருவது கேளாய்" எனவும் ஒருபொழுதிற்கு இத் துணை ஓம்படையெல்லாம் கூறவேண்டாவாகலானும் இவர்க்குத் தவப்பயனாலே சபித்தலன்றிக் காலவுணர்ச்சியின்மையுணர்க.

ருசு - சுஎ. மறவுரை நீத்த மாசறு கேள்வியர்
அறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்

---

* கனாத்திறமுரைத்தகாதை, எசு - எரு. § அடைக்கலக்காதை, கசுசு.

† நீர்ப்படை, எக - அசு. || ,,

கடும.

‡ அடைக்கலக்காதை, கஉசு - கூ0.



கொன்றிய வுள்ள முடையே னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனென

இ - ள். மறவுரைகளை நீத்திருக்கும் குற்றமற்ற பொருட்பயனையுடையவர்தம் நூலையுங்கேட்டு அந்த ஆகமப்படியே அறிவனையேத்துதற்குத் தெற்கின்கணுள்ள தமிழ்நாட்டின்கண்ணதாகிய குற்றந்தீர்ந்த மதுரைக்குப்போதற்கு முன்னே ஒருப் பட்ட உள்ளமுடையேனுதலின், யான்போகுவேன் ; நீரும் போதுமினென்ற கவுந்தியடிகளைக் கையாற்றொழுது நாவானேத்தி, அடிகளே ! நீரே இங்ஙனம் அருள்செய்வீராயின், இவ் வளைபொருந்திய தோளிணையுடையாளுடைய துயரெல்லாம் இப்பொழுதே போக்கினேனன்றேவென்று சொல்லவென்க.

நீயிரே இதுசெய்வீராயினென்பது ஒர் வழக்கு. ஏகாரத்தை இசைநிறையாக் கலுமொன்று. தொடி - வளைவு ; *"தொடிக்கட் பூவை" என்றாராகலின். நீத் தென்றும் பாடம்.

சுசா - சுடு. கோவலன் காணாய் கொண்ட விந்நெறிக்
கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ

இ - ள். கோவலனே, நாம் போவதாகவுட்கொண்ட இந்நெறியிடத்து வருத் தத்தைத் தருவன எவ்விடத்தும் பலவுள ;

அவற்றை நீயறியாய் ; ஆதலால், யாம் சொல்லக் கேட்பாயாகவென்றாரென்க.

காணாய் - நீ முன்பு அறியாய். இந்நெறி - வடகரைவழி. மோ - முன்னிலையசை.

சுசு - எக. வெயினிறம் பொறாஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் படர்குவ மெனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த தாதுசேர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டும்

இ - ள். வெயிலினது நிறத்தைக் கண்ணாற்பார்க்கவும் பொறாத இம் மெல் லிய இயல்பினையுடையாளைக்கொண்டு நாம் பூப்பயிலும் தண்டலையூடு போகக் கடவேமென்போமாயின், அவ்விடத்து நிலம்பிளக்கும்படி இடங்கொண்டு கீழ்வீழ்ந்த வள்ளிக்கிழங்கை அகழ்ந்துகொண்டகுழிகளைச் சண்பகமரங்கணிறைத்த பூந் தாதுசேர்ந்த பொங்கர் பொய்க்குழிப்படுவித்து அவ்விடங்களை அறிந்து பாதுகாத்

---

*

லைவத்த

சீவகசிந்தாமணி, குணமாலையாரிலம்பகம், அஉ: "வடிக்கண் மகளிர் மரக தகன் மணிக, ளொடிக்கச் சுடர்விட் டெிழ வுழையம் பிணையொன் றணுகிக், கொடிப்புல் லென்று கறிப்பா ளைவிற் குலவி வணைப்பத், தொடிக்கட் பூவை நோக்கி நகுமா றெனிதோ காண்மின்."

**௪௦.—நாடுகாண் காதை.** உ௯௩

துச்செல்லாதமாக்கட்குச் செயலறியாகிய துன்பத்தைக் மென்றுரெனக.
காட்டுதலையுஞ்செய்யு

பொங்கர் - ஈண்டு வாடற்பூ. அதுபோர்த்தலாற் பொய்யறைப் படுத்தென்றார் *" பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" என்ப மேலும். கையறுதுன்பம் - மீளாத்துன்பமுமாம். காட்டல் - தருதல். பொங்கர் படுத்துக் காட்டுமென்க.

எ௨ - எ௩. உதிர்பூஞ் செம்மலி னொதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டும்

இ - ள். அங்ஙனமுதிர்ந்த செம்மற்பூ மறைத்த குழியுள்ளவழி காடுதற்கு நில னோக்கி ஒதுங்கிச்செல்வோரை முற்றிபபழுத்து விண்டு தேனொழுகும் பலாப் பழங்கள் தாழ்ந்தகோட்டின்கணிருந்து பகைபோல முட்டுதலையுஞ்செய்யுமென்று ரெனக.

இனித் தேமென்பதனை இனிமையாக்கித் தெங்கம்பழம் முட்டுமெனினுமமையும். பழம் பகையாயெனப் பண்பொட்டுவிரிக்க. முட்டினுமுட்டுவரென்பது பாடமாயின், கழிவோர் செய்யினுஞ்செய்வாரெனக. உம்மையை ஐயவும்மையாக்கிப் பொருளுரைக்க. படர்குவமெனினேயெனக் கழிவோர்கருத்தைக் கொண்டு கூறினர், உலகியலாகலான்.

எ௪ - எ௫. மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச
செஞசுளைய பலவின் பராறபகை யுறுக்கும்

இ - ள். அவ்வாறன்றி வெள்ளிடைப் போவோமெனின், ஆண்டு மஞ்சண்முத லிய தம்மில் தலைமயங்கிய

பிணக்கத்தையுடைய தோட்டங்களிற் பாத்திதோறும் பலவின் செஞ்சுளைகளினுள்ள வெண்காழாகிய பருக்கைகள் இவள் மெல்லடிக்குட் பகையாய் உறுத்தலைச் செய்யுமென்றுரெனக.

வலயம் - பாத்தி. வலயத்தோடு பாலும் பகையாயுறக்குமெனினுமமையும் உறுக்கும் - உறுத்தும். எனறகருத்து : மஞ்சள் முதலியன நிலவண்மையான் முதிப் பருவஞ்செய்தமுளை சருகின்மறைந்துகிடந்தவற்றோடு பாலும் உறுத்துமென்டதாம்.

எசூ - எஎ. கயனெடுங் கண்ணி காதற் கேள்வ
வயலுழைப் படர்குவ மெனினே

இ - ள். கயல்போலும் கண்ணினையுடையாள் காதலிக்கப்பட்ட கேள்வனே அங்ஙனம் சோலையும் தோட்டமுமாகிய கழிவழியன்றி வயல்வழியேபோகக்கடவேமென்பேமாயின்,

எஎ - அக. ஆங்குப்
பூநா றிலஞ்சிப் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு முண்டிக் காரிகை

---

* வேட்டுவவரி, "செம்பொன்."



இ - ள். தம்மிடத்துமலர்ந்த பூக்களின்மணங்கமழாநின்ற

குளங்களில் நீர் காய் பொருகின்றகயல்கள் வெருவியோடவோட்டிக் கௌவப்பட்ட நீண்ட முது கையுடையவாளை மலங்குகள் ளெளியுஞ்செறுவிற் குறக்கிடப்பாயுமாயின், இக் காரிகை க துலங்குநீர்மையுடையாளெனவுங்கூடுமென்றாரென்க.

நீர்காய் கௌவியவாளை பொருகயலோட்டிப் பாயினெனினுமமையும். இத னாற்சொல்லியது மீனிரைதேரும் நீர்நாய்காணினும், இடையே பொருகயல்கள் உகளக்காணினும், வாளை பாயக்காணினும், மலங்கு மிளிரக்காணினும் மனத்திற் கலங்கலுமுண்டு இக்காரிகையென்பதாம்.

அக - அரு. ஆங்கட்

கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னுண்டு கொள்ளவுங் கூடும்

இ - ள். அஃதன்றியும், *கரும்பல்லது காடின்மையான் அவ்விடத்து உளதாய கரும்பின்வைத்த பெருந்தேன் அறைவ கண்முற்றி நெருங்குதலானே அழிந்தொழு கிச் சுரும்புசூழப்பட்ட பொய்கையின நல்லநீரோடு சென்று கலந்துவிடும் ; ஆத லான் அதனை அறியாமல் தணியாத நீர்வேட்கையான் இவன் தன்குடங்கையான் முகந்துகொண்டு பருகவுந்தகுமென்றாரென்க.

குடங்கையாவது ஐந்துவிரலுங்கூட்டி உட்குழிப்பது ; என்னை? "குடங்கை யென்பது கூறுங் காலை, யடங்குவிரற் கூட்டி யுட்குழிப் பதுவே" என்றாராகலின். இதனாற்சொல்லியது நமது †தரிசனத்துக் கடியப்பட்டவாற்றால், தேனுண்டலைப் புரிகரிக்கவென்பதாம். எனவே ஊனையும் உடன்கூறிற்றாம். மேலும் இவ்வாறு

அசு - அகூ. குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடும்
இ - ள். களைபறிப்பார் பறித்து வரம்பிலிட்ட குவளைப்பூவுடனே தம்மெய்யிற் பொறியையும் வரியையுமுடைய வண்டினம் மதுமயக்கத்தாற் போகவறியாது உள்ளொடுங்கிக்கிடப்பனவற்றை வழிவரல்வருத்தத்தாலே நீர் உணர்வுமயங்கி வறும்பூவெனக்கருதி அவற்றின்மேல் அடியிடவுங்கூடுமென்றாரென்க.

இதனாற்சொல்லியது உயிர்க்கொலைபுகாமற் பரிகரிக்கவென்பதாம்.

கூ0 - கூரு. எறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்று

---

* "கரும்பலாற் காடொன் றில்லாக் கழனிசூழ் பழன நாடும்" என்றார் சிந்தாமணியிலும்; முத்தியிலம்பகம், கூ0சு.

† தரிசனம் - சாஸ்திரம்.

## க0.—நாடுகாண்காதை.

உ.ரு.சு

தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா
இ - ள். எறியுநீரையுடைய பெருவாய்க்காலினது

அடைகரைவழியே போ கக்கடவேமென்பேமாயின், அவ்வடைகரை நீரிலுள்ளனவாகிய பொறிவரிகளி னழகையுடைய அலவனும் நந்தும் உள்ளவழியறிந்து பாதுகாவாது முன்புநடக்கு முறைமையான் அடியிட்டுநடக்குநடையின் அவைதாம் உறக்கடவபோரை நம்மா லுறுமாயின் அதனால் நமக்குவரும் கொலைப்பாவம் நம்மால் தாங்கவுமொண்ணாது;

எறிநீர் - வாய்த்தலையினின்றும் குதித்துவரும் வாய்க்காநீர். இயக்கம் - வழி. நந்து - நண்டு நத்தை. ஊழ் - முறைமை. ஒதுக்கம் - நடை. போரென்றார்; கொலையென்று வ ரக்காற்கூறவுமாகாமையின். இக்கொலைப்பாவம் ஒன்றானும் கழுவப்படாது ; அதுவேயுமன்றி மறுமைக்கண் நரகத்திலுறுந்துன்பமும் நம்மாற் றாங்கலாமளவிற்றன்றென்பதனுன், உம்மை எச்சவும்மையாயிற்று. அடைகரை - கடற்கரையென்பாருமுளர்.

கூச ௬ கூஎ. வயலுஞ் சோலையு மல்லது யாங்கணு
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோளொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பென

சோலையுமெனவே ஒருசார்வுபற்றித் தோட்டமுமடங்கிற்று. வயலும் சோலையு மென்பனவற்றைக் கூறியமுறையானே எதிர்நிரனிறையாகக்கொள்ளுவாருமுளர்.

இ - ள். ஈண்டுக்கூறியவயலும் ஆண்டுக்கூறியசோலையுமல்லது வேறுபடக்கிட க்குநெறி மேல் நாஞ்செல்லுகின்றவிடத்திற்கில்லையாதலான், நெறித்த குஞ்சியை யுடையாய், நீ நின்னைவிரும்பிய மனைவியோடே அவ்வவ்விடங்களைக் குறிப்பா னறிந்து அவை அபசாரங்களுறுமற் பாதுகாப்பாயாகவென்றாரென்க.

வெய்யோனுக்குக் குறுகாமலெனினுமமையும்.

காட்டினுங்காட்டும் ; முட்டினுமுட்டும் ; பாற்பகையுறுக்கும் ; கலங்கலு முண்டு , கொள்ளவுங்கூடும் ; இடுதலு ங்கூடும் ; தாக்கவுமொண்ணா. ஆகலாற் குறி யறிந்து அவையவை குறுகாதோம்பென்றானென்க.

இங்ஙனம் மென்மைத்தன்மைகூறுவார், வருணனைகளையும் உடன்கூறினாரென்க. இத்துணையும் கவுந்தியடிகள் தமது பள்ளிக்கணிருந்துகூறினாரென வுணர்க. வயலுமெனவே வாய்க்காலுமடங்கிற்று.

கூஅ - சுoசு. தோமறு கடிஞையுஞ் சுவல்மே லறுவையுங்
காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெ ய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்

இ - ள். கவுந்தியடிகள் கடிஞைமுதலியவற்றைக்கொண்டு பஞ்சமந்திரமே நமக்கு வழித்துணையாகவெனச்சொல்லிச்செல்ல, அவரோடு பழித்தலரியவொழுக்கத் தோடு வழிச்செலவைப்புரிந்தவரென்க.



தோம் - குற்றம். கடிஞை - ஐயக்கடிஞை. அறுவை - தோளிலிடுமுறி. மொழிப்பொருட்டெய்வம் - பொருண்மொழியாகியதெய்வம். ஆவது *பஞ்சமந்திரம் ; ஐ வஸி ஆ உ ஸா=அ ஸி ஆ உ ஸா. இனிக் கொண்டென்பதனைக் கொள்ளவெனத்திரித்து அடிகளிதுசெய்ய இவர்கள் துணையாகவென்றானெனினுமமையும்.

சுoஉ - ககக. கரியவன் புகையினும் புகைக்கொடி

தோன்றினும்

விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடு
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ்
சுரப்பக்

குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே யல்ல
தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லா

இ - ள். கோள்களிற் சனிக்கோள் இடபம் சிங்கம் மீனமென்னுமிவற்றிேனாடு மாறுபடினும் ஆகாயத்தே தூமக்கோளெழினும், விரிந்த கதிரையுடைய வெள்ளிக் கோள் தென்றிசைக்கண் ணே பெயரினும் காற்றுப்பொரும் குடகவரையினது உச்சிக்கண்ணே கடிய குரலையுடைய உருமேற்றோடு சூன்முதிர் ந்த பருவப்புயல் தன்பெயலாகிய வளத்தைச் சுரத்தலானே அவ்வரையிற்பிறந்த பலபண்டத்தோடு கடுகிவருதலையுடைய காவிரியினீர், முகத்தைக்குத்தியிடிக்குங்கடல் தன் வளத்தைக் கொண்டு எதிர்தலானேதேங்கி, வாய்த்தலைக்கிட்ட கதவின்மீதெழுந்து குதிக்கின்ற அப்புதுப்புனலொலியல்லது ஆம்பிமுதலாயின ஒலித்தல்செல்லாவென்க.

கரியவன் - சனி. புகைக்கொடி - வட்டம், சிலை, நுட்பம், தூமமென்னும் †கோட்களுங்கினும் தூமக்கோள். ‡"மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினுந், தென்றிசை மருங்கின் வெள்ளி யோடினும்" என்றார் பிறரும். கால்பொருநிவப்பு- குடகினுச்சி. ஏறு - இடியேறு. பஃறாரம் - பலதாரம்; தாரம் - பலபண்டம்.

எனவே மலைவளனுயிற்று. ஆவன : " தக்கோலந் திம்பூத் தகைசா லிலவங்கம், கர்ப்பூரஞ் சாதியோ டைந்து." கடல்வளனுவன : " ஓர்க்கோலை சங்க மொளிர் பவளம் வெண்முத்த, நீர்ப்படு முப்பினே டைந்து." கடுவரல் - மூடுகிவரும்வரவு. ஒ - தூம்பிற்கதவு. இனி ஒவுதல் - விகாரத்தால் ஒவெனநின்றதெனவுமாம். இத

---

* இந்தப் பஞ்சமந்திரத்தைப் பஞ்சநமஸ்காரமென்பர் ஜைனர்.

† இவற்றைக் காந்துறைகோட்களென்பர்.

‡ புறநானூறு, ககஎ : " மைம்மீன் புகையினுந் தூமந் தோன்றினுந், தென் றிசை மருங்கின் வெள்ளி யோடினும், வயலக நிறையப் புதற்பூ மலர, மனைத்தலை மகவை யீன்ற வமர்க்க, ணுமா நெடுநிரை கன்புல் லாரக், கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப், பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே, பிள்ளை வெருகின் முள்ளெயிறு புரையப், பாசிலை முல்லை முகைக்கு, மாய்தொடி யரிவையர் தந்தை நாடே."

## க०.—நாடுகாண்காதை.

உசக

ற்கு இறத்தல் ஈண்டுத் தவிர்தன்மேற்று. ஆம்பி - பன்றிப்பத்தர். கிழார் - பூட்டைப் பொறி. பிழா - *இடா. †" நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர், பாடுகிலம்பு மிசையேற் றத், தோடுவழங்கு மகலாம்பியிற், கயமகைய வயனிறைக்கு, மென்றொடை வன் கிழார்" என்றார் பிறரும். இனிக் கரியவன்புகையினுமென்பதற்குச் சனிவாசம் புகையினுமெனவுமாம். இனிப் புகையினும் தோன்றினும் படரினும் சாப்ப எதிர நீர் வாயத்தலை ஒலிறந்தொலிகுமொலியல்லது ஆம்பிமுதலிய ஒலித்தல்செல்லா மைக்குக் காரணமாகிய காவிரியென

முடிப்பினுமமையும். புகையினும் தோன்றி னும்
படரினுமென்றவும்மைகள், மழைபெய்தொழில் மாற்ற இவற்றின்
ஒன்றே அமையுமாகவும் .இவையெல்லாம் செய்யினும்
கடல்வளனெதிர நெரிக்குமெனக் காவிரியின்சிறப்பை
விளக்கிநிற்றலிற் சிறப்பும்மை.

கக௨-கக௩. கழனிச் செந்நெற் கரும்பூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்து

இ - ள். அங்ஙனமொலித்தல்செல்லாக் கழனியிற்
செந்நெலும் கரும்புஞ் சூழ்ந்த இடத்தையுடைய
நீர்நிலைச்செறுவிலுண்டாகிய தாமரைக்காட்டினென்க. கக௪-கக௯.

கம்புட் கோழியுங் கனைகுர லுளையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம போலப்
பலவேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்

இ - ள். கம்புட்கோழிமுதலியன வெல்லும்போரைவல்ல
அரசரிருவர் பொரு மிடம்போலப் பலவேறுவகைப்பட்ட
திரத்தையும் ஒலியையுமுடையனவாயொலிக் கும் மிக்க
ஓசையுமென்க.

கூக்குரலும் பாடம். கம்புள் - சம்பங்கோழி. கானக்கோழி -
கானங்கோழி ; நிலவணமையாக்கிக் காட்டுக்கோழியென்பாருமுளர்.
நீர்நிறக்காக்கை - நீர்க்காக் கை. உள்ளு - உள்ளான், ஊரல் -
குளுவை ; நீர்மேலூாதலினல் ஆகுபெயர். புள்ளு - கணந்துட்புள்.
போதா - பெருநாரை, மரக்காரை ; புதா - விகாரம்.

வெலபோரும், முனையிடமும் - வினைத்தொகை. குழூஉக்குரல் - பலவாயொன்முன ஓசை.

கஉ0-கஉ௪. உழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய
கழாமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொரிபுற முரிஞசப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற கொழும்பல் லுணவு
கவரிச் செந்நெற் காய்த்தலைச சொரிய

இ - ள். உழவராலுழப்படாத செட்டுக்குழியிற் சேற்றினுட்புக்கழுந்திய கழு வாதமயிரையுடைய யாக்கையையும் சிவந்தகண்ணையுமுடைய எருமை தன் தினவை

---

* இடா - இறைகூடை. † பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, ௮௬ - ௬௬.



யுடையமுதுகை உரிஞ்சுதலாலே புரிதேய்ந்து அற்றுச் சரிதலுற்ற அழிவற்ற புரிக்
கூட்டினின்ற வளவிய பலவருக்கத்துநெல்லுக் கவரித்தொங்கல்போல விளைந்து
கிடக்கின்ற செக்நெற் கதிர்த்தலையிடத்தே சொரியவென்க.

தொளி - சேறு.

கஉரு-கஉ௬. கருங்கை வினைஞருங் களமருங் கூடி
யொருங்குகுநின் றார்க்கு மொலியே
யன்றியும்

இ - ள். அங்ஙனம் நெற்சொரிதலானே வினைஞரும் களமருங்கூடி ஒன்றுபட
நின்றொலிக்கும் ஒலியும், அதுவேயன்றியுமென்க.

கருங்கைக் - வலியகை. வினைஞர் - பறையர், பள்ளர் முதலாயினர். களமர் - உழவர் கீழ்க்குடிமக்கள். கருங்கை இருவர்க்கும்பொது.

கஉள-கந.க. கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந தோய்ந்து
சேறுடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச
செஙகய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியும

இ - ள். காலையின்முடித்த பூக்களைந்து முடித்தமுடியிலே முடியிறைற்றை நறுக்கிச் சூடிக்கொண்டு வளைந்தவளையையுடைய தோளும் முலையாகமுந்தோய்ந்து சேறுடுகோலத்தோடு அழகுபெறத்தோன்றிச் சிவந்த கயல்போலும் பெரியகண்ணையும் சிறியமொழியையுமுடைய கடைசியர் கடுகமயக்கும் கள்ளை உண்டுதொலைத்தத ஞுண்டான பண் நிறத்திற்சோர்ந்து பழகிப்போதாத பாட்டுமென்க.

என்றது மதுமயக்கத்தாற் பஞ்சலித்து மயக்கப் பாடினரென்றபடி. இனிக் கடிமலர்களைந்து முடிநாறழுத்தியென்பதற்குப் போகாப்புல்லாகிய கழுநீர்முதலைப் பறித்து மறித்து அதன்மீதே முடியிறைப் பகுத்துநட்டெனினுமமையும். தோளும் ஆகமும் தோய்ந்துசேறுடுதல் - களித்து ஒருவர்மேல் ஒருவர்

சேற்றை இறைத்
துக்கோடல். வீறுபெறத்தோன்றலாவது
முலைமேறறெறித்தசேறு கோட்டுமண்
கொண்டாற்போன்றிருத்தல் ; "வாரிய கொள்ளாமுலை"
என்றாற்போல. சின்
மொழி - இழிந்தமொழி ; சிலவானமொழியுமாம்.
விருந்திறபாணி - தம்மிசையிற்
புதுமையுண்டாகப்பாடும் பாட்டெனினுமமையும். இதனைப்
பெருமுளையென்பாரு
முளர்.

கஙஉ-கஙரு. கொழுங்கோடி யறுகையுங் குவளையுங்
கலந்து
விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
ட ா ருடைப் பனர்போற பழிச்சினா
கைதொழ
வேரொடு நின்றோ ரேர்மங் கலமும

இ - ள். செந்நெற்கதிரோடே அறுகையும் குவளையையும்
கலந்துதொடுத்த
மாலையை மேழியிலேசூட்டிப் பாரை இரண்டாகப்
பிளப்பாரைப்போலப் போற்று
வார் தொழப் பொன்னேர்பூட்டிநின்றோர் ஏரைப்பாடும்
ஏர்மங்கலப்பாட்டுமென்க.
சூட்டித் தொழ நின்றோர் ஏர்மங்கலமுமென்க.

## கo.— நாடுகாண்காதை.

உசஅ

௩௲௬-௩௲௭. அரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
பெருஞ்செந் நெல்லின் முகவைப் பாட்டும்

இ - ள். நெல்லையரிந்து போரிட்டார் சூட்டைக் கடாவிடுதலானுண்டான முகவைப்பாட்டும், ஆவது பொலிபாடுதல். முகக்கக் கொடுத்தலின், முகவையாயிற்று. ௩௲௮-௩௲௯. தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கனை முழவின் மகிழிசை யோதையும்

இது களவழிவாழ்த்து; என்னை? *"தண்பணை வயலுழவனைத், தெண்கிணை வன் றிருந்துபுகழ் கிளந்தன்று." வரலாறு: "பகடுவாழ் கென்று பனிவயலு ளாமை, யகடுபோ லங்கட் டடாரித் - துகடுடையாக், குன்றுபோற் போர்விற் குரிசில் வளம்பாட, வின்றுபோ மெங்கட் கிடர்" எனவரும். கிணை - தடாரி; புட்பறையென்பதுங்கொள்க.

இ - ள். தெளிந்த ஓசையையுடைய கிணைப்பொருநர் செருக்குதலோடெடுத்த மார்ச்சனையையுடைய திரண்டமுழவினது கேட்டோர்மகிழும் இசையினதொலியும், ௩௨௦-௩௨௧. பேரியாற் றடைகரை நீஇற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளார்

இ - ள். பெரிய யாற்றடைகரையிலே இவ்வோசைகளை முறையிற்கேட்டு நெஞ்சம்விரும்புதலாலே வழிநடத்தலினுண்டான வருத்தத்தை நெஞ்சிற் கொள்ளா ராயென்க.

பரந்தவோதையும் ஆர்க்குமொலியும் விருந்திற்பாணியும் ஏர்மங்கலமும் முகவைப்பாட்டும் மகிழிசையோதையுமென்னுமிவற்றைப் பேர்யாற்றடைகரைக்கண் ணே நீர்மைபெறக்கேட்டலாலுண்டான விருப்பத்தானே நெஞ்சில்

அவலங்கொண் ளாராயென்க.

கசஉ—கசஎ. உறைப்புலிக் கொடித்தே ரூரவோன் கொற்றமொடு

மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்
மறையோ ராக்கிய வாவுதி நறும்புகை
யிறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்

இ - ள். புலியைத் தன்னிடத்தேயுடைய் கொடியையுயர்த்த தேரையுடைய உரவோனாகிய கரிகாலனது கொற்றத்துடனே மழைக்கும் கருப்பத்தைத் தோற்றுவிக்கும் அழலை விளக்குகின்ற சாலையினுண்டான மறையோராலாக்கப்பட்ட தேவருணவிலாவி இறையுயர்ந்த மாடமாகிய அகங்களெங்கும் போர்த்தலானே மஞ்சு சூழ்ந்த மலைபோல மாட்சிமைப்படத்தோன்றும் மங்கலமறையோரிருப்பிடங்களும், அவையன்றியும்,

---

* புறப்பொருள்வெண்பாமாலை, வாகைப்படலம், கஉ.



கசஅ-கருரு. பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
ரிரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடு பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்னா ளொருநாள்

இ - ள். இரப்பவர்சுற்றத்தையும் புரப்பவர்கொற்றத்தையும் தம்

உழவினிடத்
தே விளைப்போருடைய பழைய வலிபொருந்திய ஊர்களுமாகிய இவ்விருவகையூர் களையும் இடையிட்ட நாடெல்லாங்கண்டு நடக்குநாட் காதமென்னுமெல்லையல்லது நடந்துதொலைக்கமாட்டாராய்ப் பலநாட்டங்கி நடக்கின்றநாளிலே ஒருநாளென்க.

தூற்றுப்பொலி ஆலையிற் பாகுகாய்கின்ற புகையாற் பரக்கப்பட்டு இருட்சியை யுடைய முகிறவழ்ந்த மலைபோலத்தோன்றும் பழவிறலூர்களுமென்க.

கொற்றத்தையும் கருவையும் சுற்றத்தையும் கொற்றத்தையும் அழலினும் உழவினும் விளைப்போரதிருக்கையும் ஊர்களுமென்க. *காவிரிநீர் கங்கைநீராதலிற் கங்கைப்புதல்வனைக் காவிரிப்புதல்வரென்றார்; அன்றியும் †"மகவாய் வளர்க்குந் தாயாகி" என்பதனானுங்கொள்க. தோன்றுமிருக்கையும் தோன்றுமூர்களுமென வினையையும். அவ்வூர்களையிடையிட்டநாடென்க. உடன்கழிந்தென்றார், இந்நாட்டுச் சிறப்பெல்லாம் கண்டுதொலைத்துக் கழிதலருமையின். புதல்வராகி உழவிடை விளைப்போரென்க.

கடுசு-கசுக. ஆற்றுவீ யரங்கத்து வீற்றுவே றுகிக்
குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும பூநா றொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனா நீங்காப்
பெருமபெய ரைய சொருங்குட னீட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்ற

இ - ள். ஆற்றைமறைக்கும் அரங்கத்தில் வேறிடத்தில்லாததன்மைத்தாய் வளர்ந்த மூங்கின்முள்ளால் வளைக்கப்பட்ட வேலியையுடைய மரம்பயின்ற செறிந்த சோலையில் தேவருறைதற்கொத்த பூப்பொருந்தியதொருபக்கத்தே பட்டினப்பாக்

கத்து ‡வான்பெருமன்றத்துப் பிண்டிநீழற்கண்வே
உலகநோன்பிகளிடப்பட்ட

---

—

* 'கங்கையாருழைச்சென்று காவிரியாளை வாங்கி' என்று கூறினர் நச்சினார்க் கினியரும்; இதனைத் தொல்காப்பியப் பாயிரவுரையிற்காண்க.

† கானல்வரி, உஎ.

‡ வான்பெருமன்றமென்பதுமுதலாக இங்கே தந்துரைத்தவற்றை, இக்காதை உ௦ - ம் அடிமுதலியவற்றிற்காண்க.

## க௦.—நாடுகாண்காதை.

உசரு

சிலாதலத்தின்மேலிருந்தருளிப் பெருமகனாற்செய்யப்பட்ட அதிசயங்கண்மூன்றுந் தப்பாத
ஆகமநூலினுண்மைத்தன்மையையுடைய தருமவொழுக்கத்தை யாவருங் கேட்கும்படி அருளிச்செய்யும் *சாரணர் அப் பட்டினப்பாக்கத்தைவிட்டு நீங்கி வந்துதோன்றவென்க.

அதிசயமூன்றாவன: சகசாதிசயம், கர்மக்ஷயாதிசயம், தெய்வீகாதிசயமென்பன.

வேறாகி உடுத்த ஒருசிறைச் சாரணர்தோன்றவென்க.

ககூ௪-ககூக. பண்டைத் தொல்வினை பாறுக வென்றே
கண்டறி கவுந்தியொடு காலுற விழுந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்
சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினு
மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்

இ - ள். முன்செய்த பழவினையெல்லாம் கெட்டோடுவதாகவென்றுட்கொண்டு அவர்வந்தமையைக் கண்டறிந்த கவுந்தியடிகளுடனேசென்று அவரடியிலே தலையுறவீழ்ந்தார்; அங்ஙனம்வீழ்ந்தவர் ஈண்டுவந்தது தனது விளங்கியகோட்பாட்டையுடைய †அவதிஞானத்தால் தெரிந்தவனாயினும் ஆர்வமும் செற்றமும் தன்னை விட்டுப்போம்படி நீக்கிய ‡வீரனாகலாலே இவர்க்குவருந்துன்பத்திற்குத் தான் வருந்தானாகியென்க.

கண்டறிகவுந்தியென்பதனானும் §காலவுணர்ச்சியின்மையுணர்க. ஒடு - ஒரு வினையொடு.

கஎ0 - கஎக. கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி காணா யொழிகென வொழியா தூட்டும் வல்வினை

இ - ள். மிக்க பெரிய தவச்சிறப்பையுடைய கவுந்தி, யாவரானும் ஒழிக்க வொழியாததாய் நுகர்விக்க வந்துநிற்கின்ற தீவினையைக் காணாயென்றாரென்க.

காணாய் - பாராய். ஒழிகெனவொழியாதென்பதற்கு, நீ ||'உரிய தன்றீங் கொழிக' எனவும் ஒழியாது ஊட்டுந்தீவினையையெனினுமமையும்.

---

* சாரணர் - சமணமுனிவர். அவர், தலசாரணர் சலசாரணர் பலசாரணர் புட்பசாரணர் தந்துசாரணர் சதுரங்குலசாரணர் சங்கசாரணர் ஆகாசசாரணரென எண்வகையர். இவ்விருவராகச்சென்று தருமோபதேசஞ்செய்தல் அவர்கட்கு இயல்பென்பர்.

† அவதிஞானம் - தன்னுடைய அதீதகதமானபரிஞ்ஞானம்; அஃதாவது முற்பிறப்பையறியுமறிவு.

‡ வந்தசாரணரிருவருள், உபதேசிப்போர் மூத்தோரேயாதலின், வீரனென ஒருமையாற்கூறினார்.

§ 'காலவுணர்ச்சியின்மையுணர்க' என்றது, [௫௫ - ம் அடி] 'உரிய தன்றீங் கொழிகென வொழியீர்' என்பதன் உரையிற்கூறியதை வற்புறுத்தற்கு.

|| காடுகாண்காதை, ௫௫.



௧௭௨-௧௭௩. இட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி
யொட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா

இ - ள். விளைநிலத்திட்ட வித்துப்போலப் பயனெதிர்ந்து கண்கூடாக நல்வினைவந்து நுகர்விக்குங்காலத்தும் ஒழிக்கவொண்ணா ; அதுபோல இதுவும் ஒழிக்க வொழியா தென்றாரென்க.

*"உறற்பால.........பாரு மில்" என்றாகலின். தீவினைதன்னையே கூறினு மமையும். உம்மை - எச்சவும்மை.

௧௭௪-௧௭௫. கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்கள்

இ - ள். கடியகாற்றையுடைய நெடியவெளியிலிடப்பட்ட விளக்கென்னும் படி மாயினல்லது கூடி உடனில்லா ; உடம்பினின்ற உயிர்களுமென்றாரென்க.

நல்வினை தீவினைப்பயனாகிய இன்பமுந்துன்பமும் வருங்கால் யாவரானும் ஒழிக்கவொண்ணாவென்பதூஉம், யாக்கைநிலையாமையும் இவர்தம்பால உறவது கண்டு கவுந்தியடிகட்குச் சாரணர்கூறினாரெனவுணர்க. விளக்கு உவமித்தார் ; நினைவற அழிவதற்கும், புக்குழிப் புலப்படாமைக்கும்.

௧௭௬ - ௧௯௧. அறிவ னறவோன்.........பொதியறை யோரென

கஎசு. அறிவன்—இ-ள். எல்லாப்பொருளையுமறியும் அறிவையுடையோன்,

கஎசு. அறவோன்—இ - ள். அறஞ்செய்தலையே தொழிலாகவுடையோன்,

கஎசு. அறிவுவரம் பிகந்தோன்—இ - ள். யாவருமறியப்படும் அறிவெல்லையைக் கடந்தோன்,

கஎஎ. செறிவன்—இ - ள். எல்லாவுயிர்கட்கும் இதனுள்ளவன்; சலியாதவனென்றுமாம்.

கஎஎ. ஜினேந்திரன்—இ - ள். எண்வகைக் கன்மங்களையும் சயித்தவன்,

அவையாவன : †ஞாநுவரணீயம், தரிசநுவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயமெனவிவை.

கஎஎ. சித்தன்—இ - ள். கிருதகிருத்தியன் = செய்யப்படுவனவற்றைச் செய்துமுடித்தவன்,

கன்மங்களைக் கழுவினவனுமென்ப.

கஎஎ. பகவன்—இ - ள். ‡கேவலஞானி,

---

* நாலடியார், பழவினை, ச : "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா, பெறற்பா லனையவு மன்னவா மாரி, வறப்பிற் றருவாரு மில்லை யதனைச், சிறப்பிற் றணிப்பாரு மில்."

† ஞாநுவரணீயமுதலியவெட்டும் காதி அகாதியென இருவகைப்பட்டு,கசஅ- ஆகவிரியுமென்பர்.

‡ கேவலஞானம் - ஐந்துஞானத்துள்ளுஞ்சிறந்தது. ஐந்து ஞானங்களாவன : க. மதிஞானம்=சுவபாவபுத்தி ; உ. சுருதஞானம்=நூலுணர்ச்சி , ௩. அவதிஞானம்= தன்னுடைய

முற்பிறப்பையறியுமறிவு ; ச. மனப்பரியயஞானம்—தன்னுடைய முற்பிறப்பையும் பிறருடைய முற்பிறப்பையும் அறியுமறிவு ; ரு. கேவலஞானம்— திரிகாலவுணர்ச்சி.

## கo.—நாடுகாணகாதை

உரை

களஅ.

களஅ.

தரும முதல்வன்—இ - ள். தருமங்களுக்கு அடியாயுள்ளவன், தலைவன்—இ - ள். எல்லாத்தேவர்க்கும் தலைவனாக எண்ணப்பட்டவன்,

களஅ. தருமன்—இ - ள். தருமத்தானாயுள்ளவன்,

களகூ. பொருளன்—இ - ள். ஆகமத்தின் பொருளாயுள்ளவன் ; உண்மைப்பொருளாயுள்ளவனெனவுமாம்.

களகூ. புனிதன்—இ - ள். சுத்தன் ; புதியவனுமென்ப. களகூ. புராணன்—இ - ள். பழையவன்,

களகூ. புலவன்—இ - ள். எல்லார்க்கும் அறிவாயுள்ளவன், கஅo. சினவரன்—இ - ள். சினத்தைக் கீழ்ப்படுத்தியவன், கஅo. தேவன்—இ - ள். தேவர்களுக்கு ஆதியாகிய தேவன், கஅo. சிவகதி நாயகன்—இ - ள். வீட்டுலகிற்கு நாயகனாயுள்ளவன்,

கஅக.

கஅக.

கஅக.

பரமன்—இ-ள். மேலானவன்,
குணவதன்—இ-ள். குணத்தையுடையவன்; வதம் - *விரதமுமாம்.
பரத்தி லொளியோன்—இ-ள். மேலாய உலகிற்கு விளக்காயுள்ளவன்,
கஅஉ. தத்துவன்—இ-ள். தத்துவங்களையுடையோன், கஅஉ. சாதுவன்—இ-ள். ஒடுங்கினவன்,
கஅஉ. சாரணன்—இ-ள். ஆகாசவாசி,
கஅஉ. காரணன்—இ-ள். எல்லாவற்றிற்கும் காரணமாயுள்ளவன்=காரணபூதன்,
கஅங. சித்தன்—இ-ள். எண்வகைச் சித்திகளையுமுண்டாக்கினவன், கஅங. பெரியவன்—இ-ள். எல்லாவற்றினும் பெரியவன், கஅங. செம்மல்—இ-ள். நாயகமூர்த்தி,
கஅங. திகழொளி—இ-ள். விளங்கும் ஒளியாயுள்ளவன், கஅச. இறைவன்—இ-ள். எப்பொருளினும் †தங்குகின்றவன்,
கஅச. குரவன்—குருமூர்த்தியாயுள்ளவன்,
கஅச. இயல்குணன்—இ-ள். இயல்பையே குணமாகவுடையவன்,
கஅச. எங்கோன்—இ-ள். எம்முடையசுவாமி,
கஅரு. குறைவில் புகழோன்—இ-ள். நிறைந்த புகழையுடையோன்,
கஅரு. குணப்பெருங் கோமான்—இ-ள். குணங்களைச் சம்பத்தாகவுடையவன்,

---

* விரதம் - அணுவிரதம், குணவிரதம், சிக்ஷாவிரதமென மூன்றுவகைப்படும்; அவற்றுள், குணவிரதம் - திக்குவிரதம், தேசவிரதம், அசர்த்ததண்டவிரதமென மூன்றுவகைப்படும்.

† இறுத்தல் - தங்குதல்.

கஅசு. சங்கரன்—இ-ள். சுகத்தைப்பண்ணுகின்றவன்,

கஅசு. ஈசன்—இ-ள். ஐசுவரியவான்,

கஅசு. சயம்பு—இ-ள். தானேதோன்றினவன்,

கஅசு. சதுமுகன்—இ-ள். நான்குமுகன் = அதிசயத்தோடொன்முகன்,

கஅஎ. அங்கம் பயந்தோன்—இ-ள். *அங்காகமத்தை யுண்டாக்கினவன்,

கஅஎ. அருகன்—இ-ள். பூச்சியன்,

கஅஎ. அருண்முனி—இ-ள். சிவபர மூர்த்தி,

கஅஅ. பண்ணவன்—இ-ள். கடவுள்,

கஅஅ. எண்குணன்—இ-ள். எட்டுக்குணங்களையுடையோன்,

எண்குணமாவன: அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்ததரிசனம், அநந்த சுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷ்யமெனவிவை.

கஅஅ. பாத்தில் பழம்பொருள்—இ-ள். பகுத்தற்கரிய புராணப்பொருளாயுள்ளவன்; ஒட்டமற்ற பொன்னையொப்பானென்றுமாம்.

கஅகூ. விண்ணவன்—இ-ள். சுவர்க்கவாசி,

கஅகூ. வேத முதல்வன்—இ-ள். †ஆகமமூன்றிற்கும்முதலாயுள்ளவன்,

கஅகூ. விளங்கொளி—இ-ள். அஞ்ஞானவிருணீங்க விளங்குமொளி,

ககூ0-ககூக. ஓதிய வேதத் தொளியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரென

இ - ள். இந்நாமங்களையுடையோனாலோதப்பட்ட ஆகமமாகிய விளக்கொளியைப் பெற்றாற் போக்தேறினல்லது யாவரும் பிறவியாகிய சிறையினின்றும் போக மாட்டாரென்றாரென்க.

பொதியறை - துவாரமில்லாதகீழறை.

ககூஉ-ககூ௩. சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமூதாற்
காவுந்தி யுந்தன் கைதலை மேற்கொண்டு

இ - ள். அங்ஙனம் சாரணருளிச்செய்த பெருமையமைந்த உண்மைமொழியைக்கேட்டுத் தவத்திற்கு முதல்வியாகிய கவுந்தியடிகளும் தமது கைகளைத் தலை மேல்வைத்துக்கொண்டு நின்றுகூறுவார் :—

ககூச-ககூரு. ஒருமூன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா

---

* அங்காகமம், கஉ பகுப்புடைத்து. அவைவருமாறு :— க. ஆசாராங்கம், உ. சூத்திரகிருதாங்கம், ௩. ஸ்தாணாங்கம், ச. ஸமவாயாங்கம், ரு. வியாக்கியாப் பிரஞ்ஞப்த்யங்கம், சு. ஞாத்ருகதாங்கம், எ. உபாஸகாத்தியயநாங்கம், அ. அந்தக் கிருத்தசாங்கம், கூ. அநுத்தரோபபாதிகதசாங்கம், க0. பிரச்சிநவியாகரணாங்கம், கக. விபாகசூத்திராங்கம், கஉ. திருஷ்டிவாதாங்கம்.

† ஆகமமூன்றாவன : அங்காகமம், பூர்வாகமம், பகுசுருதியாகமமென்பன.

## க0.—நாடுகாண்காதை.

இ - ள். எனதுசெவிகள் காமவெகுளிமயக்கங்களைக் கெடுத்தவனுலோதப்பட்ட ஞானபாதமாகியதிருமொழியைக்கேட்டற்குத் திறப்பினல்லது பிறிதொன்றற்குத் திறப்பனவல்லவென்றாரென்க.

அவித்தல் - அடக்குதலுமாம்.

கசுகா-கீசுஎ. காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா

இ - ள். என்னாவும் காமன்செயலை வென்றவனுடைய ஆயிரத்தெட்டுவகைப் பட்ட நாமம் நவிலினல்லது பிறிதொன்றனையே நவிலாதென்றாரென்க. கசுஅ-கசுகூ. ஐவரை வென்றோ னடியிணை யல்லது
கைவரைக் காணினுங் காணா வென்கண்

இ - ள். எனதுகண்களும் ஐவகைப்பட்ட இந்திரியங்களையும் வென்றவனு டைய அடியிணைகளைக் காணினல்லது பிறிதொரு தேவரடியிணைகளைக் கையகத்தே காணினும் காணாவென்றாரென்க.

ஐவர் - செறலின்கண் திணைமயக்கம். இனிக் கைவரைகாணினும் பாடமாயின், கைவரைகாணல் - கண்விழித்தலாக்கி விழித்திருப்பினும் காணாவென்க. ௨௦௦ - ௨௦௧. அருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தாது

இ - ள். எனது பயனற்றயாக்கை அருளால் அறத்தைப்பூண்டோனுடைய திருமேனிப்பொருட்டுப் பூமியிற்பொருந்தினல்லது பிறிதொன்றற்குப் பொருந்தா தென்றாரென்க.

அருளறம் - உம்மைத்தொகையுமாம்.

௨௦௨-௨௦௩. அருக ரறவ னறிவோற் கல்லதெ

னிருகையுங் கூடி யொருவழிக் குவியா

இ - ள். எனது இருகையும் அருகர்க்கு அறத்தைக்கூறுவோனாகிய அறிவன், பொருட்டு என்சிரத்தின்மிசையே குவியினல்லது பிறிதொரு தேவர்பொருட்டுக் குவியாவென்றுரென்க.

அருகர் - இருடிகள்.

உ0ச-உ0ரு. மலர்மிசை நடந்த மலரடி யல்லதென்
றலைமிசை யுசசி தானணிப் பொறாஅது

இ - ள். எனது தலையினுச்சியும் பூவின்மீதேநடந்த மலரடியாகிய அணியை யணியப் பொறுப்பினல்லது பிறிதொன்றனையும் அணியப் பொறாதென்றுரென்க.

உ0சு-உ0எ. இறுதியி லின்பத் திறைமொழி யல்லது
மறுதர வோதியென் மனம்புடை பெயராது

இ - ள். என்மனமும் ஈறிவின்பமாகிய அநந்தசுகத்தையுடைய இறைவனருளிச்செய்த ஆகமமாகியமொழியை உருவேற ஓதிப் புடைபெயரினல்லது பிறிதொருமொழியையோதிப் புடைபெயராதென்றுரென்க.

மறுதர - மீளவும்.



உ0அ - உகக. என்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தரமாறுப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து

இ - ள். தம்மையைத் தலைமேற்கொண்டுநின்ற, கவுந்தியடிகள், திறவா; நவ்லாது; காணு; பொருந்தாது; குவியா; பொருது; பெயராதென்றுகொண்டு அவன்புகழ்மொழிகளை ஏத்தக்கேட்டு அதற்குப் பொருந்தியசாரணர் அவ்விடத்திடப்பட்ட சிலாவட்டத்தினின்றுமெழுந்து அதற்கு ஒருமுழவுயரம் மேலாகின்று பிறப்பைத்தரும்பாசம் கவுந்திக்குக் கெடுவதாகவென்றுகூறி அந்தரவழியாக விரைந்துசெல்கின்றவரைநோக்கித் தொழுது பாசங்கள் அறுகவென்று பணிந்தனராய்ப் போந்தென்க.

உகச - உகஅ. காரணி பூம்பொழிற் காவிரிப் பேரியாற்று
நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியுந்
தீதுதீர் நியமத் தென்கரை யெய்திப்
போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழி
லிருந்துழி

இ - ள். முகிலையணிந்த பொழிலையுடைய காவிரியாகிய பெரியயாற்றிற்கு மாதரும் கணவனும் கவுந்தியடிகளும் பள்ளியோடத்தேறிப்போய்த் தென்கரையைச்சென்றெய்திப் போதுகள் சூழ்ந்துகிடக்கின்றதோர் பொலிவினையுடைய பொழிலிடத்தேசென்றிருந்தபொழுதிலென்க.

உகக - உஉ0. வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
கொங்கலர் பூம்பொழிற் குறுகினர்
சென்றோர்

இ - ள். *இடங்கழிகாமத்தளாகிய குண்டக்கணிகையொருத்தி ஒருவனோடுங்கூடி இவர்களிருக்கின்ற மணம்பரந்ததோர் பொழிலிடத்தே அணுகினராய்ச் சென்றவரென்க.

வம்பப்பரத்தை - புதிய பரத்தைத்தன்மையையுடையாள்; குண்டமென்றபடி. இனி மனவெழுச்சியால் தோன்றினபடி

சொல்வித்திரியும் பரத்தையென்றுமாம். வறுமொழியாளன் - பயனில்சொல்லாளன்; விடனென்றபடி. உ௨க - ௨௨௨. காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ரரெனக் கேட்டீங் கறிகுவ மென்றே
இ - ள். இவ்விடத்தவந்திருக்கின்ற காமனையும் இரதியையுமொக்குமிவர்களை யாரென்றுகேட்டு அறியக்கடவோமென்று சொல்லியென்க.

---

* இடங்கழிகாமம் - மிக்ககாமம்; "இடங்கழி காமமொ டடங்கா னாகி யுடம்போ டென்ற னுள்ளகம் புகுந்தென், னெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி" என்றார் மணிமேகலையிலும்; கஅ - வது உதயதுமரன் அம்பலம்புக்ககாதை.

௨௨௦: தோல். (மூத் திரவியுத்தி,
ப். 21

க௦.—நாடுகாண்காதை. உ௫௧

இனி இவ்விடத்தவந்தவிவர் காமனும் தேவியுமே; அல்லராயின், யாரெனக் கேட்டறிகுவமென்றாரெனினுமமையும். இப்பொருட்குப் போலி ஒப்பில்போலி. ஈங்கிவர், ஈங்கு - இவ்விடத்து. கேட்டீங்கு, ஈங்கு - இப்பொழுது.
௨௨௩ - ௨௨௪. நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருடை
யுற்று வழிப்பட்டோ ராரென வினவ
இ - ள். *உவாமுதலிய விரதங்களிற் பட்டினிவிட்டுண்டலான் மெலிந்த

யாக்கையையும் நண்ணிய தவத்தையுமுடையீர், நம்மொடுகூடி வழிவந்தவிவர்
யார்தானென்று வினவவென்க.

ஆற்றுவழிப்பட்டோர் - வழியிற் கூடிவந்தோர்.

உஉச - உஉரு. என், மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென

இ - ள். அவ்விருவரும் இவ்விருவரையும் வினவுதல்கண்ட கவுந்தியடிகள்
இவர் என்மக்கள்காணும்; நீர்சொன்ன காமனும் தேவியுமல்லர்; மானிடயாக்கை
யர்; வழிவருதலால் வருத்தத்தால் மிகவும் வருந்தினர்; அவருழைச்செல்லாதே
விடப்போமினென்றாரென்க.

†பரி - மிகுதி; ஒருசொல்லுமாம்.

உஉஎ - உஉஅ. உடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரென

இ - ள். நூல்களையுங்கற்று அதன்பயனையுமறிந்தவரே, ஒருவயிற்றுட்பிறந்தோர்
கொழுநனும் மனைவியுமாய்க் கூடிவாழக்கடவதென்று நீர்கற்றநூல்களிற் சொல்
லிக்கிடப்பதுமுண்டோ? உண்டாகிற் சொல்லுமென்றாரென்க.

கற்றறிந்தீரென்றது இகழ்ச்சி. இவ்வாறே நீர் கற்றனவுமென்பதாம்.

உஉகூ - உ௩0. நீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
வெள்ளுநர் போலுமிவ ரென்பூங்

கோதையை

முள்ளுடைக் காட்டின் முதுநரி

யாகெனக்

கவுந்தி யிட்ட தவந்தரு சாபங்
கட்டிய தாதலிற பட்டதை யறியார்
குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினு
மறியா மையென் றறியல வேண்டுஞ்

---

* "ஒவா திரண்டுவெவு மட்டமியும் பட்டினிவிட்டு" என்றூர் சிந்தாமணி
யிலும் ; கேயசரியாரிலம்பகம், கூகூ.

† "பரிபுலம் பினனிவன், றுனே தமியன் வந்தனன்" என்றூர் மணிமேகலை
யிலும் ; கரு - வது ஆதிரைபிச்சையிட்டகாதை.



செய்தவத் தீர்நுந் திருமுன்

பிழைத்தோர்க்

குய்திக் கால முணாயி ரோவென

இ - ள். இங்ஙனம் இவரிகழ்ந்தமொழியைக் கேட்டலாற் செவிலை யப் புதைத் துக் க ண்ணிநடுங்க, என்பூங்கோதைபோல்வாளே இவரிகழ்ந்தனர் , இவ்விகழ்ச்சி யால்

துடக்குமுட்களையுடையகாட்டில் நுழைந்துதிரியும் முதுநரியாகக்கடவரெனக் கவுந்தியடிகளிட்டசாபம் தவத்தின்விளைவாகிய சாபமாதலால் அவரைச் சென்று பூண்டதாதலின், அங்ஙனம் விளைந்தபடியையறியாராகிய கோதையும் நம்பியும் குறியநரியினது நெடியகுரலாகக்கூவும் விளியைக்கேட்டு நடுங்கிச்சென்று ஒழுக்க நெறியினின்றும் நீங்கியோர் நீர்மையல்லாதனவற்றைச்சொல்லினும் இஃது அவர் அறிவின்மையாற் கூறியதன்றேவென்று உயர்ந்தோர் தமதறிவான் உணரவேண்டும்; செய்தவத்தீர் உம்முடைய திருமுன் பிழைத்த இவர்க்கு இனிச் சாபநீங்கி உய்தலுடைத்தாங்காலத்தை உரைத்தருளீரென்றுகூறவென்க.

**போலும்** - ஒப்பில்போலி. முதுநரி - ஓரி. நடுங்கியென்றார்; தம்பொருட் டாகவிளைதலின், ஓகாரம் - இசைநிறை. அடிகள் மனத்தானினைத்து இட்டசாபமாதலாற் பட்டதையறியாரென்றார். இங்ஙனம் அறியாது அவர்கள்சொன்ன இகழ்ச்சியாலும் இதற்கு இவரல்லது வேறு சபிக்கவரியாரின்மையானும் உய்திக் காலமுரையீரென்றார். விளி - ஓரிக்குரல். 'நெறியி னீங்கியோர் நீரல கூறினு, மறியா மையென் றறியல் வேண்டும்' என்னுந்துணையும் அவருட்கோள். பின் னதை அடிகட்குக் கூறினார்.

உசக - உசரு. அறியா மையினின் றிழிபிறப் புற்றோ
ருறையூர் நொச்சி யொருபுடை
யொதுங்கிப்

பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து

இ - ள். தமது முப்பொறிகளான்வரும் துன்பமென்பதனை அறிந்துகூறுமை யானே இன்று இழிபிறப்பையுற்றவிவர் உறையூர் மதிற்புறமாகிய காவற்காட்டிற் றிரிந்து பன்னிரண்டுதிங்கள்

இங்ஙனந்தன்பமுழந்தபின்னர் முன்னைப்பிறப்பைப் பெறுவாராகவெனச் சாபவிடைசெய்தென்க.

இன்று இழிபிறப்புற்றோரென்றது நெடுங்காலம் தவஞ்செய்துபெற்ற மக்கட் பிறப்பை ஒருவார்த்தையினிழந்து இழிபிறப்புற்றாரென்றவாறு. எனவே *யாகாவா ராயினும் காகாத்தல்வேண்டுமென்பதாயிற்று; "ஆக்கம் ... .. ... பென்னுமாறே" என்பதூஉமாயிற்று. நொச்சி யொருபுடையென்றது அரண்வேண்டாமை விளக் கிற்று; †"நொச்சி வேலித் தித்த னுறந்தை" என்றதுமது. இழிபிறப்பு - விலங் கின்பிறப்பு. முன்னையுருவம் - வம்பப்பரத்தையும் வறுமொழியாளனுமெனவுமாம்.

---

* திருக்குறள், அடக்கமுடைமை, எ.

† அகநானூறு, மணிமிடைபவளம் கஉக : "இரும்பிழி மகாரிவ் வழுங்கன் மூதூர், விழவின் றாயினுந் துஞ்சா தாகு, மல்ல லாவண மறுகுடன் மடி யின், வல் லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள், பிணிகோ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற்,

## கo.—நாடுகாண்காதை.

உருங.

உசரு-உசஅ. தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனு
முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென

இ - ள். தவத்தான்மிக்க சிறப்பையுடைய கவுந்தியடிகளும் தேவியும் கண வனும் முறம்போலுஞ்செவியையுடைய யானையைச் சமரிடத்துக்கெடுத்த புறத்தே சிறையையுடைய

கோழியென்னுநகரின்கண்ணே விருப்பத்தோடு புக்காரென்க.

வாரணம் - கோழியூர்; ஆவது உறையூர். முற்காலத்து ஓர்கோழி யானையைப் போர்தொலைத்தலான் அந்நிலத்திற்செய்த நகர்க்குக் கோழியென்பது பெயராயிற்று. அந்நகர் காண்கின்றபொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனாற் புறம்பே சிறையையுடைய கோழியென்றுயிற்றென்பாருமுளர். அற்றன்று; புறஞ்சிறைவாரணமென்பது சிலேடை: புறத்தே சிறையையுடையகோழியும், புறஞ் சேரியையுடைய உறையூரும்; *"புறஞ்சிறைப் பொழிலும்" என்ப மேலுமாகலின். புறஞ்சிறைவாரணம் - கோழியூரெனக்கொள்க.

பணிந்தனர்போந்து எய்தி இருந்துழிச் சென்றோர் வினவப் பரிபுலம்பினரெனக் கடவதுமுண்டோ கற்றறிந்தீரெனச் செவியகம்புதைத்து நடுங்க முதுநரியாகெனக் கட்டியதாகலின், உரையீரோவெனப் பெறுக ஈங்கிவரெனச் சாபவிடை செய்து கவுந்தியும் தேவியும் கணவனும் புரிந்துபுக்காரென்க.

இஃது எல்லாவடியுந் தம்முளொத்துமுடிதலின் நிலைமண்டிலவாசிரியப்பா.

பருந்து நிழலுமென ...
...அடியார்க்குநல்லானென்பான்.

ஒருந்தமிழ் ... ... ...
...நிரம்பையர்காவலனே.

காற்றை ... ... ... ...சொல்வித்ததே.

## நாடுகாண்காதை முற்றிற்று.

---

---

றுஞ்சாக்
கண்ணர் காவலர் கடுகுவ, ரிலங்குவே விளைஞர் துஞ்சின்

வையெயிற்று, வலஞ்சுரித் தோகை ஞாளி மகிழு, மாவவாய் ஞமலி மகிழாது மடியிற், பகலுறழ் நிலவுக் கான்று விசும்பி, னகல்வாய் மண்டில நின்றுவிரி யும்மே, திங்கள்கல் சேர்பு கனையிருண் மடியி, னில்லெலி வல்சி வல்வாய்க் கூகை, கழுதுவழங் கியாமத் தழி தகக் குழறும், வளைக்கட் சேவல் வாளாது மடியின், மனைச்செறி கோழி மாண்குரா லியம்பு, மெல்லா மடிந்த காலை யொருநா, ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரே, யதனு, லரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந், தாதி போகிய பாய்பரி நன்மா, னெச்சி வேலித் தித்த னுறந்தைந், கன்முதிர் புறங்காட் டன்ன, பன்முட் டினதாற் ரோழி நங் களவே" எ - து. தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழிக்குச் சொல்லுவா ளாய்த் தலைமகள் சொல்லியது ; பரணர்.

* ஊர்காண்காதை, க.



## கட்டுரை.

முடியுடை வேந்தர் மூவ ருள்ளுந்
தொடிவிளங்கு தடக்கைச சோழர்குலத்

துதித்தோ

ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
௫ விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தந்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்புங்
பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலு

மரங்கு மாடலுந் தூக்கும் வரியும்
பரந்திசை யெய்திய பாரதி விருத்தியுந்
திணைநிலை வரியு மிணைநிலை வரியு
மணைவுறக் கிடந்த யாழின் றொகுதியு
மீரேழ் சகோடமு மிடநிலைப் பாலையுந்
தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணு
மூரகத் தேரு மொளியுடைப் பாணியு
மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் தனிக்கோ ணிலைமையு
மொரு பரிசா நோக்கிக் கிடந்த
புகார்காண்டம் முற்றிற்று.

[இதன்பொருள்.]

௧ - ௨. முடியுடைவேந்தர்மூவ ருள்ளுந் தொடிவிளங்கு தடங்கைச் சோழர்குலத்துதித்தோர் — மூவேந்தருள்ளும் சோழர்குலத்து உதித்தோருடைய; மூவர் — சோழர் பாண்டியர் சேரர்.

௩. அறன் — "அறனோம்படை" என்றது; [இந்திரவிழவூரெடுத்தகாதை ௧௭௩.] தருமாசனமென்பாருமுளர்.

௩. மறன் — "இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக், கொடுவரி யேற்றி" என்றது. [இந்திரவிழவூரெடுத்தகாதை, ௧௭ - ௧௮.]

௩. ஆற்றல் — "கோநகர் காத்த" என்றது. [கடலாடுகாதை, ௮.]

௪. மூதூர்ப்பண்பு மேம்படுதல் — "புகாரேயாயினும்" என்றது. [மங்கலவாழ்த்துப்பாடல்.]

ரு. விழவுமலிசிறப்பு—"விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டி" என்றது [இந்திரவிழவூரெடுத்தகாதை, கஅ.]

## கO. நாடுகாண்காதை. 

ரு. விண்ணவர்வரவு—"அந்தரத் துள்ளோ ரறியா மரபின், வந்து காண் குறூஉம் வானவன் விழவு" என்றது. [கடலாடுகாதை, எஉ - எகூ.]

எ. குடி—"இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு, விளைப்போர்" என்றது. [நாடுகாண்காதை, கசகூ - கருO.]

முழவிடை

ஏ. கூழின்பெருக்கம்—"குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு, கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரிய" என்றது. [நாடுகாண்காதை, கஉகூ-கஉச.]

எ - அ. அவர்தம் தெய்வக்காவிரித் தீதுதீர்சிறப்பு—"கரியவன் புகையினும் புகைக்கொடிதோன்றினும், விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்,............காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை, யோவிறந் தொலிக்கும்" என்றது. [நாடுகாண்காதை, கOஉ - கOகூ.]

கூ. பொய்யா வானம் புதுப்புனல் பொழிதல்—"மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின் மறையோர்" என்றது. [நாடுகாண்காதை, கசகூ - கசச.]

கO. அரங்கு—"நூனெறி மரபி னரங்கம்" என்றதும், [அரங்கேற்று காதை, கூகூ.] "தோற்றிய வரங்கில்" என்றதும். [அரங்கேற்றுகாதை, கOகூ.]

க0. ஆடல்—" ஆடலும்" என்றது. [அரங்கேற்றுகாதை, கக.]

க0. தூக்கு—" தூக்கும்" என்றது. [அரங்கேற்றுகாதை, கக.]

க0. வரி—கண்கூடுவரிமுதல் எடுத்துக்கோள்வரியிறுதியாகவுள்ள எட்டுவரி யும். [வேனிற்காதை, எச - க0அ.]

கக. பாரதி விருத்தி—நாடகவுறுப்பாகிய பாரதிவிருத்தி; அது கடலாடு காதையிற் கூறப்பட்டுள்ள பதினோராடலும். [கடலாடுகாதை, ருக - சுரு.]

கஉ. திணைநிலைவரி—" கடல்புக்கு" [கானல்வரி, கஎ.] என்னுங்கவிமுதல் " சொன்மடவன்னம்" [கானல்வரி, உரு.] என்பதிறுதியாகவுள்ள ஏழும்.

கஉ. இணைநிலைவரி—சார்த்துவரிமுதலாகிய பலவரிகளால்வருவன. [கானல்வரியிற்காண்க.]

கரு. யாழின்றொகுதி—" சித்திரப்பட" முதல், " பட்டடை" ஈறுக வுள்ளன. [கானல்வரி, க.]

கச. ஈரேழ்சகோடம்—"ஈரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வி" என்றது. [அரங்கேற்றுகாதை, எ0.]

கச. இடநிலைப்பாலை—" குரல்வா யிளிவாய்க் கேட்டனள்" என்ற [வேனிற்காதை, ருடு.]

கடு. தாரத்தாக்கம் — " குரலீருகவும்" என்பதனால், தாரங்குர விளரிப்பாலைபிறக்குங்கால் தாரம் ஆக்கம்பெறுதல்காண்க. [வேனிற்காதை

கடு. தான்றெரிபண்—அகநிலைமருதம், புறநிலைமருதம்,

அரு பெருகியன்மருதமென்னும் பண் நான்கும் தெரியுந்திறன்.* [ ருகக - சo.]



கரு. ஊர்கந்தேர்—"மகர வாசிகைத், தோரண நிலைஇய தோமறு பசும் பொற், பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை, பாவை விளக்குப் பசும்பொற் படாகை, தூமயிர்க் கவரி சுந்தரச் சுண்ணத்து, மேவிய கொள்கை வீதி" என்றது. [இந்திரவிழவூரெடுத்தகாதை, கடுக - கடுசு.]

கசு. ஒளியுடைப்பாணி — "சீரியல் பொலிய" என்றது. [அரங்கேற்றுகாதை, கருடு.]

கஎ. என்றிவையனைத்தும்—என்று சொல்லப்பட்ட இவைகள் யாவும்,

கஎ - கஅ. பிற பொருள் வைப்போடு ஒன்றித் தோன்றும் தனிக் கோள் நிலைமையும்—சொல்லாதொழிந்த பிறபொருள்கள்வைத்தவைப்போடே பொருந்தித்தோன்றும் ஒப்பற்ற முறைமைநிலைபெறலும்,

ககூ - உo. ஒருபரிசா நோக்கிக்கிடந்த புகார்காண்டம் முற்றிற்று— ஒருபடிப்பட நோக்கிக்கிடந்த புகார்காண்டம் முற்றியது.

## புகார்காண்டம் முற்றிற்று.

---

காலை யருப்பி மலருங் கதிரவனு
மாலை மதியமும்போல் வாழியரோ - வேலை யகழா லமைந்த

